# கல்கி

KALKI 6.12.98 ரூ. 4.50

இசை விழ
சிறப்பிதழ்

இந்த வருட
ஸ்பெஷல்:

## தாலாட்டுக் கச்சேரிகள்!



வித்வான்
களே
உஷார்;
வாசகர்
களே
தயார்!
— புய
லாக
வந்து
விட்டார்
தும்புரு!



# ஓசைப் பிரச்னை வேண்டாம்!

• நித்யஸ்ரீ

பிரமாதமான நாலு பக்க வழவழ அழைப்பிதழ். முதல் பக்கத்தில் கருணாநிதியும் மூப்பனாரும். (தியாகராஜரையும் தீட்சிதரையும் போட்டால் யார் வருவார்கள் கூட்டத்துக்கு?) திறந்ததும் விழாக் குழுவில் விழுந்த உறுப்பினர்களின் பட்டியல். பிறகு தலைவர், முன்னுரைப்பவர், வாழ்த்துரைப்போர் பட்டியல். அதற்கும் பிறகு நிகழ்ச்சி நிரல்.

பெரிய மனசு பண்ணி கடைசிப் பக்கத்தில் ராஜ மாணிக்கம் பிள்ளையின் படத்தை ஒருவழியாகப் பிரகரித்திருந்தார்கள்.

கும்பகோணம் ராஜ மாணிக்கம் பிள்ளை ரொம்பப் பெரிய ஆள்தான். அந்தக் காலத்தில், பக்கவாத்தியமாக வயலின் வாசிப்பதற்கான இலக்கணங்களை வகுத்தவரே இவர்தான் என்று சொல்லுவார்கள். சங்கீத கலாநிதி. இசைப் பேரறிஞர். இன்னும் ஒரு நடுத்தரக் குடும்பத்து மளிகை லிஸ்ட் நீளத்துக்குப் பட்டங்கள் வாங்கியவர். அரியக்குடி, செம்மங்குடி தொடங்கி அவர் பக்கவாத்தியம் வாசிக்காத மேதைகளே கிடையாது. அதனால் என்ன? செத்துப் போனதும் திவசம்



தும்புரு

பண்ணிய கையோடு ஆசாமியை மறந்து விடுவதுதானே நடைமுறை? அப்படியே மறந்தாயிற்று.

எத்தனையோ வருஷங்கள். 'அட, நம் தாத்தா இருந்திருந்தால் இது நூறாவது வருஷமல்லவா?' என்கிற ஞாபகம் ஏற்பட்டது பேரன், நடிகர் தியாகுவுக்கு.

விளைவு... வயலினுக்குத் திருவிழா என்று அரசியல் தலைவர்கள் படத்துடன் ஆரம்பித்த அந்த அழைப்பிதழ்!

**வா**க்காளர் பட்டியல் மாதிரி நீண்டு கிடக்கும் பேச்சாளர் பட்டியலில் இருக்கிறவர்கள் எல்லோரும் வரிசையாக வந்து கலைஞர் அவர்களே, மூப்பனார் அவர்களே, அமைச்சர் அவர்களே, அவர் அவர்களே, இவர் அவர்களே, சுவர் அவர்களே, சுவருக்குப் பின்னாலிருக்கும் எவர் எவரோ அவர்களே என்று கதறக் கதறக் காதைப் பிடித்துத் திருகுவதில் பிராணனே போய்விடுகிறது. சகித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தால் சில ரத்தினங்கள் அகப்படாமலில்லை.

செம்மங்குடி சொன்னார் :

ஒரு கச்சேரி. செம்மங்குடிக்கு வயலின் வாசிக்கவிருந்த சௌடையா வழக்கம் போல் நேரத்துக்கு வரவில்லை. பெரிய கூட்டம். நேரம் ஆக, சலசலப்பு தொடங்க, அருகிலிருந்த ராஜமாணிக்கம் பிள்ளையை 'சப்ஸ்டிட்யூட்' வாசிக்கச் சொல்லிக் கேட்டார் செம்மங்குடி. ஒரு மறுப்பு? முகச் சுளிப்பு? பிள்ளைவாள் மேதை மட்டுமல்ல; உயர்ந்த மனுஷனும் கூட!

வாசிக்க உட்கார்ந்து விட்டார். கச்சேரி தொடங்கி, ஒரு மணி நேரம் ஆனபின் வருகிறார் சௌடையா. அவரைப் பார்த்ததுதான் தாமதம். உடனே தாம் வாசிப்பதை நிறுத்திவிட்டு எழுந்து போய் அவருக்கு மாலை போட்டு வரவேற்று அழைத்து வந்து உட்காரச் செய்து, வாசிக்கச் சொல்லி, தாம் எதிரே அமர்ந்து ரசித்தாராம் ராஜமாணிக்கம் பிள்ளை!

சிலிர்த்து விட்டது, செம்மங்குடி பேசியபோது. ஒரு திருஷ்டி வேண்டாமா? அமைச்சர் கோ. சி. மணி வந்தார்.

கோ. சி. மணிக்கும் ராஜமாணிக்கம் பிள்ளைக்கும் என்ன சம்பந்தம் என்றால், ரெண்டு பேரும் கும்பகோணத்துக்காரர்கள். எப்பவோ ஒருதரம் இவர் வோட்டுக் கேட்டுப் பிள்ளை வீட்டுக்குப் போயிருக்கிறார்.



• விழா மேடை

தானைத் தலைவர் மேடையில் இருக்கையில் தாம் அதிகம் பேசலாகாது என்று சூழ்ந்து கொண்டவருக்கு தலைவரைப் புகழ, தக்கதொரு மேடை அகப்பட்டதே லாபம்.

லால்குடிக்காரரும் செம்மங்குடிக்காரரும் இருந்தார்களோ, ராஜமாணிக்கம் பிள்ளை தப்பித்தார்.

**தூ**ர்தர்ஷன் நடராஜன், மூப்பனார், கலைஞர், பட்டம்மாள் பேசியதையெல்லாம் பேப்பரில் படித்திருப்பீர்கள்.

பேப்பர்காரர்களெல்லாம் எழுந்து போய் விட்ட நித்யஸ்ரீ மகாதேவன் கச்சேரி பற்றிச் சொல்கிறேன்.

'ஏதாவது புதுமை' என்கிற ஜுரம் இன்று அநேகமாக எல்லோருக்கும் பிடித்துக் கொண்டிருக்கிறது. நித்யஸ்ரீக்குக் கொஞ்சம் அது கூடுதல் வேகத்தில் இருப்பதால் வாய்ப்பாட்டுக்குப் பக்கவாத்தியமாகத் தவில்!

வழக்கமான ம்ருதங்கம், கடம், மோர்ஸிங் தவிர ஸ்பெஷலாக ஒரு தவில் - அதுவும் ஹரித்வாரமங்கலம் பழனி வேலு.

ஒன்று சொல்ல வேண்டும். ஒரு தவில் அல்ல; தமிழ்நாட்டிலுள்ள அத்தனை தவில் வித்வான்களையும் அழைத்து வந்து ஒரு போக்ரன் வெடித்தாலும் அதையும் கிழித்துக் கொண்டு சீறிப்பாயும் குரல் நித்யஸ்ரீயுடையது. சாதாரணமாக எல்லோரும் மூச்சைப் பிடித்துக் கொண்டு போகும் உச்சஸ்தாயிதான் இவருக்குக் கீழ் சட்ஜமமாக இருக்கிறது.

இந்த நிலையில் தவிலுடன் வாய்ப் பாட்டு என்பது அவரளவில் வெற்றிகரமாகச் சாதிக்கக் கூடியதாக இருந்தாலும், கேட்பவன் கதியைப் பற்றி யார் கவலைப்படுவது? செவிப்பறையல்ல; செவியே கிழியும் ரகளை.





• ஏ. கே. பழனிவேலு

வழக்கம் போல் ஒரு கணபதி வந்தனம், தொட்டுக் கொள்ள மலயமாருதம், கட்டிக் கொள்ள கீரவாணி என்று தொடங்கினாலும் கச்சேரி என்னவோ துக்கடாக் கச்சேரி தான்.

விஸ்தாரமான ஆலாபனை, நிரவல்களைத் தவிர்த்து விட்டு நிறையப் பாடல்களை அள்ளித் தெளிப்பவருக்கு ஏனோ ஸ்வரம் போடுவதில் மட்டும் மாளாக் காதல் நோய்.

பாட்டுக்குப் பாட்டு ஸ்வரம் போடுவது, ஜனரஞ்சகத்துக்காக ஜாலவிளையாட்டுக் காட்டுவதெல்லாம் சுத்த சங்கீதத்தின் ஜென்ம சத்ரு. ஆலாபனையோ, நிரவலோ, ஸ்வரப் பிரஸ்தாரமோ - ஒரு ராகத்தின் அழகைக் காட்டுவதற்குத்தானே தவிர, சும்மா ஷட்டில் ஆடிப் பார்ப்பதற்கல்ல.

இதே சூட்டில் இன்னொன்றையும் சொல்லிவிட வேண்டும்.

நித்யஸ்ரீக்கு அரசியல்வாதி ஆகும் ஆசை இருந்தால் மெரினாக் கரையில் மேடை போட்டுக் கொள்ளட்டும். கர்நாடக இசை மேடையில் ஊழல் கொண்டு வர வேண்டாம்.

அன்று அவர் பாடிய கீரவாணியைச் சொல்கிறேன்.

ஆலாபனையில் மேல் ஸ்தாயிக்குப் போகும்போதெல்லாம் கமகம் கைகொடுக்காமல் லைட் ம்யூஸிக் பாணியைக் கலப்பது சுத்தமான பசும் நெய்யில் வனஸ்பதி சேர்க்கிற adulteration! அன்றைய கச்சேரி நித்யஸ்ரீயின் பாரம்பரியத்துக்குப் பெருமை சேர்க்கவுமில்லை; சங்கீத பாரம்பரியத்தை ஆராதித்த ராஜமாணிக்கம் பிள்ளைக்கு ஏற்ற காணிக்கையும் இல்லை.

சொல்ல வேண்டியதைச் சொல்லியாகி விட்டது. இனி அவர் இஷ்டம்.

அன்றைய நிகழ்ச்சியில் அறுபத்தொன்பது சதவீதத்துக்கும் மேலாகத் தமிழ்ப் பாடல்கள். ஆறுதலான ஒரே விஷயம் அது! அற்புதமான விஷயம், பழனிவேலுவின் 'தனி'. தனியே சொல்ல என்ன இருக்கிறது? லய ராட்சஸன்!

தாளவாத்திய களேபரம் ஒரு பக்கம். நித்யஸ்ரீயின் உச்சஸ்தாயி உற்சவம் ஒரு பக்கம். நடுவே சிக்கிக் கொண்டு காணாமல் போன இதர பக்கவாத்தியக் காரர்களை அடுத்த கச்சேரியில்தான் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்.

நித்யஸ்ரீக்கு ஒரே ஒரு எச்சரிக்கை. சினிமா வேறு; கச்சேரி மேடை வேறு. விஷப்பரீட்சை வேண்டாம்.

படங்கள் : ஸ்ரீஹரி

இசையோடு துளிக்கூட தொடர்பில்லாதவர்களைத் தலைமை தாங்கவோ உரையாற்றவோ அழைக்க வேண்டிய கட்டாயம் சபாக்களுக்கு. அந்த 'விருந்தினர்கள்' பேசுவது சில நேரங்களில் சிறந்த நகைச்சுவை இடைவேளையாகி விடுவதுண்டு. அப்படிப்பட்ட சில அனுபவங்களை இதோ தருகிறார்கள் சில வித்வான்கள்:



# உளறல் கச்சேரிகள்!

### வீணை காயத்ரி:

சுமார் மூன்று வருடங்களுக்கு முன் விஜயவாடாவில் என் நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கினார் ஒரு பிரபல தொழிலதிபர். ''இந்தப் பெண்மணி வெகு அழகாகத் தம்பூராவை வாசித்தார்'' என்றார். எல்லோருக்கும் கொஞ்சம் அதிர்ச்சி. என்றாலும் வி.ஐ.பி எதிரே பக்கென்று சிரித்து விட முடியுமா? தொடர்ந்து அவர் பேசிய பதினைந்து நிமிடங்களில் ''தம்புரா ஒரு தொன்மையான இசைக்கருவி. அதை இவர் கொஞ்சி விளையாடுகிறார்'' என்று இப்படி ஆறேழு முறையாவது 'தம்புரா' என்கிற வார்த்தையைப் பயன்படுத்தினார்! போதாக்குறைக்கு என்னை சியாமா சாஸ்திரிகளின் கொள்ளுப்பேத்தி என்று வேறு குறிப்பிட்டார். இதெல்லாம் போதாதென்று இரண்டாவது முறையாகக் குறிப்பிடும்போது சியாமா சாஸ்திரியை 'மிஸ்டர் சியாமா'என்றார்! வாழ்க்கைக்கு இது போன்ற நகைச்சுவைகளும் தேவைதானே!''

### சசிகிரண்:

ஒரு பாடகரைப் பாராட்ட வேண்டிய கட்டாயம் வந்து விட்டது. அந்த நிகழ்ச்சியில் பேச அழைக்கப்பட்ட வித்வானுக்கு. பாடகரைப் பாராட்ட மனமில்லாமல் அவரது ஊரைப் பற்றி மட்டுமே பேசிக் கொண்டிருந்தார். ''அந்த ஊர் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அந்த ஊர் கத்திரிக்காய் இருக்கே...ஆஹா!...'' இப்படி போயிற்று பேச்சு. வேடிக்கை என்னவென்றால் பாடகரின் ஊர் என்று இந்த வித்வான் நினைத்துப் பேசியது வேறொரு ஊர்!''



• சசிகிரண்



• வீணை காயத்ரி

## பாம்பே சிஸ்டர்ஸ் சரோஜா - லலிதா:

விஷய ஞானமே இல்லாதவர்களை விட அரைகுறை விஷய ஞானம் உள்ளவர்கள்தான் இப்படி அதிர்ச்சி கொடுத்திருக்கிறார்கள். சுமார் பத்து வருடங்களுக்கு முன் டெல்லியில் நடந்த கச்சேரியில் ஹேமவதி ராகத்தில் 'ஸ்ரீ காந்திமதி' பாடினோம். தொடர்ந்து பேசிய அந்தப் பெரிய மனிதர் "சிம்மேந்திர மத்யமத்தை இவர்கள் நன்றாகப் பாடினார்கள். ஆனால் நடுவில் கைசிக நிஷாதம் கலந்து விட்டதைச் சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன்" என்று ஒரு போடு போட்டார். (கைசிக நிஷாதம்தான் ஹேமவதி ராகத்துக்கானது). இன்னொரு கச்சேரியில் தேவகாந்தாரி ராகத்தில் "கருணா சமுத்ர ராமா" பாடலைப் பாடி முடித்தோம். அப்போது கூட்டத்திலிருந்து ஒருவர் எழுந்து 'தேவ காந்தாரிணி(!) ராகத்தில் நீங்கள் பிரமாதமாகப் பாடுவீர்களே. அதிலே ஒரு பாட்டை- க்ஷீர ஸாகர பாட்டை அந்த ராகத்திலே பாடுங்களேன்" என்றார்!



• பாம்பே சிஸ்டர்ஸ்

• வேதவல்லி

## வேதவல்லி:

உள்ளூர் சபாவில் நடந்த பாராட்டு விழா அது. முதலில் பேசியவர் என்னை 'டாக்டர் வேதவல்லி' என்று குறிப்பிட, அடுத்துப் பேசியவர்களும் அப்படியே குறிப்பிடத் தொடங்கினார்கள். எனக்குச் சங்கடமாக இருந்தது. பிறகு பேசும் போது "டாக்டர் இருக்கட்டும், நான் கம்பவுண்டர்கூட இல்லை" என்று சொன்னேன். சென்னை தொலைக்காட்சியின் முன்னாள் இயக்குனரான நடாராஜன்கூட "எல்லோரும் அன்பா டாக்டர் பட்டம் வழங்கறாங்க உங்களுக்கு. ஏன் வேணாங்கறீங்க?" என்றார் சிரித்தபடி.

ஆந்திராவில் நடைபெற்ற ஒரு கச்சேரியின் போது "ராகம் தானம் பல்லவி" பாட வேண்டும் என்று ஒரு வி.ஐ.பி. சீட்டு அனுப்பினார். சந்தோஷமாக ராகம் தானம் பல்லவி பாடி, ராகமாலிகை ஸ்வரம் பாடி முடித்தேன். கச்சேரி நிறைவு பெற்ற பிறகு சீட்டு அனுப்பியவர் என்னிடம் வந்து வருத்தத்துடன் "நான் விருப்பப் பட்டதைப் பாடவேயில்லையே?" என்றார். பிறகுதான் தெரிந்தது சங்கராபரணம் படத்தில், 'ராகம் தானம் பல்லவி' என்று தொடங்கும் பாடலைத்தான் அவர் கேட்க ஆசைப்பட்டார் என்பது. என்ன செய்ய. சினிமா ஞானம் எனக்குப் போதாது!

— ஜி.எஸ்.எஸ்.

‘**கா**கம் கரைவதைக் குயில் பாட்டாக மாற்றிக் காட்ட முடியுமா?’ சவாலை ஏற்கத் தயாராகியிருப்பவர் அனந்த் வைத்தியநாதன். டி.எம். தியாகராஜனிடம் கர்நாடக இசைப் பயிற்சியை ஆரம்பித்து, இடையே ஹிந்துஸ்தானிக்குத் தாவி, சங்கீத் ரிஸர்ச் அகாதமியில் குரல் வளத் துறையில் (voice culture) பதினாறு ஆண்டுக் காலம் ஆராய்ச்சி செய்தவர். தம் குரலிலேயே கொஞ்சம் வெண்ணெய், கொஞ்சம் நெய் வைத்திருக்கிறார். பேட்டியினிடையே அவ்வப்போது, இவர் பாடும்போதெல்லாம், அது உருகி வழிகிறது; பெங்காலிப் படமான ‘யுகாந்தர்’, கன்னடப் படமான (நேஷனல் அவார்டு பெற்றது) ஹரிகேசுரி போன்றவற்றில் நடித்த குரல்! இன்று HMVயில் ‘மார்கெட்டிங்’கில் பிஸியாக இருக்கும் இவரிடம், குரல் வளத்தைப் பற்றி நாம் கேட்டறிந்தவை—

*கே: குரலை வளப்படுத்துதல்... Voice culture... என்றால்?*

ப: ஒவ்வொரு குரலும் ஒரு இசைக் கருவியைப் போன்றது. எப்படி இசைக் கருவியின் ஒவ்வொரு பாகமும் ஒரு குறிப்பிட்ட ஒலியை எழுப்புவதற்கென வடிவமைக்கப்பட்டிருக்கிறதோ, அப்படியே குரலும் சிலபல ஒலிகளுக்குப் பிறப்பிடமானது. நமக்குத் தேவையான ஒலியை வரவழைக்க, ஒரு இசைக் கருவியை முறையாக மீட்டி இசைக்கிறோம். அதே மாதிரி நம் குரலிலும் நம் எதிர்பார்ப்புகளுக்கு ஆட்படும் இனிமைகளைத் தேடி உயிர்ப்பித்தலே, வளப்படுத்துதலாகும். விளையாட்டு வீரர்களின் உடல்கள் பொதுவாக ஆரோக்கியமுடையவையே; ஆனால் ஒரு குறிப்பிட்ட விளையாட்டில் பிரகாசிக்க, அந்த விளையாட்டுக்குத் தேவையான பயிற்சி முறைகளைத் தேர்ந்தெடுத்து, அந்த வீரருக்குப் பயிற்றுவித்து, அவரை சோபிக்க வைக்கிறோமல்லவா? அதுதான் வளப்படுத்துதல் என்பது. சுருக்கமாகச் சொன்னால் அது ஒரு இலக்கு நோக்கிய பயணம் போன்றது!

*கே: அட்டா! குரல் வளம் இயற்கையாகவே அமையும் ஒன்று என்றல்லவா எண்ணிக் கொண்டிருந்தோம்?...*

ப: ஓரளவு உண்மைதான்; ஒரு குரலின் வளத்துக்கு, அதன் சுற்றுச் சூழல், கலாசாரம் போன்றவை பெரிதும் துணை புரிகின்றன. மலைப் பிரதேசங்களில் வாழ்வோரின் குரலில் இயல்பாகவே ஒலி அதிகமிருக்கும்; மைக்ரோஃபோன் கலாசாரத்துக்கு அடிமையாகிவிட்ட நகர மக்கள், குரலை அனாவசியமாக உயர்த்த மாட்டார்கள். இசையில் டெக்னாலஜி அவ்வளவாக முன்னேற்றமடையாதிருந்த காலத்தில், கத்திப்





* ஆனந்த் வைத்தியநாதன்

# “குரலும் ஓர்

பாடத் தெரிந்தவரைத் தான் உலகம் பாடகராக ஏற்றுக் கொண்டது. அந்தக் காலத்தில் பின்னணி பாடியவர்களின் குரல் ஓங்கி ஒலிக்கும்! ஆனால் இன்றோ, பூப்பூக்கும் ஓசையிலே இசை அரங்கேறிவிடுகிறது!

*கே: ‘வாய்ஸ் கல்சர்’ எங்கே தோன்றியது? இங்கே எப்படி அறிமுகமானது? இத்துறையில் இன்னும் பல பயிற்சியாளர்கள் உளரா?*

ப: முதலில் மேலை நாடுகளில்தான் பிரசித்தமாயிருந்தது; பேச்சுக் கலையை மேம்படுத்தத்தான் உபயோகப்படுத்தப்பட்டது. நாளடைவில்தான் இசைத் துறைக்கும் தாவியது. நாம் மூச்சு விடுவதற்கு உதவுகிற தசைநார்களின் இயக்கத்தின் அடிப்படையில் இந்தக் கலை மேலும் பண்படுத்தப்பட்டது. அப்படி பண்படுத்தப்பட்ட பிறகு கர்நாடக இசைத் துறைக்கும் பயன்பட ஆரம்பித்தது.

இந்தியாவுக்கு வந்து சில காலமாகிவிட்டது. கடந்த ஏழெட்டு வருடங்களாக நான் பயிற்சி அளித்து வருகிறேன்; பி.ஆர். தேவ்தர், ரானடே போன்றோர் வடக்கிலும், டி.வி. கோபாலகிருஷ்ணன் போன்றோர் தெற்கிலும் இத்துறையில் ஈடுபாடு கொண்டவர்கள்.

*கே: ஒரு குரலை வளப்படுத்த ஆகும் பயிற்சிக் காலம் எவ்வளவு?*

ப: இரண்டு மூன்று 'ஸிட்டிங்'குகளில் முடிந்த பயிற்சிகளுமுண்டு; ஆறேழு மாத காலத்தில் தேர்ச்சி பெற்றவர்களும் உண்டு. நான் மெருகேற்றிய குரல்களில் வரலக்ஷ்மி ராஜகோபால், விஜய்சிவா ஆகியோருடையவை குறிப்பிடத்தக்கவை.

*கே: யார் வேண்டுமானாலும் இதில் பயிற்சி பெறலாமா என்ன?*

ப: ஏன் முடியாது? கர்நாடக இசையைப் பொருத்தவரை, ஏற்கெனவே

# இசைக் கருவிதான்!"

இசை பற்றிய விழிப்புணர்ச்சி உள்ளவர்களுடன் உழைப்பது எளிது; இசையை எந்த ரூபத்தில் சமர்ப்பித்தால் அது கேட்பதற்கு முழுமையாக இருக்கும் என்பதை அவர்கள் விரைவில் புரிந்து கொள்வர். மற்றவர்களுக்கு முதலில் இனிமையான இசை எதுவென்பதைத் தெளியவைத்து, அதில் 'பாவ'த்தைப் புகுத்தி, பின்னர் குரல் பயிற்சியைத் துவங்க வேண்டும்.

*கே: அதாவது ரசிகனிலிருந்து கலைஞனைப் பிறப்பிக்கும் முயற்சி...?*

ப: ஆம்; ஏற்கும் இயல்பு, கற்கும் ஆர்வம், இசையை உணர்ந்து, அனுபவித்து, அதனுடன் ஒன்றி இயையும் குணம்... இவை இருந்தால் போதும்... வளப்படுத்திவிடலாம்!

*கே: இதற்கு வயது வரம்பு இல்லையோ?*

ப: இளம் வயது எல்லாவற்றுக்கும் உகந்தது என்றாலும், வயது வரம்பு என்று ஒன்றில்லை; லதா மங்கேஷ்கர் குரலில் ஒரு மார்கண்டேயத்தனமில்லையா? 70 வயதில், கிஷோரி அமோன்கரின் குரலில், 17 வயதின் இளமை தவழவில்லையா?

*கே: நல்ல குரலின் இலக்கணம்...?*

ப: நல்ல குரல் இசைமயமானது; இனிமையானது; கவர்ந்திழுக்கும் தன்மையது. அசாதாரணத் திறமைகள் இருந்தாலொழிய மேடைக் கலைஞர்கள் சோபிப்பது கஷ்டம். இசைக்கேற்ற குரலில் கம்பீரம், கனம், துரிதம் (வேகத்தைக் கட்டி, குறைத்து வெவ்வேறு ஸ்தாயியில் சஞ்சரித்தல்), வளைந்து கொடுக்கும் லாகவம், பல எல்லைகளைத் தொடும் நளினம், நுண்ணிய ஒலிகளை உணர்ந்து கொள்ளும் நுட்பம் போன்ற ஏனைய பல, சரியான கலவையில் நிரவி நிற்கும்.



* எம்.எஸ்.



* பாலமுரளி கிருஷ்ணா

*கே: கர்நாடக இசையில் இன்றைய இளம் தலைமுறையினரின் குரல் வளம் பற்றி...*

ப: சுதா, ஜெயஸ்ரீ, சௌம்யா, உன்னி, விஜய்சிவா போன்ற எத்தனையோ பலரின் குரல்களில் கவர்ச்சியிருக்கிறது; வசீகரிக்கும் ஒய்யாரமிருக்கிறது; ஆனால் எம்.எஸ்.ஸின் குரலில் இருக்கும் ஏதோ ஒன்று, இந்தக் குரல்களில் இல்லையே!

*கே: வளமான குரல்களாய் நீங்கள் கருதுவது யார் குரல்களை?*

ப: எம்.எஸ். சுப்புலக்ஷ்மி, பாலமுரளி கிருஷ்ணா, பீம்சேன் ஜோஷி, கிஷோரி அமோன்கர்.... இவை எல்லாம் காலத்தால் அழியாத சிரஞ்சீவிக் குரல்கள்; காலம் காலமாய்க் கேட்கும் அலுக்காத குரல்கள்; உடலோடு உள்ளமும் ஆத்மார்த்தமாக சங்கமித்த உன்னதக் குரல்கள்! ○

**— ஜெயஸ்ரீ ராஜ்**

சௌம்யா, பாம்பே ஜெயஸ்ரீ, காயத்ரி – இந்த மூன்று முன்னணிப் பாடகிகளும் சமீபத்தில் 'அம்மா'வாகியிருக்கிறார்கள். ஆகவே இந்த சீஸனில், 'சங்கீத கலாநிதி' கிடைத்த சந்தோஷத்துடன் சபாக்களைக் களை கட்டச் செய்யப் போகிறார்கள்.

"இப்போதே இவளுக்கு இசை ஆர்வம் வந்துவிட்டது! அழும்போது பாடினால் டக்கென்று அழுகையை நிறுத்தி விடுகிறாள்!" என்று குதூகலத்துடன் தம் குழந்தை விஷ்ருதியைக் காட்டிப் பேசுகிறார் காயத்ரி.

(குழந்தை பிறந்து

# தாலாட்டுக் கச்சேரிகள்!



ஒரு மாதம்தான் ஆகிறது.)

"கருவுற்றிருந்தபோது முதல் மூன்று மாதங் கள் வெளியூர் கச்சேரிகளை ஒப்புக் கொள்ளாமலிருந்தேன். அதேபோல் கடந்த மூன்று மாதங்களாகவும் கச்சேரிகள் செய்யவில்லை. ஆனால், வீட்டில் பாடாமல் இருப்பேனா?. என் பெற்றோர் சொல்வார்கள், நான் மூன்று வயதிலேயே ராகம் கண்டு பிடிப்பேனாம்! என் குழந்தையையும் அப்படித் தயார் செய்ய ஆசைப்படுகிறேன்" என்று கண்களில் கனவுடன் பேசும் காயத்ரிக்கு இப்போதிருக்கும் ஒரே பிரச்னை – இந்த டிசம்பரில் எக்கச்சக்கக் கச்சேரி. குழந்தையை விட்டுவிட்டு எப்படிப் போவது?

• காய்த்ரி

"யோசித்து ஒரு முடிவு செய்தேன். என் அம்மாவையும் எல்லா கச்சேரிகளுக்கும் அழைத்துப் போய்விடுவது! குழந்தையை அவர் பார்த்துக் கொண்டு விடுவார்! எனக்கும் குழந்தை பக்கத்தில் இருக்கும் குஷியில் நன்றாகப் பாட முடியுமே?"

சௌம்யா இதற்கு நேரெதிராக முடிவு செய்திருக்கிறார். "ஒரு கச்சேரிக்குப் போய்வர நாலு



• ஜெயஸ்ரீ

மணி நேரம். குழந்தையை வீட்டிலேயே விட்டுவிட்டுப் போய் வருவதுதான் நல்லது என்று நினைக்கிறேன். என் மகன் சங்கிருத் ரொம்ப சமர்த்து. சமாளிப்பதில் சிரமம் இருக்காது!" என்கிறார்.

சௌம்யாவும் கூடக் கடந்த வருடம் குழந்தைக்காகக் கச்சேரிகளைக் குறைத்துக் கொண்டிருந்தார். ஜூனுக்கப்புறம் வீட்டில் சாதகம் பண்ணியதுடன் சரி.

இப்போது சீஸன் கச்சேரிகளுடன் தாலாட்டுக் கச்சேரியும் சேர்த்து கொண்டிருக்கிறதா சௌம்யா?

"அதற்கு அவசியமே இல்லை. பாடாமலே என் குழந்தை தூங்கி விடுகிறாள்!"

**கா**யத்ரி, சௌம்யா அளவுக்கு பாம்பே ஜெயஸ்ரீக்கு அத்தனை பிரச்னை இல்லை. காரணம், பாப்பா சாய் அம்ருத் பிறந்து பத்து மாதங்கள் ஆகிவிட்டதே!

"போன சீஸனில் வயிற்றில் குழந்தையுடன பாடினேன். உட்காரவே கஷ்டமாக இருந்தது. இப்போது நோ பிராப்ளம்! குழந்தையைக் கணவரிடம் விட்டுவிட்டுக் கச்சேரிக்குப் போனால் பாடி முடிக்கும்வரை பிரச்னை இல்லைதான். ஆனால், மேடையை விட்டு இறங்கியதுமே ஏதாவது மாயக் கம்பளம் வந்து அப்படியே நம்மைத் தூக்கிக் கொண்டு போய் குழந்தையிடம் விட்டுவிடாதா என்று ஏக்கமாயிருக்கும்!" என்கிறார்.

ஜெயஸ்ரீயின் தாலாட்டுச் கச்சேரியில் தியாகராஜர் கிருதிகளும் உண்டு. பாப்பா பிளாக்ஷீப்பும் உண்டு!

"பாடும்போது அதன் முகத்தில் ஒரு சந்தோஷம் தெரிகிறது பாருங்கள்.... ஐயோ... பிரமாதம்!" என்று குதூகலிக்கிறார் ஜெயஸ்ரீ. ○

— **மௌலி**

அட்டை வண்ணப்படமும், படங்களும் : **யோகா**



• சௌம்யா

# இந்த முகங்களை சங்கீத சபாக்களில் பார்த்தால் அட! இவங்களா! என்று ஆச்சர்யப்பட வேண்டாம்...



"மூன்று ஆண்டுகளாக பி.எஸ். நாராயணசுவாமி சாரிடம் கர்நாடக இசை கற்றுக் கொள்கிறேன்...'' என்று சொல்லும் ராஜீவ் மேனன் குற்ற உணர்வில் தவித்துக் கொண்டிருக்கிறார். சினிமா உலக வேலைகள் முழு நேரத்தை எடுத்துக் கொள்வதால் வகுப்புகளுக்கு ஒழுங்காகப் போக முடிவதில்லையாம்.

"அப்பா, அம்மா இரண்டு பேருமே நன்றாகப் பாடக் கூடியவர்கள். அதனால் சிறு வயது முதலே எனக்கும் ஈடுபாடு. செம்மங்குடி, கே.வி. நாராயணசுவாமி ஆகியோரின் சம்பிரதாயமான இசை வழி பிடிக்கும். அளவுக்கதிகமான பிருகாக்கள், அனாவசியமான கமகங்கள், வெறுமே பாண்டித்தியத்தைக் காட்டுவதற்காகத் திணிக்கப்படும் சங்கதிகள் – இவற்றைக் கண்டாலே அலர்ஜி! பாம்பே ஜெயஸ்ரீ, சுதா ரகுநாதன் போன்றவர்களின் தெளிவான நேரடியான அணுகுமுறை பிடிக்கிறது..."



• விஜு சக்கரவர்த்தி



• ராஜீவ் மேனன்

ராஜீவ் மேனன் மியூசிக் அகடமி, மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் இரண்டிலுமே உறுப்பினர். லஸ் சாஸ்திரி ஹாலில் நடக்கும் கச்சேரிகளில் அவரைப் பார்க்கலாம். இப்போது இயக்கிக் கொண்டிருக்கும் தமது படத்தில் ஏ.ஆர். ரஹ்மானைக் கொண்டு நளினகாந்தி போன்ற அழகான ராகங்கள் அடிப்படையில் இசை யமைக்கச் செய்திருக்கிறார்.

ராஜீவின் ஆதங்கம்: "கர்நாடக சங்கீதம் பிராமண வகுப்பினருக்கு மட்டுமே உரியதாகக் கருதப்படுகிறதே" என்பதுதான். இது வருத்தத்துக்குரிய விஷயம். கர்நாடக இசை, தமிழ்ப் பண் பாட்டோடு ஒன்றிய கலை. உண்மையில் தயிர் சாதத்தையும் பில்டர் காப்பியையும் மறவாத பிராமண இளைஞர்கள் பலர் கர்நாடக சங்கீதம் மட்டும் விசை என்ன விலை என்று கேட்கிறார்



• ஜனகராஜ்

கள். வித்வான்கள் சீரியஸாக ஏதாவது செய்தால் நல்லது..."

"முறையாக இசை படித்ததில்லை. ஆனால், இது சக்கரவாகமாக இருக்கும், இது சங்கராபரணமாக இருக்கும் என்று அனுமானித்துக் கண்டுபிடிக்கிற அளவுக்குக் கேள்வி ஞானத்தை வளர்த்துக் கொண்டிருக்கிறேன்..." என்பவர் விஜு சக்ரவர்த்தி. மியூசிக் அகடமியில் டிசம்பர் 31 அன்று தவறாமல் ரவிசங்கரின் சிதார் இசை நிகழ்ச்சி நடந்த காலம் உண்டு. அப்போதெல்லாம் தவறாமல் ஆஜராகி விடுவாராம் விஜு சக்கரவர்த்தி. ஜாகிர் ஹுசெய்னின் தபலா, பிருஜு மஹராஜின் கதக் நடனம், பத்மா சுப்ரமண்யத்தின் பரதம் என்று பல்முனை ரசனை இவருக்கு.

"பல இசை நிகழ்ச்சிகளில் கண்ணீர்விட்டு அழுததுண்டு – உணர்ச்சி மிகுதியால்தான். ரயில்வேயில் ஸ்டேஷன் மாஸ்டராகப் பணியாற்றிய காலத்தில் சென்ட்ரலில் ஒரு ஹார்மோனிய பாடகர் வருவார். டோலக் வேறுவைத்திருப்பார். கண் பார்வையற்ற இரண்டு குழந்தைகள். சற்று நேரம் அருகே நின்று கேட்டுவிட்டு ஐந்து ரூபாய் கொடுத்துவிட்டு வருவேன்..."

இசை கற்றுக் கொள்ளும் திட்டம் ஏதாவது இருக்கிறதா?

"அம்பத்து மூணு வயசாச்சு. இன்னும் நடிப்பிலும் எழுத்திலும் கற்றுக் கொள்ள வேண்டியதே ஏராளமாயிருக்கிறது... புதிதாக இசை வகுப்பா... நோ!"

ஜனகராஜ் சின்ன வயதில் சில மாதங்கள் பாட்டு கற்றுக் கொண்டதுண்டு. "வயலின், தபலா கூட வாசிக்க வரும். மெல்லிசை நிகழ்ச்சிகள்ல வாசிக்கணும்னா ஓரளவு சமாளிச்சுடுவேன்" என்பவருக்கு பெரும்பாலான ராகங்களைக் கண்டு பிடிக்கத் தெரியுமாம்.

"நண்பர்களுடன் இசை, நடன நிகழ்ச்சிகளுக்குப் போய் ரசித்துவிட்டு வருவேன். சமீபத்தில் எல். சங்கர் ஒரு ஜெர்மன் நாட்டுக் கலைஞருடன் இணைந்து வழங்கிய 'ரிதம்ஸ்' நிகழ்ச்சிக்குப் போயிருந்தேன். அற்புதமாக இருந்தது. ஆனால் ஆடியன்ஸ் ரொம்பக் குறைவு. இது போன்ற நிகழ்ச்சிகளையெல்லாம் பொது மக்கள் ஆதரிக்க வேண்டாமா?" என்கிறார்.

"'இசை பாடும் தென்றல்' படத்தில் வயலின் வித்வானாக நடித்தது சந்தோஷமான அனுபவம். அதில் விநாயகராம் கடம் வாசித்திருக்கிறார்..."

— ஜி.எஸ்.எஸ்.

## காதில் விழுந்தவை :

● 1960களில் சென்னையைச் சீரழித்துக் கொண்டிருந்த காட்டன் சூதாட்டம் இப்போது மீண்டும் தலை காட்டியிருப்பதாகத் தகவல். சிங்கிள் நம்பர் லாட்டரி விவகாரத்தில் அரசின் கெடுபிடி கொஞ்சம் அதிகமாகவே, தங்களது கஸ்டமர்களை தக்க வைத்துக் கொள்வதற்காக இந்த காட்டன் சூதாட்டத்துக்குப் புது வடிவம் கொடுத்திருக்கிறார்களாம் சிலர். மந்தைவெளி, கொருக்கு பேட்டை, பார்டர் தோட்டம் பகுதிகளில் காலை, மாலை வேளைகளில் தினப் பேப்பரும் கையுமாக உட்கார்ந்திருக்கும் கும்பல்களை காவல்துறை கண்காணிப்பது நல்லது. அந்தக் காலத்தில் ஆயிரக்கணக்கான குடும்பங்களை நாசம் செய்த காட்டன் சூதாட்டம் மீண்டும் தலை தூக்கக் கூடாது என்கிறார்கள்.

### சென்னையில் மீண்டும் காட்டன் சூதாட்டம்!

● ஆந்திராவிலுள்ள குறிப்பிட்ட 16 கிராமங்களில் இருந்து சென்னையில் விபச்சாரம் செய்ய பெண்கள் அழைத்து வரப்படுவதாக ஒரு தகவல். மாதத்திற்கு 2000 ரூபாய் சம்பளம். மீதித் தொகை நடத்துவோருக்கு! இதில் வேதனை என்னவென்றால் குறிப்பிட்ட ஒன்றிரண்டு காவல் துறை அதிகாரிகளையே போஷகர்களாக வைத்துக் கொண்டு செயல்படுகிறார்களாம் இவர்கள். அந்தக் காவல்துறை அதிகாரிகளின் அதிகாரத்துக்கு உட்பட்ட பகுதிகளிலேயே முகாம் அமைக்கிறார்களாம். அவர்கள் மாற்றலானால் அவரோடு புது ஏரியாவுக்குப் போய் விடுகிறார்கள். இந்த பெண்மணிகள் குடியிருக்கும் வீடுகளில் ஏதாவது தகராறோ அல்லது வீட்டுக்காரர் கெடுபிடியோ இருந்தால் அந்தக் காவல் துறை அதிகாரியே அதை 'கவனித்துக்' கொள்வாராம்.

● மிக மிக முக்கியமானவர்களைத் தவிர வேறு யாருக்கும் விமான தளத்தின் ஓடுபாதை வரை காரில் சென்று விமானத்தில் ஏறுவதற்கு அனுமதி கிடையாது; அனுமதிக்கவும் மாட்டார்கள். சமீபத்தில் ஸ்ரீலங்காவைச் சேர்ந்த இருவரை (யார் அவர்கள்?) அப்படி அழைத்துச் சென்று விமானம் ஏற்றியதற்காக பாதுகாப்புக்குப் பொறுப்பான காவல்துறை அதிகாரி மீது விசாரணை நடக்கிறது. சம்பந்தப்பட்ட அதிகாரி இடைநீக்கம் செய்யப்படுவார் என ஏர்போர்ட் தகவல்கள் கூறுகின்றன.

— தில்லப்பா

## 1

"**நா**ம புதையலைத் தேடிப் போற விஷயத்தை யார் கிட்டயும் மூச்சு விடக் கூடாது" என்ற பேராசிரியருக்கு, நிச்சயம் வயது அறுபதுக்கு மேல் சொல்லலாம். மண்டிக் கிடந்த தாடி, மீசைக் கற்றைகளில் லேசாய்த் தான் வெண்மை தெரிந்தது. வெகு நீர்க்கமாய் நீண்டிருந்த நாசியும், மயிர்க் கற்றைகளுக்கிடையே மறைந்திருந்த வாயும் அவருக்கு ஓர் இயல்பான அதிகாரத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தன.

அவர் கண்களைப் பற்றி சொல்லியே ஆக வேண்டும். அந்தக் கண்களை நீங்கள் சற்று உற்று நோக்கினால் உங்களாலும் அந்த ஜ்வாலையை இனம் கண்டு கொள்ள முடியும். அதன் கருமையான ஆழங்களில் தகித்துக் கொண்டிருக்கும் அதன் வெம்மை உங்களையும் தாக்கக் கூடும். ஒரு லட்சியத்திற்காகத் தங்கள் வாழ்நாளையே அர்ப்பணித்து விட்ட சிலரின் கண்களில் நீங்கள் அதைப் பார்த்திருக்கக் கூடும்.

பேராசிரியரும் அந்த வகையானதொரு அர்ப்பணிப்பைத்தான் செய்திருந்தார். அவர் ஆந்த்ரோபாலஜி எனப்படும் மானுடவியலில் தேர்ந்தவர். உலக அளவிலே வெகுவாக அறியப்பட்டவர். முந்நூற்றி ஐம்பது கோடி ஆண்டுகளுக்கு முன்னால் வெகுவாகக் குளிர்ந்து விட்ட பூமியின் மேற்பரப்பில், ஒரு கடற்கரை ஓரத்தில் தோன்றிய ஒரு செல் உயிரிலிருந்து, இன்று தன் தோற்றத்திற்கான காரணங்களை ஐஸ்க்ரீம் சாப்பிட்டுக் கொண்டே ஆராய்ந்து கொண்டிருக்கும் நாகரீக மனிதன் வரையிலான பரிணாம வளர்ச்சியின் பாதைகளை இனம் கண்டு கொள்வதுதான் அவருக்கு மூச்சு, பேச்சு, உணவு எல்லாமாய் இருந்தது.

சில ஆண்டுகளுக்கு முன் அந்தச் செப்பேடுகள் அவர் கையில் கிடைத்ததும்தான் எல்லாம் மாறி விட்டது. பரிணாம வளர்ச்சியின், 'மிஸ்ஸிங் லிங்ஸ்' எனப்படும் சில இடைவெளிகளை இட்டு நிரப்ப வேண்டும் என்ற அவரது எண்ணம், அதை மறந்து விட்டு அந்தச் செப்பேடுகளைச் சுற்றியே வட்டமடிக்க ஆரம்பித்து விட்டது. தமக்கு ஒரு மகனைப் பெற்றுக் கொடுத்து விட்டு இறந்து போய்விட்ட தன் அன்பு மனைவியைப் பற்றிக் கூட இப்போதெல்லாம் அவர் நினைப்பதில்லை.

மத்திய இந்தியாவில், விந்திய மலைக் காடுகளில், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்த – பின்பு



ஹேமா இராஜ்

# புதையல்

மறைந்து போன ஒரு பூர்வ குடியினரைப் பற்றிய ஒரு ஆராய்ச்சியில் அவர் அப்போது ஈடு பட்டிருந்தார். மண் மேடாகிப் போன அந்தக் குடியினரின் சிறிய நகரத்தில் அவர் அகழ்வாராய்ச்சியில் லயித்திருந்தார். அப்போது மாந்திரீகனாய் இருந்திருக்க வேண்டும் என்று கருதப்பட்ட ஒருவனுடைய வீட்டின் மூலையில் இருந்த, பழைய மண்பாண்டத்தில், ஓநாய்த் தோலினால் சுற்றி வைக்கப்பட்டிருந்த இந்தச் செப்பேடுகள் அவருக்குக் கிடைத்தன.

அதன் பின்னர்தான் அவர் முற்றிலுமாக மாறிப் போனார்.

அந்தச் செப்பேடுகளை மொழி பெயர்க்கவே அவருக்கு ஒரு ஆண்டுக்கு மேல் ஆனது. ஏராளமான மானுடவியலாளர்கள், மொழி இயலாளர்கள் ஆகியோருடன் அவர் கலந்து பேச வேண்டியிருந்தது. மிகக் கடுமையாக அவர் தம்மை வருத்திக் கொண்டதன் விளைவாக, இறுதியில் அவருக்கு அந்தச் செப்பேடுகளில் இருந்தவற்றைச் சரியாகப் புரிந்து கொண்டு விட்டதாக ஒரு நம்பிக்கை தோன்றியது.

செப்பேடுகளை மொழி பெயர்த்த பின், தம் திட்டங்களை அவர் துல்லியமாக வகுத்துக் கொண்டார். கடுமையான உடலுழைப்பைத் தரக்கூடிய பத்துப் பேர் அடங்கிய ஒரு குழுவை அவர் தேர்ந்தெடுத்தார். அந்த பத்துப் பேருக்கும் தாங்கள் எங்கே எதற்காக போகப் போகிறோம் என்பது தெரியாமலே பார்த்துக் கொண்டார்.

எல்லாச் செயல்களையும் ஒருங்கிணைக்க, தாமும் தம் மகனும் போதாது என்ற காரணத்தின் பேரில் தம் மகனின் நண்பனாகிய சோமு எனப்படும் சோமசுந்தரத்தையும் இணைத்துக் கொண்டார். இறுதிக்கட்டமாக தம் திட்டங்கள் அனைத்தையும் ஒருங்கிணைத்து, அவற்றைப் பற்றிய ஒரு விளக்கத்தைத் தம் மகனுக்கும் அவன் நண்பனுக்கும் அளிக்க வேண்டி, மாளிகையின் மொட்டை மாடியில், ஒரு டிசம்பர் இரவில் ஒரு ப்ரத்யேக கலந்துரையாடலுக்கு ஏற்பாடு செய்திருந்தார். சிலிர்க்க வைக்கும் இரவின் குளிரைப் போக்கடிக்க பொன்னிற பிராந்தி சோடா கலவையை ஏந்தியவாறு, அவர் பேசிய வார்த்தைகளைத்தான் நீங்கள் ஆரம்பத்தில் படித்தீர்கள்.

அவருக்கு எதிரே உட்கார்ந்திருந்த இரண்டு இளைஞர்களில் ஒருவன் ப்ரேம். பேராசிரியரின் மகன். இருபத்தி எட்டு வயது, சிவப்பு நிறமும் தலை நிறைய முடியுமாய் சற்று பிந்தைய ஆங்கிலப்பட கதாநாயகர்களை நினைவுபடுத்துபவன். ஆர்க்கியாலஜி எனப்படும் தொல்பொருள் இயலில் பட்ட மேற்படிப்புப் படித்தவன்.

அவன்கூட இருந்த சோமுவுக்கு ஒரு இருபத்து ஐந்தை வயதாகச் சொல்லலாம். நல்ல உறுதியான உடலைக் கொண்ட அவனுக்கு மனசு மட்டும் ரொம்ப குழந்தைத்தனமானது. தன் தாய் தந்தையருக்கு ஒரே மகனான அவன், சமீபத்தில் தன் பெற்றோரை ஒரு விபத்தில் இழந்தவன். ப்ரேமின் உயிர் நண்பன். படிப்பு ஏறாததாலும் குழந்தைத் தனத்தாலும் பொறுப்பற்றவனாக அவன் காணப்பட்டாலும், உயிராகப் பழகக் கூடியவன் என்பதை ப்ரேம், பேராசிரியர் இருவருமே அறிவார்கள்.

"ப்ரேம். நம்ப லக்கேஜ் எல்லாம் பேக் ஆயிடிச்சா? நாம கௌம்ப இன்னமும் ரெண்டு நாள்தான் இருக்கு"

"எல்லாம் ரெடி ஆயிடிச்சி அப்பா. நமக்குனு தனியா ஒதுக்கியிருக்கற ரயில் பெட்டில நாளைக்கு லோட் பண்ணிடலாம்."

"நாளன்னிக்கி அடுத்த நாள் நாம போபால் போயிடலாம். அதுக்கப்புறம் ரெண்டு நாள் ட்ரக்குல பயணம்."

பேராசிரியர் தம்ளரில் இருந்த திரவத்தின் பொன்னிற ஆழங்களில் மூழ்கியபடி பேசினார். "அந்த பாழ்பட்டுப் போயிட்ட மலைவாசிகளின் சின்ன நகரத்துக்கு நேரடியா ட்ரக்குல போக முடியாது. கடைசி அஞ்சு மைலை நடந்துதான் கடக்கணும். ரொம்பக் கடினமா உழைக்க வேண்டி இருக்கும்."

இளைஞர்கள் இருவரும் அமைதியாய் இருந்தார்கள். பேராசிரியரே தொடர்ந்தார். "நாம கூட்டிட்டுப் போற அந்தப் பத்துப் பேருக்குக்கூட இது விஷயமா எதுவும் தெரியாது. ஆனா ஏதோ நிழலான காரியம்னு அவங்க புரிஞ்சிக்கிட்டு இருப்பாங்க. கடைசி வரைக்கும்கூட அவங்க உண்மையைத் தெரிஞ்சிக்கப் போறதில்ல. ஆனா நம்ம தரப்புல இருந்துவிஷயம் எப்படியும் வெளில போயிடக் கூடாது. ப்ரேம், உனக்கு முக்கியமா சொல்றேன். உன்னோட லேட் நைட் டிஸ்கோ. உன் பெண் நண்பியோட சந்திப்பு, எல்லாத்தையும் நாம கௌம்பற வரைக்கும் தள்ளிப் போடு. இந்த மாதிரியான வீக் மொமண்ட்ஸ் எல்லாத்தையும் தவிர்த்திடணும்."

ப்ரேம் தலையாட்டினான். சற்று நேர அமைதிக்குப் பின்னர், அவர் மெல்ல தலையசைக்க, இளைஞர்கள் இருவரும் அந்த அறையை விட்டு வெளியேறினார்கள்.

**போ**பாலில் இருந்து கிளம்பிய இரு நாள் டிரக் பயணம்கூட அவர்களை அவ்வளவாக சோதிக்கவில்லை. மலை முகடுகளின் நடுவே தெரிந்த மண்பாதைகளில் அவர்களின் டிரக்குகள் ஊர்ந்து சென்றன. அடர்த்தியான காட்டை அவர்கள் அப்போதுதான் முதன் முதலில் சந்திக்கிறார்கள். இவ்வளவு அடர்த்தியான ஒரு பச்சைச் சூழலை அவர்கள் நினைத்தே பார்த்திருக்கவில்லை. ஆரம்பத்தில் இது அவர்களை பரவசப்படுத்தினாலும், சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு முகம் தெரியாத பயம் அவர்களைப் பற்றத் தொடங்கியது. மனித நாகரீகத்தை விட்டுத் தாங்கள் வெகு தூரம் விலகிச் செல்வதை அவர்கள் புரிந்து கொண்டார்கள்.

அந்த அடர் பச்சையும் மலை முகடுகளும் தங்களுக்கு ஒரு வழிப்பாதையாக இருந்து விடுமோ என்ற எண்ணம் அவர்களுக்கு ஏற்பட்டது. இந்த பயம் அவர்களின் பேச்சை முடக்க, ஓர் இறுக்கமான மௌனத்திலே அந்த பயணம் நடைபெற்றது.

அந்த மெலிதான மலைப்பாதையும் ஒரு உயரமான நீர்வீழ்ச்சிக்கு அருகாமையில் முடிந்து போய்விட, அந்தக் குழு பாரங்களை முதுகில் சுமந்தபடி நடைப்பயணத்தைத் தொடங்கியது. அவர்களின் உடலையும் ஊக்கத்தையும் உருக்கிய பயணமாக அது அமைந்தது. இலட்சியமே இல்லாத, இடர்ப்பாடுகள் நிறைந்த பயணத்தில் அவர்கள் மூழ்கினார்கள். அவர்கள் இலக்கு எது, எங்கே தங்க வேண்டும். எவ்வளவு நேரம் தங்க வேண்டும், என்பதெல்லாம் பேராசிரியரைத் தவிர வேறு யாருக்கும் தெரியாமல் இருந்தது.

ஆனால் பேராசிரியரோ அவர்களின் சிரமங்களை அங்கீகரித்ததாகவே காட்டிக் கொள்ளவில்லை. மாறாக மிகக் கொடுங்கோலனாகச் செயல்பட்டார். குழுவினர் இளைப்பாற மிகக் குறைந்த நேரமே தரப்பட்டது. வார்த்தைகளாலும் சில சமயம் செயல்களாலும் அவர் அனைவரையும் விரட்டிக் கொண்டே இருந்தார்.

கிட்டத்தட்ட இடைவெளி இல்லாத ஒரு பதினைந்து மணி நேரப் பயணத்திற்குப் பின், நான்கு புறமும் மலைகள் சூழ்ந்திருக்க, இடைப்பட்ட சற்றே பெரியதொரு சமவெளிப் பிரதேசத்தை அடைந்ததும்தான் அவர் நிதானித்தார். நான்கு மலைகளின் நடுவில் ஒரு பெரிய தட்டைப் போல பரந்திருந்த அந்தப் பிரதேசத்தில் குட்டிச்சுவர் வரிசைகள், சின்ன வீதிகளுக்கு வழி விட்டு அமைந்திருந்தன. சில கட்டடங்கள் மட்டுமே மிகவும் சிதிலமான நிலையில் இருந்த மேற்கூரைகளைப் பெற்றிருந்தன.

மேற்குப் புறத்தில் இருந்த வெற்றிடத்தில் அவர்கள் கூடாரங்களை அமைத்துக் கொண்டார்கள். ஆழ்ந்த இருள் அந்தப் பிரதேசத்தைக் கவ்வியபோது, அவர்களில் பெரும்பாலோர் உறங்கியிருந்தார்கள்.

**ப்**ரேமிற்கு உறக்கம் கலைந்தபோது சரியாக மணி இரண்டு. இராக்கோழிகளின் சத்தத்தைக் கேட்டவாறே அவன் சற்று நேரம் படுத்திருந்தான். பிறகு மெல்ல எழுந்தான். அருகில் சோமுவின் ஆழ்ந்த உறக்கத்திற்கு அடையாளமாக மெலிதான குறட்டை அவனிடம் இருந்து வெளிப் பட்டுக் கொண்டிருந்தது.

ப்ரேம் கூடாரத்தை விட்டு வெளியே வந்ததும் கனமான இருள் அவனை ஆர்வமாய் தழுவிக் கொண்டது. நட்சத்திரங்களின் மின்மினி வெளிச்சத்தை அவன் கண்டு கொள்ள சற்று நேரம் பிடித்தது. கூடவே சற்று தள்ளி

இருந்த சிறிய மேட்டின் மீது அந்த உருவத்தின் அவுட் லைன் தெரிய அவன் சற்று நிதானித்தான். பின் மெல்ல அந்த மேட்டை அடைந்து அதன் மேல் ஏறினான்.

"அப்பா..." என்று ப்ரேம் கூப்பிட்ட குரல் பேராசிரியரை எந்த வகையிலும் பாதிக்கவில்லை. அவர் அந்தச் சிறிய மேட்டின் மேல் நின்றபடி அந்தப் பாழடைந்த நகரத்தைப் பார்த்தவாறு இருந்தார். அவர் உடலில் எந்தச் சலனமும் இல்லாமல் போனாலும் அவர் உள்ளத்தில் இருந்த அலைவீச்சை ப்ரேம் புரிந்து கொண்டான்.

"அப்பா..." ப்ரேம் சற்றே உரத்துக் கூப்பிட்டான்.

''சொல்லு ப்ரேம்" என்றார் பேராசிரியர் சற்று நேரம் கழித்து.

''தூங்கலியாப்பா?"

"சென்னைல இருந்தபோதே என்னால தூங்க முடியல. இப்ப இவ்வளவு பக்கத்துல இருக்கும்போது எப்படி என்னால தூங்க முடியும்?"

"புதையலைச் சொல்றீங்களா?"

அவர் ஆமாம் என்ற ரீதியில் தலையசைத்தார்.

''ப்ரேம். எனக்கு எப்பவுமே காசு பணத்துல ஆசை இருந்தது இல்ல. இப்பக்கூட இந்தப் புதையலோட காசு மதிப்புக்காக நான் இதைத் தேடல. இதனோட பழமை மதிப்புத்தான் என்னைக் கவர்ந்த விஷயம். ஆயிரம் வருஷங்களுக்கு முன்னாடி இந்தப் புதையல் மறைச்சி வைக்கப்பட்டிருக்கு. இது வெளிப்படும்போது அப்ப வாழ்ந்த மனிதர்களோட மனோபாவமும் வெளிப்படும். அவர்களோட மனசையும் புத்தியையும் என்னால புரிஞ்சிக்க முடியும்னு எனக்குத் தோணுது."

"அந்தப் புதையல்ல என்ன இருக்கும்னு தெரியுமாப்பா?"

பேராசிரியர் தம் கால்சட்டையில் இருந்த அந்தக் காசை வெளியே எடுத்தார். நட்சத்திர ஒளி வில்கூட அதன் மென்மையான தங்க ஜொலிப்பு கருத்தைக் கவர்ந்தது. ப்ரேம் ஆசையும் ஆர்வமுமாய் அதை வாங்கிக் கொண்டான்.

"எங்கப்பா கிடைச்சது இது...?"

''அந்த செப்பேடுங்ககூட இதுவும் கிடைச்சது ப்ரேம். இந்த காசு மாதிரி நிறைய. நிறைய. நிறையவே இருக்கும்னு நம்பறேன்."

''அட்டகாசம்ப்பா...'' என்ற பிரமேின் குரலில் தகிப்பு இருந்தது. ''ஆனா. இந்த புதையல் எங்க இருக்குன்னு கண்டுபிடிச் சிரமங்களாப்பா."

"செப்பேடுகளில் இருக்கற தகவல்களை வச்சி கலபமாக கண்டு பிடிச்சிடலாம்" என்றவர் சற்று நேரம் நிதானித்து விட்டுத் தொடர்ந்தார். ''ப்ரேம். நாளைக்கி விடியக் காலைல நாம தேடறதை ஆரம்பிச்சிடணும். அதனால நீ போய்ப் படு."

"நீங்கப்பா?"

''நான் பின்னாடியே வரேன். நீ போய்ப் படு."

பிரேம் திரும்பி நடந்தான்.

"பிரேம்..."

பிரேம் நின்று திரும்பினான்.

"சொல்லுங்கப்பா."

பேராசிரியர் மெல்ல நடந்து. அவன் அருகில் வந்தார். ப்ரேமின் கைகளைப் பிடித்தவாறு பேசிய அவர் குரலில் தழுதழுப்பு இருந்தது. "ப்ரேம். நாளைக்கு நீ ரொம்ப ஜாக்ரதையா இருக்கணும் ப்ரேம். இந்த புதையல் எனக்குப் பெரிசுதான். ஆனா. நீதான் இந்த எல்லாத்தையும் விட பெரிசு. இது உனக்குப் புரியுதுல்ல."

ப்ரேம் மென்மையாகத் தலையாட்டினான்.

"புரியுதப்பா."

ஏனோ சட்டென்று கலங்கிவிட்ட கண்களைத் துடைத்தவாறு திரும்பி நடந்த ப்ரேமை சற்று நேரம் பேராசிரியர் பார்த்துக் கொண்டிருந்தார்.

(தொடரும்)


''கலப்புத் திருமணத்துக்குப் போயிட்டு வர்றேன்னு சொன்னீங்க... இப்படி வேட்டி சட்டையெல்லாம் கிழிச்சுட்டு வந்திருக்கீங்களே?''

''அது கைகலப்புத் திருமணமா ஆயிடுச்சு, மாலா!''

— சு. குமார்

# நிறுவனருக்கு அஞ்சலி!

"சுதந்தரம் கிடைத்துவிடும் என்கிற நம்பிக்கை ஏற்பட்ட பிறகு விடுதலைப் போராட்டத்தில் சேருவதென்பது பெரிதில்லை. சுதந்தர பாரதம் என்பது கற்பனைக்கெட்டாத கனவு தான் என்றிருந்த காலத்தில் களத்தில் இறங்கியவர்கள் துணிவு மிக்கவர்கள்; தீரர்கள். அத்தகைய இருவர் கல்கி சதாசிவம், கல்கி கிருஷ்ணமூர்த்தி" என்று நினைவு கூர்ந்தார் சி. சுப்ரமண்யம். இந்த இரு தேச பக்தர்களின் முயற்சியில் கல்கி பத்திரிகை தோன்றியதையும் தேச பக்தியை வளர்த்ததையும் குறிப்பிட்டார். கல்கி சதாசிவம், பாரதத்துக்கும், ஏன் அனைத்து உலகுக்குமே பொக்கிஷம் போன்ற இசைப் பெட்டகமாக எம்.எஸ். சுப்புலட்சுமியை உருவாக்கி அளித்ததைச் சுட்டிக் காட்டினார். "இசை உள்ளவரை சதாசிவத்தின் புகழ் இருக்



கும்" என்று கல்கி சதாசிவத்தின் நினைவு நாளன்று சி.எஸ். செலுத்திய அஞ்சலி அனைவரையும் நெகிழ்த்தியது.

கல்கி அலுவலகத்தின் புதிய தொழில் கூடக் கட்டடத்தைத் திறந்து வைத்து, அதை சதாசிவத்தின் நினைவுக்குக் காணிக்கையாக்கினார் சி.எஸ்.

சதாசிவம் மறைந்து ஓர் ஆண்டு முடிந்து விட்டதைக் குறித்த அன்றைய அஞ்சலிக் கூட்டம் (21.11.98) ஆத்மார்த்தமானதாக அமைந்தது. சதாசிவத்தின் நெருங்கிய நண்பராக விளங்கிய செம்மங்குடி சீனிவாச அய்யர், தமது சகாவின் வள்ளல் குணத்தையும் ஆன்மீக ஈடுபாட்டையும் நெகிழ்ச்சியூட்டும் வகையில் நினைவு படுத்தினார்.

சதாசிவம் தம்பதியின் குடும்பத்தில் ஒருவராகவே ஆகிவிட்ட மற்றொரு நண்பரான சி.வி. நரசிம்மன், (ஐ.நா. சபையின் முன்னாள் துணைச் செயலர்) அந்த அரிய தம்பதியின் மனமொத்த வாழ்க்கையின் உயர்வுகளைப் பட்டியலிட்டார்.

அமரர் கல்கியின் மகளும் சதாசிவத்தின் இல்லத்து மருமகளுமான (அவருடைய அக்காள் மகனை மணந்து) ஆனந்தி ராமச்சந்திரன் சதாசிவம் என்கிற குடும்பத் தலைவர், எவ்வாறு தன்னலமற்ற வழிகாட்டலால் குடும்ப உறுப்பினர்கள் அனைவரையும் அரவணைத்து உருவாக்கினார் என்பதைப் பல எடுத்துக்காட்டுகளுடன் விளக்கினார். 'மாமாவின் உயர் ரசனை, இனிய மனம், சமயோசிதம், எழுத்தாற்றல், கூர்மையான பார்வை' என்று குணாதிசயங்களைத் தக்க சம்பவங்களுடன் அவர் ஆதாரப்படுத்த, வியப்பும் நெகிழ்ச்சியுமாகக் கூட்டத்தினர் கேட்டு அஞ்சலி செலுத்தினர்.

ஆண்டொன்று கடந்த பின்னும் ஆறாத மனத்துடன் அறிமுக உரை வழங்கிய கல்கி நிறுவன சேர்மன் வி. வைத்தியநாதன், இன்று இந்த நிறுவனம் அடைந்திருக்கும் உயர்நிலைக்குக் கல்கி சதாசிவம், கல்கி கிருஷ்ணமூர்த்தி, ராஜாஜி போன்ற பெரியோரின் வழிகாட்டலும் ஆசிகளுமே காரணம் என்பதைக் குறிப்பிட்டார்.

நன்றியுரை வழங்கிய கல்கி நிறுவன தலைமை நிர்வாக அதிகாரி வி. கோபாலன், நிறுவனத்தை ஸ்தாபித்த பெரியவர்களின் உயர் கொள்கைகளை ஒருபோதும் மறவாமல் கடைப்பிடிப்போம் என்று கூறியது பொருத்தமான சிலிர்ப்பூட்டும் முடிவாக அமைந்தது. ⭘

படம் : **யோகா**






1998 டிசம்பர் 6
வெகுதான்ய கார்த்திகை 20
மலர் : 57
இதழ் : 19

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# ஜாலம் காட்டும் ஜாதி அரசியல்!

"ஒடுக்கப்பட்ட பிரிவினருக்குச் சமத்துவமும் சமுதாய நீதியும் கிட்ட வேண்டும் என்பதற்காகக் கொண்டு வரப்பட்டதுதான் இடஒதுக்கீடு முறை. ஆனால், இன்று அந்த இட ஒதுக்கீடே பிற்படுத்தப்பட்ட, மிகப் பிற்படுத்தப்பட்ட வகுப்பினரிடையே பிளவும் மனக் கசப்பும் ஏற்பட காரணமாகி விட்டது!"

- தமிழக முதல்வர்தான் இப்படி வருத்தத்துடன் பேசியிருக்கிறார்!

"ஆனால், இந்த நிலைமையைக் கண்டு பயந்து இடஒதுக்கீடு முறையை ரத்து செய்தால், அது பக்க விளைவுகளுக்குப் பயந்து மருந்துகளை நிறுத்துவது போல் ஆகிவிடும்..." என்பதும் முதல்வர் தெரிவித்துள்ள கருத்து.

பக்கவிளைவுகள் ஏற்பட்டால் அவற்றையும் முறித்துவிடும் வகையில் சிகிச்சையைச் சீரமைத்துக் கொள்ள வேண்டும் என்றும் கூறியிருக்கிறார் அவர்.

முதல்வர் குறிப்பிடும் 'பக்கவிளைவுகள்', நோயைக் காட்டிலும் கொடுமையாக உள்ளன என்பதுதான் கொடூரமான உண்மை. ஏற்கெனவே இருந்த சமுதாய ஏற்றத்தாழ்வுகள் போதாதென்று புதிய பிளவுகளையும் மனக் கசப்பையும் விளைவிக்கிற ஒருமுறை, எப்படி சிறந்த சிகிச்சையாக அமைய முடியும்?

நோய்க்கான சிகிச்சை என்பது மருந்து உட்கொள்வதோடு நிற்குமானால் அது முழுமை









அடையாது. நோயின் தன்மைக்கு ஏற்ப வாழ்க்கை முறை மாற்றங்களும் அவசியம். காலவரையின்றி மருந்துகளை உட்கொண்டேயிருப்பதும், பக்கவிளைவுகளுக்காக மேலும் மேலும் மருந்துகளைச் சாப்பிடுவதும் சிறந்த சிகிச்சையாக அமையாது. பல மருந்துகள் நோயின் அடையாளங்களை மட்டுமே கட்டுப்படுத்தி, நோய்க்கான காரணங்களைக் களையத் தவறி விடுகின்றன. இத்தகைய சிகிச்சை அரைகுறையானது என்பதுடன் ஆபத் தானதும் கூட.

தற்போது நம் நாட்டில் இயங்கும் இடஒதுக்கீடு முறையானது இந்த ஆபத்தான அரைகுறை சிகிச்சை முறையைப் போன்றதுதான்.

அதனால்தான் ஆண்டுகள் செல்லச் செல்ல ஒதுக்கீடு சதவிகிதம் குறைவதற்குப் பதில் அதிகரித்து வருகிறது. எல்லாத் தரப்பினருமே போட்டி போட்டுக் கொண்டு, தங் களைப் பிற்படுத்தப்பட்டோராகக் கருத வேண்டும், இடஒதுக்கீடு செய்துதர வேண்டும் என்று கேட்கின்றனர். சங்கிலித் தொடராகத் தீமைகள் வளர்கின்றன.

இவற்றுள் மிகப் பெரிய தீமை ஜாதி அரசியல். ஜாதிப் பெயரில் கட்சிகளும் அமைப்பு களும் தோன்றி எளிய மக்களின் உணர்வுகளைத் தூண்டி, உசுப்பிவிடும் பாவச் செயலில் ஈடுபடுவது அபாயகரமான எல்லைகளை எட்டியிருக்கிறது.

பலதரப்பு அரசியல் தலைவர்களும் ஜாதி அரசியலின் போக்கைக் கவனித்து, கண்டிக்கும் அளவுக்கு இன்று நிலைமை மோசமாகியிருக்கிறது. சமீபத்தில் கம்யூனிஸ்ட் கட்சியினர் அவ்வாறு கண்டித்து கவலை தெரிவித்துள்ளனர். அமைச்சர் தலித் எழில்மலை, 'இட ஒதுக்கீடு மட்டுமே சமத்துவத்தைப் பெற்றுத் தராது' என்று கூறியிருக்கிறார்.

'சலுகைகளை மட்டுமே அறிவிக்கும் அரசும் ஆதிக்க சக்திகளும் உரிமைகளை மறுக் கின்றன' என்று விடுதலைச் சிறுத்தைகள் தலைவர் திருமாவளவன் வருத்தம் தெரிவிக்




கிறார். இவ்வளவு அரசியல் கொந்தளிப்புக்கிடையேயும் உணர்ச்சிபூர்வமான ஜாதி இயக்கங்களுக்கிடையேயும் தீண்டாமை இன்னமும் நமது கிராமங்களில் கோரத்தாண்டவமாடுகிறது!

இத்தனை சம்பவங்களும் உணர்த்துவது என்ன...? இதுவரை இயங்கி வந்த இடஒதுக்கீடு முறையின் தோல்வியைத்தான் அவை உணர்த்துகின்றன.

தாற்காலிக நிவாரணம் தரும் சலுகை சிகிச்சையோடு நிறுத்திக் கொள்ளாமல், நிரந்தர நிவாரணிகளான கல்விக் கண்ணையும் பொருளாதார மேம்பாட்டையும் மக்களுக்கு அளிக்க அரசாங்கம் கடமைப்பட்டிருக்கிறது.

தென்மாவட்ட கலவரங்கள் குறித்து ஜஸ்டிஸ் மோகன் அளித்துள்ள அறிக்கை கூட, 'காவல்துறையின் துப்பறியும் பிரிவு சரியாக இயங்கவில்லை' என்று சுட்டிக்காட்டுவதோடு நின்று விடவில்லை. அம்மாவட்டங்களில் கள்ளச் சாராயம், கந்து வட்டிக் கொடுமை ஆகியன மக்களை வாட்டுவதாகத் தெரிவிக்கிறது அவ்வறிக்கை.

இந்தக் கொடுமைகள் மறைய, பிழைப்புக்கு வழி செய்வதுடன், சுகாதாரம் மனவள மேம்பாடு ஆகியவற்றுக்கு உதவும் முழுமையான கல்வி, அனைத்துத் தரப்பு மக்களுக்கும் கிடைக்கச் செய்ய வேண்டும். வேலை வாய்ப்புகள் பெருகி, மக்களின் உழைப்பையும் நேரத்தையும் அவை பயன்படுத்திக் கொள்ள வேண்டும். உழைப்பும் ஊதியமும் அதிருப்திகளைக் களைய உதவும். கல்வியும் பண்பாடும் வேறுபாடுகளைத் தகர்த்து மனிதநேயத்தையும் மதிப்பையும் வளர்க்கும்.

இவற்றை சாத்தியமாக்க முயற்சி செய்யாமல் வெறும் சட்டங்களாலும் புதுப்புது சலுகைகளாலும் ஜாலம் காட்டுகிற அரசியல் இனி அதிக காலத்துக்கு எடுபடாது. அது ஹாரகிரி அரசியலாகத்தான் போய் முடியும்! •



**பிஸ்கட் மாதிரி வரிசையாய் அடுக்கின வீடுகள். வீட்டுக்கு வீடு இரண்டு தென்னம் பிள்ளைகள். நிழல் தரும் மரங்கள், கரண்ட் வசதி, கேபிள் கனெக்ஷன், தண்ணீர் வசதி, பஸ் வசதி.... சமத்துவ புர வாசிகள் கொடுத்து வைத்தவர்கள். இந்த எண்ணத்துடன்தான் கோவை சமத்துவபுரத்தில் அடியெடுத்து வைத்தோம். ஆனாலும் அங்கே சலசலப்புகள்...**



• சமத்துவபுரத்தின் முகப்பு

கோவையிலிருந்து சுமார் 16 கி.மீ. தூரம் பயணித்து, செட்டிபாளையம் அடைந்து பொடி நடையாய் ஒரு கி.மீ. நடந்தால் எட்டுவது கோவை சமத்துவபுரம். காலை மாலை இரண்டே பஸ்கள். தாற்காலிக ஏற்பாடு.

சமத்துவபுரம் கலைஞர் கையால் திறந்து வைக்கப்பட்டு ஒரு மாதம் கூட ஆகியிருக்கவில்லை. அதற்குள் சலசலத்துப் போயிருந்தது. காரணம், நாம் போயிருந்த போது அடித்துப் பெய்திருந்த மழை.



• வெள்ளியங்கிரி

"வீடெல்லாம் ஒழுகுதுங்க. எங்கே எப்படீன்னே தெரியலை. ராத்திரி வேளையில எங்கே இடிஞ்சுடுமோன்னு கூட பயமாப் போச்சுங்க!"

"எங்க வீடு ஒழுகலைன்னாலும் நிறைய கசியுதுங்க. கதவு இடைவெளி வழியா சாரல் வந்து தேங்கி ராத்திரி தூங்கவே முடியலைங்க!"

– எனச் சொல்லும் ஆண்கள், பெண்கள் நிறைய.

"வீடு கூட ஓரளவுக்குத்தாங்க. எங்க சமத்துவபுர ரேஷன் கடை ஒழுகறதைச் சொல்லவே வேண்டாம். நாலஞ்சு மூட்டை சர்க்கரை நாசம். அரிசியெல்லாம் நனைஞ்சு கடைக்காரர் புலம்பினதை நீங்க உங்க காதால கேட்டிருக்கணும்...!"

நாம் போன இரண்டு நாட்களிலும் ரேஷன் கடை பூட்டப்பட்டே! செட்டிபாளையத்தில் ரேஷன் பொருள்களை விநியோகிக்க ரேஷன் கடை ஊழியர்கள் சென்று விட்டதாகத் தகவல். அங்கும் இங்கும் மாறி மாறி அவர்கள் பணி புரிவதாகச் செய்தி. நூலகம் இங்கே உண்டு. ஆனால் ஆஸ்பத்திரியைக் காணோம்.

"ஆஸ்பத்திரி இல்லாம நாங்க பட்ட பாடு! அர்த்த ஜாமத்துல எம் பையன் காதுல ஒரு வண்டு புகுந்து



• சிறுவர் பூங்கா

# சலசலக்கும் சமத்துவபுரம்...

காரர்களின் குறைபாடு.

இருக்கிற சிறுவர் பூங்கா ராட்டினங்கள் நிலத்தில் சரிவர பதிக்கப்படாததால், அட்ஜஸ்ட் செய்து கொண்டு விளையாடும் சிறுவர்கள். ஆரம்பப் பள்ளியில் இரண்டு ஆசிரியர்கள். நிறைய மாணவர்கள். அக்கம் பக்கமிருந்தும் கூட பிள்ளைகள்.

மொத்தம் நூறு வீடுகள். குடும்பத்திற்கு தலா ஐந்து சென்ட் நிலம். ரூ. 35,000 மதிப்பீட்டில் வீடுகள். நல்ல விஸ்தீரண சாலை அமைப்பில் ஐந்து வீட்டுக்கு ஒரு குடி நீர்க் குழாய். குடிநீர்க் குழாய் இணைப்பு இருந்தும் வெளியே போய் போரிங் குழாயில் நீர் எடுத்து வரும் பெண்கள். தெருவுக்கெல்லாம் தாமிரபரணி, நொய்யல், காவேரி என பெயர் வைத்து விட்டு கலைஞர் வந்த போது இரண்டு நாட்கள் மட்டும் தண்ணீர் (குடிநீர்) விட்டனராம். அதன் பின்பு விடவேயில்லை. குடிக்க வெளியிலிருந்து 'போரிங்' தண்ணீர் கொண்டு வர வேண்டியிருக்கிறது என இப்பகுதி பெண்கள் குறைபட்டார்கள்.

பட்ட அவஸ்தை.. அவசர ஆத்திரத்துக்கு ஒரு ஆட்டோ கூட கிடைக்கலை. அடுத்த நாள்தான் டவுன் ஆஸ்பத்திரிக்குப் போனோம்.!" - பாதிக்கப்பட்ட ஒரு பெண்ணின் புலம்பல்.

ரேஷன் கடையை ஒட்டியிருந்த வணிக வளாகம் கூட பூட்டிய நிலையில். இன்னும் அது டெண்டர் விடப் படவில்லை. அதில் பெயிண்டால் எழுதப் பட்ட கட்டட விவர அட்டவணை, வரைபடம் மழையால் காணாமல் போயிருந்தது. சமத்துவபுர வாசிகள் காய்கறி வாங்கச் செல்ல வேண்டுமென்றால் கூட ஒரு கி.மீ. செல்ல வேண்டும். விடப் பட்டுள்ள இரண்டு பஸ்களும் நேரங்கெட்ட நேரம் என்பதனால் வேலை கிடைக்காமல் திரும்பி வருவதாக கூலிக்

மொத்த வீடுகளில் சரிபாதி செட்டி பாளையத்துக்காரர்களின் கைகளில். மீதியுள்ளவை பக்கம் பக்கம் மூன்று நான்கு

• பூட்டப்பட்ட வணிக வளாகம்



கிராமம் சார்ந்த ஏழைகளுக்கே. அங்கங்கே ஒன்றிரண்டு ஸ்கூட்டர்கள். டிவிஎஸ் 50 கள், மாருதி கூட! விருந்தினர்களாம்.

இதிலும் இட ஒதுக்கீடு முறை அமல் படுத்தப்பட்டிருந்தது. (SC 40%, BC, MBC 40%, O.C. 20%) கிறிஸ்துவர், முஸ்லீம் குடும்பங்கள் தலா இரண்டு இருப்பதாகத் தகவல். நாம் போன போது அவையும் திறந்திருக்க வில்லை!

ஓ.சி. ஒதுக்கீட்டில் ஒரே ஒரு பிராமணர் குடும்பம் மட்டுமே கண்ணில் பட்டது. பல வீடுகள் பூட்டப்பட்டேயிருந்தன. காரணம் கேட்ட போது, "இருக்காங்க. என்ன வந்து வந்து பார்த்துட்டுப் போயிட்டிருக்காங்க. இன்னும் குடி வரல!"

எதில் யார் குடியிருக்கிறார்கள் என்பதை விட அவர்கள் இன்னின்ன ஜாதி என்பதை ஒருவருக்கொருவர் அழுத்தமாய்த் தெரிந்து வைத்திருப்பது அவர்கள் பேச்சில் தெரிந்தது.

"பாருங்க... அந்த வீட்டில் குடியிருப்பவன் '——————' ஜாதி. அவனும் நானும் ஒண்ணாத் தான் பழகறோம். அவனும் எங்க வீட்டுக் குள்ள வர்றான். நாங்களும் அவன் வீட்டுக் குள்ள போறோம்!" என ஒருவருக்கொருவர் சொல்லிக் கொள்வதே இயல்பாய்.

மறுபுறமோ, வீடுகளின் அமைப்பையும், சாலை வசதியையும் பார்த்து, எல்லாவற் றுக்கும் மேலாய் முழுக்க முழுக்க இலவச மாய் தமக்கு ஒரு வீடு அமையவில்லையே என்கிற ஏக்கம் சுற்றுப்புறவாசிகளுக்கு இல் லாமல் இல்லை. "அதற்கெல்லாம் புண் ணியம் செய்திருக்க வேண்டும் என்பதை விட ஆளுங்கட்சிக்காரராய் உருவெடுத் திருக்க வேண்டும்...!" என்பதே அனைத்து சுற்றுப்புறவாசிகளின் பேச்சு.

இருக்கிற நூறு வீடுகளில் பெரும்பான்மை யானவர்கள் கட்சிக்காரர்கள் அல்லது அவர் களால் பரிந்துரைக்கப்பட்டவர்கள் என்பதே நம்மிடம் கிடைத்த செய்திகள். ஒரு சிலரைத் தவிர யாரும் தன்னைக் கட்சிக்காரர் என்று இனங்காட்டிக் கொள்ளவேயில்லை. அப் படிக் காட்டிக் கொண்டவரிடம் நம் சந்தே கத்தை வைத்த போது கொதித்துப் போனார்.

"என்ன சார் இது? எவ்வளவு பெரிய உன்னத விஷயத்தைத் தலைவர் செஞ்சிருக் கார். இதைக் காயப்படுத்தறீங்களே! இது கட வுளுக்கே அடுக்காது. நா வீடில்லாத ஏழை. 30 வருஷ தி.மு.க. தொண்டன். நானே விண்ணப்பம் கொடுத்து கலெக்டர் விசார ணைக்குப் போயி, டி.ஆர்.ஓ. விசாரிச்சு, தகுதி யானவன்னு முடிவான பின்னால கூட குலுக்கல்லதான் வீடு கிடைச்சது. இப்பக் கூட இங்கே எதிர்க்கட்சிக்காரங்கதான் நிறைய இருக்காங்க. ஒரு பேச்சுக்குச் சொல் றேன். இந்த சமத்துவபுரத்துக்கு ஒரு தேர்தல் வச்சுப் பாருங்க, அ.தி.மு.க. தான் ஜெயிக் கும்!"

இவர் இப்படிக் கூறினாலும் வெளி வட்டாரத்தில் சமத்துவபுர வீடுகள் 40,000 ரூபாய் வரை பேரம் பேசப்படுவதாகவே பலரின் பேச்சாக உள்ளது. தோண்டித் துருவி விசாரித்ததில் செட்டிபாளையம் பேரூ ராட்சித் தலைவரே (வெள்ளிங்கிரி தி.மு.க.) தம் ஆட்களின் மூலம் இப்படிப் பேரம் பேசு வதாகத் தகவல். இதைப் பற்றி சமத்துவபுர வாசிகளிடம் கேட்டபோது, பலர் பயந்து ஒதுங்க, சில பெண்கள் மட்டும் உணர்வு பூர்வமாய்ப் பொங்கி வந்தனர்.

"எம்.எல்.ஏ. வந்தாரு. கலெக்டர் வந்தாரு. நல்ல மனுஷங்க வீட்டை கட்டிக் கொடுத் துட்டுப் போனாங்க. எப்படியிருக்கு என் னன்னு வந்து பார்க்க வேண்டாமா? இங்கே ஆளாளுக்குப் பத்தாயிரம் கொடு, இருப தாயிரம் கொடுன்னு கேட்கறாங்க. மிரட்ட றாங்க. கலெக்டர் கிட்டே போய்ச் சொன்னா பட்டா கிடைக்காம செஞ்சுடு வோம்னு பயமுறுத்தறாங்க. நாங்களே கூலி நாழிக்குப் போறவங்க. எப்படீங்க முடியும்?"

– குடங்களுடன் நம்மிடம் அக்கம் பக்கம் பார்த்துக் கொண்டே பேசும் பெண்கள். பேசிய பெண்களும் பெயர், வீட்டு எண் சொல்லப் பயப்பட்டனர்.

அவர்களின் அச்ச உணர்வையும் சமத் துவபுர குறைபாடுகளையும் செட்டிபாளை யம் பேரூராட்சித் தலைவர் வெள்ளியங் கிரியிடமே வைத்தோம்.

"சமத்துவபுரம் நேரடியா கலெக்டர் பார்வை. தப்பு நடக்க வாய்ப்பேயில்லை சார். அதிலும் எங்க எம்.எல்.ஏ. ரொம்ப தங்க மான மனுஷன் (பேரூர் நடராஜ்). தலைவர் பேரை யாரும் கெடுத்திடக் கூடாதுன்னு ஸ்ட்ரிக்ட் ஆர்டரே எங்களுக்குப் போட் டிருக்கார். உங்ககிட்ட யாராவது இங்கே வீடு கிடைக்காதவங்க உளறியிருப்பாங்க!" – என்ற வரை இது வெளியிலிருந்து வந்த வார்த் தையல்ல என விளக்கினதும் கொஞ்சம் யோசித்துப் பேசினார்.

"35,000 ரூபாய் அரசு மானியம், 35,000 வங்கிக் கடன் போட்டு பஞ்சாயத்து மூல மாக வீடு கட்டுவதாகவே முதலில் ஏற்பாடு

செய்யப்பட்டது. பிறகு அந்த அரசு உத்தரவு மாற்றப்பட்டு முழுக்க முழுக்கவே இலவச மாகக் கலெக்டர் மேற்பார்வையில் செய்ய திட்டமிட்டுச் செயல்படுத்தப்பட்டது. அதை – அப்போது சொல்லிய வங்கிக் கடன் சம்பந்தமான தொகையை சிலர் நினைவில் வைத்துப் புரியாமல் உங்களிடம் அப்படிக் கூறியிருக்கலாம். மற்றபடி இங்கே அப்படி யாரும் பணம் கேட்பதாக இருந்தால் நாங் களே நடவடிக்கை எடுக்கத் தயாராய் உள் ளோம்.

"மேலும் 35,000 ரூபாய் எஸ்ட்டிமேட்டில் கட்டடத்திற்கு மேற்புறம், 'சுருக்கி' (சரியாக) போட முடியவில்லை. அதனால் மழையி னால் நீர்க்கசிவு சில வீடுகளில். இப்போது எம்.எல்.ஏ. முயற்சியில் நிதி ஒதுக்கிச் சரி செய்யச் சொல்லியிருக்கிறார். அத்திக்கடவு குடிநீர் வரும் வழியில் உடைப்பு ஏற்பட்டத னால் அன்றிலிருந்து ஊருக்கே நீர் வரல்ல. அது இப்போது சரி செய்யப்பட்டு தண்ணீர் விடப்பட இருக்கிறது.

"பூங்கா குறுகிய காலத்தில் ஏற்பாடு செய்ததனால் உறுதியாக இல்லாமல் போய் விட்டது. உடனடியாகச் சரி செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஆஸ்பிடலுக்கு ஒதுக் கப்பட்ட கட்டடம் இப்போது லைப்ரரியாக உள்ளது. லைப்ரரிக்கு கலெக்டர் தனியாக ஐந்து லட்சம் ரூபாய் சாங்ஷன் செய்துள் ளார். அது கட்டினவுடன் இப்போதைய லைப்ரரி கட்டடம் மருத்துவ மனையாக இயங்கும். இப்போது பஞ்சாயத்து செவி லியர் இருவர் தினம்தோறும் வந்து மருத்துவ உதவிகள் செய்து வருகின்றனர். பஸ் வச தியை இன்னும் கூடுதலாக்க போக்குவரத்துத் துறையில் கேட்டு எழுதியுள்ளோம். கட்டட பராமரிப்பு, சாலை ஒழுங்குகள் குறித்த விழிப்புணர்வு மற்றும், சமூக அக்கறை குறித் தும் இப்பகுதி மக்களிடம் ஒரு விழிப்பு ஏற் படுத்த, ஜாதி–மத உணர்வு கடந்து குழு ஒன் றையும் அமைக்கவுள்ளோம். இன்னும் ஓரிரு வாரங்களுக்குள் வணிக வளாகம் 'டெண்டர்' விடப்பட்டு அத்யாவசியப் பொருட்கள் விற்பனையும் துவங்கி விடும்!" என்றார்.

சமத்துவபுரத்தில் நிறைய சலசலப்புகள் இருந்தாலும் அதைவிட நிறைய நல்ல விஷ யங்களும் இருக்கின்றன. எந்த மூலையிலும் கலைஞரின் பெயர்ப் பலகை காணப்படா தது இச் சமத்துவபுரத்தின் அதிசயம். குறிப் பிடத்தக்க அம்சம்!

கட்டுரை, படங்கள் : **கேயெஸ்வி**

# அமரர் கல்கி நினைவு நாள்



சனிக்கிழமை, டிசம்பர் 5, 1998 மாலை 6 மணி. இடம்: ஆஸ்திக சமாஜம், வீனஸ் காலனி, சென்னை - 18

இறை வணக்கம்:

**டி.கே.எஸ். கலைவாணன்**

**எழுத்துலகில் அமரதாரா**

- அமரர் கல்கி பற்றி பல்வேறு அறிஞர்கள் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பாக வானதி பதிப்பகம் தயாரித்துள்ள நூலை வெளியிட்டு தலைமையுரை ஆற்றுபவர்:

**ப. சிதம்பரம், எம்.பி**

(முன்னாள் மத்திய நிதியமைச்சர்)

அமரர் கல்கி நூற்றாண்டையொட்டி அவர் உருவாக்கிய பத்திரிகையாளர்களான

**சாவி, எஸ்.வி.எஸ்., பகீரதன், பி.எஸ்.மணி**

ஆகியோர் கௌரவிக்கப்படுகிறார்கள்

7.00 மணி: பஜனை சம்பிரதாயம்

**பிரமீளா குருமூர்த்தி** வழங்கும் விளக்கவுரை.

7.15 மணி: பஜனை பாடல்கள் நிகழ்ச்சி பங்கேற்போர்: பிரமீளா குருமூர்த்தி, செதலப்பதி ஆர்.பாலசுப்ரமண்யம்,குரவி லலிதா,கே.கே.ஏ. தீபரேகா, நீலா ஜெயகுமார் (வயலின்), ஜெயகுமார் (மிருதங்கம்)

கல்கி ரசிகர்களும் வாசகர்களும் நிகழ்ச்சி யில் பங்கேற்று சிறப்புச் செய்ய அன்புடன் அழைக்கிறோம்.

— கல்கி கிருஷ்ணமூர்த்தி நூற்றாண்டு விழா குழு.

கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை.

உள்ளாட்சிகளுக்குத் தேர்தல் நடத்தப்பட்டதன் மூலம் ஜனநாயகம் அடிமட்டம் வரை பரவலாக்கப்பட்டிருக்கிறது என்று நாம் பெருமை கொள்ளாதபடி, அங்கு நடக்கும் ஊழல்களும், முறைகேடுகளும் நம்மைக் கலங்கடிக்கின்றன. சாலை போடுவதில் கட்டிங் (கமிஷனுக்குப் புதிய பெயர்) முறைகேடான குடிநீர் பைப் கனெக்ஷன், ப்ளான் அப்ரூவலுக்கு சம்திங் என்று கவுன்சிலர்களின் வாழ்க்கை நாளொரு திட்டமும், பொழுதொரு சுருட்டலுமாக இருக்கிறது.

# 'கவட்டுறவுகள்' திறக்கப்படும்!

'கட்டிங்' விவகாரம் காரணமாக 22 லட்ச ரூபாய் செலவு செய்து கட்டப்பட்ட வணிக வளாகம் ஒன்று இரண்டு வருட காலமாக திறக்கப்படாமல் இருப்பதை நம் கவனத்துக்குக் கொண்டு வந்தார்கள் அயன்புரம் பொதுநலச் சங்கத்தைச் சேர்ந்த ராமதாஸும், கண்ணப்பனும். கொஞ்சம் துருவிப் பார்த்தோம்.

55-வது வட்டத்தைச் சேர்ந்த அயன்புரம் மார்க்கெட்டில் 164, காய், கனி மற்றும் மட்டன் கடைகள். இந்தக் கடைக்காரர்கள் பெரும்பாலும் தரையில்தான் வியாபாரம் செய்து வந்தார்கள். ஒழுங்கற்ற முறையில் அமைந்திருந்த மார்க்கெட்டுக்குள் புகுந்து வருவதே பெரும்பாடாக இருந்தது. 1996-ல் மார்க்கெட்டுக்கு பக்கா கட்டடம் கட்ட மாநகராட்சி முடிவு செய்தது. முதல் கட்டமாக 64 கடைக்காரர்களை தாற்காலிகமாகத் தெருவில் வியாபாரம் செய்யச் சொல்லி காலி செய்து விட்டு, அந்த இடத்தில் கடைகளைக் கட்டும் பணி துவங்கியது. தெருவில் வியாபாரம் செய்து கொண்டிருந்த கடைக்காரர்கள், 'கடைகளைக் கட்டி முடித்தவுடன் நமக்குக் கொடுத்து விடுவார்கள்' என்று ஏக நம்பிக்கையுடன் காத்திருந்தார்கள். ஆனால் அவர்கள் போதாத காலமோ என்னவோ, கடைகள் கட்டி முடிக்கப்பட்ட போது, மாநகராட்சித் தேர்தலும் முடிந்து மன்றம்



• திறக்கப்படாத மார்க்கெட்

(Council) பொறுப்புக்கு வந்து விட்டது.

அதன் பிறகு எத்தனையோ முறை வியாபாரிகள் லோக்கல் மாநகராட்சி அலுவலர்களை அணுகி முறையிட்ட போதும், கடைகள் ஒதுக்கீடு செய்யப்படவில்லை. "லோக்கல் கவுன்சிலரோடு ஒரு அட்ஜஸ்ட்மென்ட்(?) செஞ்சுக்கோங்க" என்று வியாபாரிகள் அறிவுறுத்தப்படுகிறார்களாம். வெளியாட்களிடம் 'கட்டிங்' வாங்கிக் கொண்டு கடைகளை அவர்களுக்கு ஒதுக்க ஏற்பாடுகள் நடக்கிறதோ என்றும் வியாபாரிகள் சந்தேகப்படுகிறார்கள். "யார் யாருக்கு ஒதுக்க வேண்டும் என்று நாங்கள் லிஸ்ட் கொடுத்து விட்டோம். அவுங்கதான் பார்த்துச் செய்யணும். ஏன் தாமதிக்கிறார்கள் என்று தெரியவில்லை. இந்தத் தாமதம் காரணமாக, முறையாக கடைகள் ஒதுக்கப்படுமா? என்று ஒருவித பயம் இருக்கிறது" என்கிறார் மார்க்கெட் வியாபாரிகள் சங்கப் பொருளாளர் கனி. புதிதாகக் கட்டப்பட்ட ஒவ்வொரு கடைக்கும் என்ன வாடகை வசூலிக்க வேண்டும் என்றும் வியாபாரிகளோடு கலந்து பேசி முடிவும் செய்யப்பட்டு விட்டதாம்!

மாநகராட்சி என்ன சொல்கிறது? என்பதைத் தெரிந்து கொள்ள நான்காவது மண்டல அதிகாரி குருசாமியைத் தொடர்பு கொண்டோம். "யார், யாருக்குக் கடைகள் ஒதுக்குவது என்பதைப் பட்டியல் போடும் பொறுப்பு வார்டு குழுவுக்குத்தான் உண்டு. (வார்டு குழு என்பது அந்த மண்டலத்திலுள்ள கவுன்சிலர்களைக் கொண்டது) மூன்று தடவை வார்டு குழுவில் இந்த மேட்டர் வந்தும் ஒரு முடிவும் எடுக்க முடியவில்லை. ஆதலால் முடிவெடுப்பது தள்ளிப் போய்க் கொண்டே இருக்கிறது. விரைவில் முடிவெடுத்து விடுவோம்" என்றார் அவர். வார்டு குழு பட்டியல் போட்டு மாநகராட்சிக்கு அனுப்பினால், ஆணையர் அதை அங்கீகரித்து ஆர்டர் போடுவாராம்.



• பொருளாளர் கனி

மாநகராட்சியில் வணிக வளாகங்களை கவனிக்கும் பிரிவில் விசாரித்த போது, "இந்த விவகாரம் இன்னும் எங்கள் பார்வைக்கு வரவேயில்லை. ஆதலால் இங்கு தாமதம் என்ற பேச்சுக்கே இடமில்லை!" என்றார்கள்.

"கடைகள் கட்டி முடிக்கப்பட்டும் ஒதுக்கப்படாததால், தெருவில்தான் வியாபாரம் நடக்கிறது. இதனால் மார்க்கெட் சாலையில் சைக்கிளில் கூட செல்ல முடியாதபடி நெருக்கடி உண்டாகி, பல சமயங்களில் தகராறு உண்டாகிறது" என்கிறார் பொதுநலச் சங்க ராமதாஸ்.

"கட்டப்பட்ட கடைகளின் எண்ணிக்கைக்கும் அதிகமாக இருக்கிறது ஒதுக்கீடு கேட்பவர்கள் எண்ணிக்கை' என்று பிரச்னையை திசைதிருப்பப் பார்க்கிறார்கள் லோக்கல் அரசியல்வாதிகள். இது உண்மையல்ல; அவர்கள் சொல்கிறபடியே வைத்துக் கொண்டாலும் குலுக்கல் மூலம் கடைகளை ஒதுக்கீடு செய்யலாமே" என்கிறார்கள் வியாபாரிகள்.

சிங்காரச் சென்னைக்காக மட்டுமல்லாமல், ஊழலற்ற நிர்வாகத்துக்காகவும் மேயர் பாடுபட வேண்டும். இல்லையேல் குப்பைகளின் நாற்றத்தை விட ஊழல் நாற்றம் மேலோங்கி நிற்கும் என்பதில் சந்தேகமில்லை.

— சஞ்சயன்

படங்கள் : வெங்கடேஷ்

உலகப் புகழ்பெற்ற மலையாளக் கவிஞரும், சாகித்ய அகடமியின் செயலருமான கே. சச்சிதானந்தனின் 50 கவிதைகளை, 'சிற்பி' தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார்.

'சச்சிதானந்தன் கவிதைகள்' என்ற தலைப்பில், காவ்யா பதிப்பகம் அண்மையில் வெளியிட்ட இந்த நூலில், 'லால்குடி வயலின் வாசிக்கிறார்' என்ற தலைப்பில் ஒரு நீண்ட கவிதை இருக்கிறது.

'எந்த வேனிலும் குரூரமானதல்ல
லால்குடியை விட'

என்ற கடைசி வரிகள், நம்மை உண்மையிலேயே தூக்கிவாரிப் போடச் செய்தன.

சச்சிதானந்தன் நல்ல சங்கித ரசிகர். 'இராமநாதன் பாடுகையில்' என்று எம்.டி. ராமநாதனை வெகுவாக ரசித்து இவர் எழுதிய ஒரு கவிதை எம்.டி.ஆர். பாடுவதைக் கேட்கிற சுகத்தைத் தருகிறது.

'கஞ்சனது தங்க நாணயங்களைப் போல்
பாடகர் ஸ்வரங்
களைத் துடைத்துத்
தேர்ந்தெடுக்கிறார்'



• சச்சிதானந்தன்

என்று கவிதை முழுக்க எம்.டி. ராமநாதன் இசையை ஓகோ என்று புகழ்ந்திருக்கிறார்.

'குமார் கந்தர்வாவின் நினைவுக்கு' என்ற கவிதையில் இந்த இந்துஸ்தானி பாடகரின் இசையை உணர்ச்சி பூர்வமாக ரசித்திருக்கிறார்.

'எல்லா வர்ண இழைகளிலும் ஒரு மானம் காக்கும் ஆடையைத் தரிசிக்க முடிகிற காரணத்தால்தான் எம்.டி. ராமநாதன், லால்குடி, குமார் கந்தர்வா, ஜான் ஆப்ரகாம், பரணர், கபிலர், மீரா, பிளேக், பிரெக்கட், எலியட், நெருதா எனக் கலைகளின் நாயகநாயகியர் அனைவரோடும் இவரால் உறவாட முடிகிறது என்று முன்னுரையில் 'சிற்பி' எழுதியிருக்கிறார்.

இப்போது முழுக் கவிதையையும் படியுங்கள்:

வயலின் வாசிக்
கிறார் லால்குடி –

புதுப்பனியில்
மாஸ்கோ
தெருப்பூங்காவில்
கிதார் கேட்டு நான் நின்றபோது
கோர்க்கி சிலையின் கீழ்
ஒரு திக்கற்ற தாய்
புதிய பண்பாட்டைப் பூஜ்யம் டிகிரி
குளிரில்
கீழே தள்ளி வைத்தவள்
போர்த்திக் கொள்ளக் கனவுகள்
இல்லாமல்
நடுங்குகின்றவள்.

டேவிடும் டயானாவும் உடன்வர
நான் அலைந்த சரயோவாவில்

# லால்குடி

பாப்பிப் பூக்களுக்குப் பிணவாடை
கரும்பு வயல்களில் கரியும் கியூபா
குழந்தைகளின் சவங்களை மடியில்



• பிரபஞ்சன்



• தமிழன்பன்



• வைரமுத்து

வைத்துத்
தேம்பும் சோமாலியா
பிணக் குவியல்களுக்கு மேல்
டாலரின் சிரிப்போடு விரியும் சூரியன்
ஜெர்மனியின் கடிகாரத்தில்
மறுபடியும் ஹிட்லர்

துப்பாக்கிச் சூடுபட்ட பெண் சிங்கமாய்



• லால்குடி ஜெயராமன்

அலறுகிறது தம்புரா.
புல்லாங்குழல் துளையிலிருந்து
பற்களைக் கடிக்கும் ஓசை
சங்கிலும் நிறைகையில்
மணிகள் அழுகின்றன -
முன்பு தெய்வம் வசித்த என் வீட்டில்
அப்பாவைப் பிரிந்த பிள்ளைகள் போல்

வீராதி வீரர் பத்திரிகைப் பழங்கதையாய்
அழுகிப் போகும்போது
பைத்தியத்துக்குப் பயந்து
ஆத்மாவை ஒடுக்கிக் கொள்ளும்
இளைஞர்களின் விடியல்;
சிறை அறைக்குள் வியர்வை
சிந்தும் நண்பகல்;
காதலின் சவத்தைத் தோளிலேற்றி
வீட்டை விட்டு ஓடும் காதலியின்
நிறம் மங்கிய அந்தி;
அபயம் தேடுபவனின் கொடிய
இரவு

இரத்தத்தால் நிறைகிறது கடம்
செந்தி எரிகிறது மிருதங்கத்தில்.

ஒவ்வொரு படியிலும் நமக்குத்
தூக்குக் கயிறு காத்திருக்கிறது.

வயலின் வாசிக்கிறார் லால்குடி.

காம்போதியில் நான் கனவுகள்
காண்கிறேன்.

# வயலின் வாசிக்கும்போது...

புயல்காற்றுகள் பொங்குகின்றன.

ஒவ்வொரு வளைவிலும்
பிரிவுத் துயர் நமக்காகக் காத்திருக்கிறது.

வயலின் வாசிக்கிறார் லால்குடி -

மூழ்கிக் கொண்டிருக்கும் நர்மதைக்
கரைகளில்
சுழல் காற்று ஓய்கிறது.
கயையில் எரிகின்றன. கறுத்த குடிசைகள்
மரணத்தால் நிறைகின்றன
சட்லஜும் சரயுவும்
கும்பிடக் குனிந்தவர் கையில்
கொலைக் கத்தி நிமிர்கையில்
கூனி நிமிர்ந்து நடக்கிறாள்
காலில்லாதவன் நடனம் ஆடுகிறான்
ஊமை பாடுகிறான்
கறுத்த பெருவிரல் பூக்கிறது

எந்த வேனிலும் குரூரமானதல்ல
லால்குடியை விட.

**க**டைசி இரண்டு வரிகள் லால்குடியைப் பாராட்டவா, பழிக்கவா? கொஞ்சம் குழப்பமாக இருந்தது.

அன்று அவர் கவிதைகளை ரசித்துப் பாராட்டிப் பேசிய கவிஞர் தமிழன்பனிடம் கேட்டோம்:

''பாராட்டையே, 'கொன்னுட்டான்' என்று சிலர் சொல்லுவதில்லையா? அது போலத்தான் இதுவும். அவரது இசை எந்தக் குரூரத்தையும் மறைத்து நம்மை மயக்கிப் போட்டுவிடும் என்ற கருத்தில்தான் இந்தக் கவிதை அமைந்திருக்கிறது!'' என்றார்.

அன்று, முதல் பிரதியைப் பெற்றுக் கொண்ட எழுத்தாளர் பிரபஞ்சனிடம் விசாரித்தோம்:

"எனக்கு புரியத்தான் இல்லை. நிந்தனையாக அவர் நிச்சயம் எழுதியிருக்க மாட்டார். ஏனென்றால் அவர் இசை ரசிகர். சச்சிதானந்தனை மறுபடி நேரில் சந்திக்கிற போதுதான், இதற்கு உண்மையான விளக்கத்தைக் கேட்டுச் சொல்ல முடியும்!'' என்றார்.

விழாவில் பேசிய கவிஞர் வைரமுத்துவை அணுகினோம். 'இப்படி ஒரு சாதாரணக் கவிதையைக் கூடப் புரிந்து கொள்ள முடியாத ஜடமாக இருக்கிறீர்களே!' என்ற அலுப்பும் சலிப்பும் அவர் குரலில் வெளிப்பட்டது. "நீங்க எல்லாம் கூடவா இப்படி கவிதைக்கு அர்த்தம் கேட்பது?'' என்றவர், ''கவிதை எழுதுவதைவிட, கவிதை புரிதல் அல்லது புரிய வைத்தல் என்பது ஒரு சிக்கலான வேலை'' என்று கூறினார். "சம்ஸ்கிருதத்தில் நிந்தாஸ்துதி என்பார்களே, அந்த வகையைச் சேர்ந்தது. அதாவது, வஞ்சப் புகழ்ச்சி அணி என்று தமிழில் சொல்லுவார்கள். பாவேந்தர் பாரதிதாசன் கவிதை ஒன்று உண்டு: 'உன் கண்ணாடிக் கன்னத்தைக் காட்டி, என் நெஞ்சத்தைப் புண்ணாக்கிப் போடாதே, போ-போ-போ!' அந்த வகையைச் சேர்ந்தது தான் நீங்கள் குறிப்பிடுகிற சச்சிதானந்தன் கவிதையும்!'' என்று விளக்கமாகச் சொன்னார்.

நமக்கு ஞானம் போதாதுதான் போலிருக்கிறது என்று சமாதானப்படுத்திக் கொண்டு, லால்குடி ஜெயராமனிடம் இந்தக் கவிதை பற்றித் தெரியுமா என்று விசாரித்தோம். கவிதையைப் படித்துக் காண்பித்தோம்.

''இதில் என் கருத்தை நீங்கள் கேட்டிருக்கவே வேண்டாம். எல்லாருக்கும் எழுத்துச் சுதந்தரமும், பேச்சுச் சுதந்தரமும் இருக்கிற போது, அவரவர் ரசனைக்கு அவற்றை விட்டுவிட வேண்டும். நான் இந்த சர்ச்சையில் போய்ச் சிக்கிக் கொள்ள வேண்டுமா?' என்று நாசுக்காகச் சொல்லி விட்டார்.

கவிதைகளை மொழிபெயர்த்த கவிஞர் 'சிற்பி'யின் கருத்து என்னவோ?

முழுக் கவிதையையும் படித்த நீங்கள் - வாசகர்கள் - என்ன நினைக்கிறீர்கள்?

லால்குடியைத் தூக்கியிருக்கிறாரா, தாக்கியிருக்கிறாரா கவிஞர் சச்சிதானந்தன்?

தெரிந்து கொள்ளாவிட்டால் தலை ஒன்றும் வெடித்து விடாதுதான்.

என்றாலும் - ●

— சாருகேசி

''எந்தக் காரணம் கொண்டும் இனி மேலே ஆபீஸ்லே தூங்கறதில்லேனு முடிவு செஞ்சுட்டேன்.''

''ஏன்?''

''நான் தூங்கறதைப் பயன்படுத்தி என் பக்கத்து சீட்ல இருக்கிற சனி எனக்கு வர வேண்டிய லஞ்சத்தையெல்லாம் வாங்கி, தன் பாக்கெட்லே போட்டுக்கறான்!''

– கபிஸ்தலம் எஸ். இராஜேந்திரன்





''சாரி உமா! இன்னிக்கு சுண்டல் வாங்கித்தர போதுமான பைசா கொண்டு வரலை. மன்னிச்சுடு!''

''ஹூம்! காதல் என்றாலே இது போன்ற பெரிய அதிர்ச்சிகளையெல்லாம் தாங்கிக் கொண்டுதானே ஆக வேண்டும், சுரேஷ்!''

– வடபழனி பாலு



• வீரப்பன் ஓடி ஒளிந்த
கடம்பூர் வனப்பகுதி!

# அதிரடிப்படைக்கு வீரப்பன் கொடுத்த லேட்டஸ்ட் 'டிமிக்கி!'

*'2000 அதிரடிப்படை வீரர்கள் சுற்றி வளைப்பு... வீரப்பன் 24 மணி நேரத்தில் பிடிபடுகிறான்... போலீஸ் பிடி இறுகுகிறது!' என்றெல்லாம் செய்தித்தாள்களும், மீடியாவும் அலறவே, நாமும் அங்கே போய்ப் பார்த்தோம்....*

"இராத்திரி 11.00 மணிங்க. கூப்பிடு தூரத்துல தாங்க போலீஸ் வீரப்பனைப் பார்த்திருக்கு. அறுபது எழுபது போலீஸ் காரங்களாம். அத்தனை பேரும் வீரப்பனைப் பார்த்ததும் பயந்து போய் (?) பதுங்கிட்டாங்க. போலீஸுக்கு தகவல் சொல்லி கூட்டிட்டுப் போன எங்க ஊர்ப் பசங்க ரெண்டு பேரையும் கூட இழுத்துப் பதுக்க வச்சுட்டாங்களாம். போலீஸ்காரங்க பதுங்கியிருக்கிறதையோ, வீரப்பன் இருக்கறதையோ பத்தித் தெரியாத பக்கத்துத் தோட்டத்துக்காரர் பயிரை நாசம் பண்ண வந்த காட்டுப் பன்றியைப் பார்த்துச் சுட்டிருக்கார். அவ்வளவுதான்! போலீஸ்காரன் சுடறான்னு வீரப்பன் குதிச்சு ஓட, வீரப்பன்தான் சுடறான்னு அதிரடிப்படை மறுபடியும் பதுங்க... ஒரே கூத்துதான் போங்க!"

– ஈரோடு சத்யமங்கலம் வனப்பிரதேசம், குத்தியாலத்தூர் பஞ்சாயத்துக்குட்பட்ட கடம்பூர், கல்கடம்பூர், ஏரியூர், நடூர், மூலக்கடம்பூர் பகுதிவாசிகளிடம் கதை கதையாய் இதேதான் பேச்சு. அதில் தொனிக்கும் கிண்டலோ எக்கச் சக்கம்!

வீரப்பனை அதிரடிப்படை சுற்றி வளைத்ததாகக் கூறப்படும் (கடம்பூர் கேம்ப் - மூலைக் கடம்பூர்) ஸ்பாட்டுக்கு 25.11.98 அதிகாலை போன போது அதிரடிப் படைகள் திரும்பிச் சென்று கொண்டிருந்தன. அப்போது விட்டு விட்டுப் பெய்து கொண்டிருந்த மழையும்,

மேகமூட்டமும், அடர்ந்த புல்வெளி ஈரமும் வீரப்பனுக்குச் சாதகமாய் இருந்தது கண்கூடாகத் தெரிந்தது!

"அவர் கடவுளாப் பார்த்து எங்களைக் காப்பாத்த அனுப்பிச்சு வச்ச ஆண்டவர்ங்க. எப்படி வர்றார்? எப்படி மறையறார் என்பது யாருக்கும் தெரியாது. 2,000 போலீஸ் என்ன, 2 லட்சம் பேர் வந்தாக் கூட 'ஆண்டவரைப்' பிடிக்க முடியாது! இந்த மலைக்காட்டுல 3000 மைல் சுத்தளவு அவருக்கு அத்துபடி. ஒரு செடி மறைவில ஒளிஞ்சிருந்தாக் கூட இங்கிருக்கிற அதிரடிப்படையால அவரைக் கண்டு பிடிக்க முடியாது!" – என பழைய பல்லவி பாடும் கிராம மக்களும் இன்னமும் இருக்கத்தான் இருக்கிறார்கள்.

**19.11.98** அன்று கர்நாடக அதிரடிப் படை காட்டுக்குள் வீரப்பனைப் பார்த்து துப்பாக்கி சூடு நடத்த, அதிலிருந்து தப்பித்தவன் அன்று மாலை மூலக்கடம்பூர் பகுதியில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த



• வீரப்பன் நடமாட்டம் உள்ள நதிர்...

இளைஞனிடம் சாப்பிட ஏதாவது கொண்டு வரச் சொல்லிக் கேட்டிருக்கிறான். அப்போது, அதிரடிப்படை தாக்குதலில் தன் முகத்தில் காயம் பட்டதாகக் கூறியும் இருக்கிறான். அவ்விளைஞன் தன் தந்தையிடம் வந்து சொல்ல, அவர் அவன் இருப்பிடத்தை உறுதி செய்து கொள்ள வீரப்பனிடம் சென்று பேசிவிட்டு வந்ததாகவும், சாப்பாடு கொண்டு வருவதாகச் சொல்லிவிட்டு ஊர்ப் பிரமுகர் ருத்ரைய்யா மூலமாக போலீஸுக்குப் போக, ஒயர்லெஸ்ஸில் செய்தி பறக்க, அதிரடிப்படை வந்து சுற்றி வளைத்திருக்கிறது!

"ஏற்கெனவே ஃபாரஸ்ட்ல ஆடு, மாடு மேய்க்கறவங்ககிட்ட வீரப்பன் பற்றின தகவல் கிடைச்சா சொல்லச் சொல்லி ஏழெட்டு ஊர்களில் ஆட்கள் உண்டு. நானே வச்சிருக்கேன். அப்படியொருத்தன் சொன்ன தன் பேர்லதான் அதிரடிப்படைக்குத் தகவல் கொடுத்து வரச் செய்தேன்!" என்று துணிச்சலுடன் பத்திரிகைக்குப் பேட்டி கொடுக்கும் ருத்ரய்யா அப்பகுதி (கடம்பூர்) காங்கிரஸ் தலைவர். பல சந்தர்ப்பங்களில் தாமே வீரப்பன் பிடிபட உதவியாயிருந்து தவறிப் போனதாகவும் இனியும் விடாமல் போலீஸுக்கு உதவியாக இருக்கப் போவதாகவும் தெரிவித்தார்.

இவர் இருப்பதாகத் தகவல் சொன்ன இடத்தில் வீரப்பன் இல்லையாம். அதற்குள் இடம் மாறி (இரவு 11.00 மணி) வேறொருவனிடம் உணவு வாங்கிச் சாப்பிட்டு விட்டுப் போனபோது அவனுடன் நான்கு பேர் இருந்தனராம். சாப்பிட்டு விட்டுக் கை கழுவிக் கொண்டிருந்தபோது அவனறியாமல் அதிரடிப் படை போலீஸார் 60 க்கும் மேற்பட்டவர்கள் சுற்றி வளைத்த அதே நேரத்தில், பக்கத்துத் தோட்டத்தில் இது தெரியாத (அரப்புள்ளி கவுண்டர்) பன்றிக் கூட்டத்தைச் சுட – வீரப்பன் தாக்குவதாக போலீஸாரும், போலீஸ் தாக்குவதாக வீரப்பனும் சுட, ஓட ஒரே களேபரம் என்பது அனைவரிடமும் கிடைக்கும் ஒரே மாதிரியான தகவல்.



• ருத்ரய்யா

இது சம்பந்தமாய் இந்த வீரப்ப ஆபரேஷனை முன்னின்று நடத்தின உயர் அதிகாரி ஒருவரை சந்தித்துக் கேட்டபோது –

பல வருடங்களாகக் காட்டுக்குள் சுற்றித் திரியும் நரி இந்த முறை மிக நெருக்கத்தில் வந்தும் தப்பி விட்டதாக அறிவித்தவர் பேட்டிக்கு மறுத்துவிட்டு, "வீரப்பன் நிச்சயமாகப் பிடிபட்டே திருவான்" என்று உறுதியாகச் சொன்னார். ◉

கட்டுரை, படங்கள் : **கேயெஸ்வி**



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
சென்னை- 600 063. தொலைபேசி : 2376129
**Cell. 98410-50464 (Direct - Swamiji)**



# ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 50 மாணவர்களும் 20 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி ( 70 பேருக்கு ) | ரூ. | 500/- |
| மதிய உணவு ( இனிப்புடன் ) | ரூ. | 1,000/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 750/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 300/- |
| ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு ( உணவு, உடை, கல்வி ) | ரூ. | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 40,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/DD/MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி சர்வாத்மானந்தர்.

வருமான வரி விலக்கு **( Section 80 G )** உண்டு

ADCHOICE

# ஸ்ரீரங்க பக்தர் சின்ன மௌலானா!



திருப்பதிக்குப் போனால் அவரைச் சந்திக்கலாம் என்று தகவல் கிடைத்தது. திருச்சானூரில் பிரும்மோத்ஸவம் நடக்கிறது. தமிழகம், ஆந்திரம் – இரு மாநில நாகஸ்வர வித்வான்களும் இன்னும் பத்து நாட்களுக்கு அங்கேதான் இருப்பார்கள். முறை வைத்துக் கொண்டு மாற்றி மாற்றி அங்கே இசை மழை பொழிந்து கொண்டே இருப்பார்கள். அத்தனை பேரிலும் சின்ன மௌலானா சாஹிபுக்குத் தனியே ஒரு ரசிகர் சமுத்திரம் அங்கே உண்டு– பெருமாளும் தாயாரும் உட்பட...

கேள்விப்பட்டதும் உடனே கிளம்பினோம், ஷேக் சின்ன மௌலானாவைத் திருப்பதியிலேயே சந்தித்துவிட. இந்த வருஷம் ம்யூசிக் அகடமியின் சங்கீத கலாநிதி, இந்த ஸ்ரீரங்கத்துக்காரர்தான். பால் மணம் மறப்பதற்குள் இசை மணத்தைப் பிடித்துக் கொண்டுவிட்ட இந்த எழுபத்தி நாலு வயது நாதப் பழத்துக்கு இசையைத் தவிர வேறெதுவும் தெரியாது. தாம் உண்டு; தம் இசை உண்டு. ஆறாம் வகுப்பைத் தாண்டாத பள்ளிப்படிப்பு. எல்லாம் அனுபவப் பாடம்தான். ஸ்ரீரங்க நாதரிடம் பக்தி கடந்த ஓர் ஆத்மார்த்த சிநேகிதம். அதனால்தான் ஆந்திர மாநிலத்தில் கரவடி என்கிற கிராமத்தில் (ஓங்கூர் மாவட்டம்) முன்னூறு வருஷமாக வாழ்ந்து வந்த வம்சத்தில் முதல் முதலாக இடம்பெயர்ந்த பெயர் இவருக்கு. ஸ்ரீரங்கத்தில் வீடு வாங்கிக் கொண்டு வந்து அமர்ந்தவருக்கு, பிற



• காசிம், பாபு

சம்பிரமும் படாடோபமும் ஜபர்தஸ்தும் விரல் நுனி வித்தை தந்த கர்வ சந்தோஷமும் எழுதித் தீரும் விஷயமில்லை.

அந்தக் கடலை நீந்திக் கடந்து 'ஸ்ரீரங்கம் பார்ட்டி' இருக்குமிடத்தை அடைந்தோம்.

''அடடா, தாத்தாவைப் பார்க்க வந்தீங்களா? அவருக்கு உடம்பு முடியலை. எங்களை வாசிக்கச் சொல்லிட்டு...''

ஸ்ரீரங்கம் போயாக வேண்டும். நம் ஏமாற்றத்தை உணர்ந்து, கொஞ்சம்போல் அதனைக் குறைக்கும் உத்தேசத்துடன் தம் 'குரு'வைப் பற்றிப் பேச ஆரம்பித்தார் காசிம்.

ஷேக் சின்ன மௌலானாவின் இசை வாரிசு. அவரது ஒரே மகள் வயிற்றுப் பேரன்.

''தாத்தாவுக்கு ராஜரத்னம் பிள்ளைதான் மானசிக குரு. அவரோட நூற்றாண்டு விழா நடக்கிற சமயத்தில் இவருக்கு 'சங்கீத கலாநிதி' விருது தர்றது ரொம்பப் பொருத்தம் இல்லையா? அந்த ஒரு சந்தோஷம்தான் அவருக்கு. மற்றபடி 'விருது'க்காக சந்தோஷப்பட்டுத் துள்ளிக்குதிக்கிற வயசையெல்லாம் அவர் கடந்தாச்சு.''

வித்வான்களைப் போல சென்னைக்கு இடம் பெயரும் எண்ணம் ஒருபோதும் வந்ததில்லை. ரங்கநாதரின் அருகில் இருப்பதில் தீராத ஆனந்தம்.

திருச்சானூரரை நெருங்கியபோது, கரைபுரளும் உற்சாகத்துடன் மக்கள் கோயிலை நிறைத்து இருந்தார்கள். கூட்டத்தை நீந்திக் கடந்து கோயிலதிகாரி கிரிஜாபிரசாத்திடம் மௌலானா சாஹிப் எங்கே இருக்கிறார் என்று விசாரித்தோம்.

''ஸ்ரீரங்கம் பார்ட்டியா? கூட்டிட்டுப் போப்பா'' என்று துணைக்கு ஒருவரைச் சேர்த்துவிட, கெஸ்ட் ஹவுஸ் மாடிவரை வந்து வழிகாட்டியவர், கிளம்புமுன் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார்.

''பெரியவர் இல்லைன்னு நினைக்கிறேன். அவர் பேரன்தான் இருக்கார் இங்கே. மூணு நாளா வாசிக்கறதும் அவர்தான்.''

கவலையுடன் காரிடாரில் நடந்த போது கண்ணில் பட்ட அறைகளிலெல்லாம் காற்றில் ஆடிய சரிகை வஸ்திரங்கள். கொத்துக் கொத்தாகத் தொங்கிய சீவாளிகள். சவ்வாது மணமுடன் உரத்த குரலில் ரகளையாகப் பேசிச் சிரித்துக் குதூகலித்துக் கொண்டிருந்த ஆஜானுபாகு வித்வான்கள். அவர்தம் சிஷ்யர்கள். அங்கே ஜிகினாப் போர்வையுடன் போட்டோவுக்கு சிரித்து நிற்கும் காஸிநாடா சங்கரன்பிள்ளை. இங்கே தம் வாத்தியத்தை வருடிவிட்டு அழகு பார்க்கும் மாம்பலம் சிவா. ''பாபூ... இக்கட ராரா...''- காற்றைக் கிழிக்கும் குரலே அந்தத் தவில் வித்வானுக்கு விஸிட்டிங் கார்ட். வெற்றிலை நிறைந்த வெள்ளிப் பெட்டிகள். ஏந்தி நிற்கும் பாலகர்கள். எடுக்க ஒரு சிடன். கொடுக்க ஒரு பாலன். அரை நூறு நாகஸ்வர வித்வான்களை ஒரே மாடியில் நிறுத்திப் பார்க்கக் கிடைத்த வாய்ப்பு ஒரு பேரதிர்ஷ்டம்.

சின்ன மௌலானா சாஹிபுக்கு ராஜரத்னம் பிள்ளை இசையின் மேல் ஈடுபாடு வந்ததே ஒரு தனிக்கதை.

சின்ன மௌலானாவின் பரம்பரையே நாகஸ்வர வாசிப்பினால் புகழ்பெற்றது. அவரது தந்தை காஸிம் சாஹிப் அந்நாளில் ஆந்திரம் முழுவதும் புகழ்பெற்ற கலைஞர். வயிற்றுக்கு விவசாயம்; மனசுக்கு நாகஸ்வரம். அப்பாவிடம்தான் அரிச்சுவடி கற்றார் ஷேக்.

பிறகு நாகஸ்வரத்துக்கென்றே மிகவும் புகழ்பெற்ற சிக்கலூருப் பேட்டைக்குச் சென்று 'உயர் படிப்பை'த் தொடங்கியிருக்கிறார். அங்கே இவருக்கு குருவாக அமைந்தவர் ஷேக் ஆதம் சாஹிப்.

தமது பன்னிரண்டாவது வயதில் தனியே சிறு சிறு கச்சேரிகள் வாசிக்கத் தொடங்கியபோது, ஒரு நாள் ரேடியோவில் ஒரு நாகஸ்வரக் கச்சேரியைக் கேட்கும் வாய்ப்புக் கிடைத்தது சின்ன மௌலானாவுக்கு. வாசிக்கப்பட்ட ராகம், தோடி. வாசித்தவர் ராஜரத்னம் பிள்ளை. கேட்க வேண்டுமா? இசையிலேயே கரைந்து கொண்டிருந்த சின்ன மௌலானாவின் மனத்தில்

ஒரு கல்லைப் புரட்டி ஊற்றைத் திறந்து விட்டது பிள்ளைவாளின் சங்கீதம்.

இது என்ன வாசிப்பு! இப்படிக்கூட உயிரை உருக்கிப் பொழிய முடியுமா? என்று சிலிர்த்துப் போன சின்ன மௌலானா, பிறகு தேடித்தேடி ராஜரத்தினம் பிள்ளையின் கிராமபோன் தட்டுகளைச் சேகரித்துக் கேட்க ஆரம்பித்தார்.

அன்று வரை அவருக்குத் தெரிந்தது ஆந்திர முஸ்லிம் கலைஞர்களின் வாசிப்புப் பாணி மட்டுமே. ராஜரத்தினத்தைக் கேட்ட பிறகு தஞ்சாவூர் பாணி மேல் தனிக் காதல் பிறந்து விட, எப்படியாவது தஞ்சை சென்று அதனைக் கற்றுக் கொண்டு விடத் தணியாத ஆர்வம் கொண்டு விட்டார்.

உடனே புறப்பட்டுத் தமிழகம் வந்தவருக்கு குருவாக அமைந்தவர்கள் நாச்சியார்கோவில் ராஜம் - துரைக்கண்ணு சகோதரர்கள்.

இந்தச் சகோதரர்கள் வாசித்தது, கடைந்தெடுத்த ராஜரத்தினம்பிள்ளைப் பாணியில். கொஞ்சம் அசந்து, கண்ணை மூடிக் கொண்டு விட்டால் வாசிப்பது இவர்களா? பிள்ளைவாளேதானா? என்று சந்தேகம் வந்து விடுமாம்.

ராஜரத்தினம்பிள்ளையின் பாணியைக் கற்க இவர்களை விடச் சிறந்த குரு அமைவதற்கில்லை என்று நம்பி, சேர்ந்து விட்டார் ஷேக்.

வருஷத்தில் மூன்று மாதம் குருகுலவாசம். பிறகு கரவடிக்குப் போய் கற்றுக் கொண்டதைப் பயிற்சி செய்து மெருகேற்றிக் கொள்வது. மறுபடி மூன்று மாதம் குருகுலவாசம். மறுபடி பயிற்சி. இப்படித் தன்னைச் செதுக்கிக் கொண்டார் ஷேக்.

**1956**-ம் வருடம். சேலம் மாரியம்மன் கோவிலில் முதல்-முழு-பெரிய கச்சேரி.

தாம் கற்ற தஞ்சைப் பாணி வாசிப்பை அங்கேதான் அரங்கேற்றினார்.

ராஜரத்தினம் பிள்ளை இறந்து சில வருடங்களே ஆகியிருந்த காலம் அது. சின்ன மௌலானாவின் வாசிப்பைக் கேட்ட ரசிகர்கள், "பிள்ளை மறையவில்லை" என்று உற்சாகக் குரலெழுப்பி ரசித்தார்களாம்!

அந்தக் கச்சேரியின் அபார வெற்றி, மௌலானாவை முதல் வரிசை வித்வானாக உயர்த்தியது மட்டுமில்லை; முதல்தர பக்த

**(தொடர்ச்சி 65-ம் பக்கம்)**



புரோக்கர்:

“அது மேல் மாடிங்க! இன்னும் இரண்டு மாடி தண்ணிக்குள்ளாற இருக்கு! முழு வீட்டுக்கும் வாடகை ரூ.500 தாங்க. ரொம்ப சீப்புங்க...”

• • •

“**உங்களுக்குக் கொஞ்சம்கூட ரசனையே இல்லேங்க. உங்கலூடு கொஞ்சம், கொஞ்சமா முழுகிறதைப் பார்த்து ரசிங்க.**”

• • •

“**வீடு முழுகிடுச்சேன்னு கவலைப் படாதீங்க. இன்னும் ஒரு மாடி பாக்கியிருக்கே...**”

• • •

“**இப்போ வந்து சண்டை பிடிக்கிறீங்களே? வீடு புடிச்சுக் கொடுக்கும் போதே உங்களுக்கு நீச்சல் தெரியுமான்னு கேட்டேனா இல்லையா?**”

• • •

“அதோ! அந்த வீடுதாங்க! வாடகை ரொம்ப சீப்புங்க. 500 ரூபாதான்! ஆனால் ஒரு ஹெலிகாப்டர் வாங்கிட்டா போதும். மழைக்காலத்திலே மொட்டை மாடியிலே இறங்கிடலாம்.”

**— வி.பி. கிருஷ்ணசாமி**



பத்தேகாலுக்குத்தான் அட்சதை தருவார்கள். முகூர்த்தம் ஒன்பது - பத்தரை. இருந்தாலும் மித்ரா வீட்டார் மகா சாங்கியக்காரர்கள். ஒரு சடங்கு விட்டு வைக்கவோ, அவசரப்படவோ மாட்டார்கள்.

கடைசி கால் மணி நேரத்தில்தான் மாங்கல்ய தாரணம் நடக்கும். மூன்றாம் வருஷம் மித்ராவின் அக்கா சௌம்யா கல்யாணத்தில் போய் உட்கார்ந்து இப்படி லேட் ஆகி ஆபீஸுக்குப் பதினொன்றுக்கோ, அதிகமாகவோ போன ஞாபகம்.

கல்யாணி உட்கார்ந்திருந்த ஆட்டோ, டிரைவர் விநாயகம் வீட்டெதிரில் நின்றிருந்தது.

''ஒரு டூ மினிட்ஸ் மேடம்! ஊர்லருந்து தங்கச்சி வந்திருக்கான்னு பையன் வந்து சொல்லிட்டுப் போனான். தலைய காட்டிட்டு வந்துர்றேன்.''

அவள் அனுமதி பெற்றுத்தான் வீட்டிற்குள் போயிருந்தான். அது அலுவலகம் போகிற வழி. இரண்டு நிமிஷம் ஐந்து நிமிஷமாகப் போகிறது. டிரைவர் விநாயகம் வரவில்லை.

வரட்டும். பத்து நிமிஷமானாலும் பரவாயில்லை.

அவனைக் 'கடிந்து கொள்ள முடியாது. மாமூல் ஆட்டோ என்பதற்கு மட்டுமல்ல.

மித்ராவின் கல்யாணத்திற்கு அவள் போகப் போவதில்லை. நேராக ஆபீஸுக்குப் போகிறாள். அது அவனுக்குத் தெரியும்.

பாவம் மித்ரா! ரொம்ப எதிர்பார்ப்பாள். தன்னைவிட நாலு வயது இளையவள். இருபத்து நாலிலேயே அவளுக்குத் 'தாலி பாக்கியம்' லபித்து விட்டது!

கல்யாணி கசப்போடு சிரித்துக் கொண்டாள். இந்தப் பெண்கள் ரேஷன் கியூவில் மண்ணெண்ணையோ, பாமாயிலோ கிடைத்து விட வேண்டும் என்று பறப்பது போல் இந்தக் கல்யாணத்துக்கு என்ன பறபறக்கிறார்கள்.

இத்தனைக்கும் மித்ராவின் அக்கா சௌம்யா கல்யாணம் ஒரு தோல்வி.

கியூவில் மண்ணெண்ணெய் கிடைக்காமற் போனவர்கள் மன இடிவு தனக்கு வந்துவிடக் கூடாது என்று என்ன அலை அலைந்தாள்.

கல்யாணத்திற்குக் கட்டாயம் போக வேண்டும். போவான் என்றுதான் விநா- டிரைவர் விநாயகத்தின் ஆட்டோ ஸ்டாண்ட் பெயர்- எதிர்பார்த்தான். அவன் உயிர்ச் சிநேகிதி என்று விநாவுக்குத் தெரியும்.

ஆட்டோ ஸ்டாண்ட் கல்யாணி வசிக்கிற தெரு முனை. அவன் ஆட்டோ கொண்டு வந்து நிறுத்தி நாலு வருஷமாகப் போகிறது. அவன் பஸ் சவாரி நிறுத்தி ஆட்டோ ஏறத்

**வையவன்**

தொடங்கி மூன்று வருஷம்.

அவள் குடும்பமே அவனுக்குத் தெரியும். ரிடையராகி பென்ஷன் பேப்பர் எங்கோ சிக்கிவிட, அதற்கு மல்லாடிக் கொண்டிருக்கும் அப்பா, எப்போதும் வாழ்க்கையைச் சபிக்கிற அம்மா, நாலுபேர் போல சுரிதார் அணிய முடியாமல் சலிக்கிற ப்ளஸ் டூ படிக்கிற தங்கை, பி.எஸ்ஸி., படிக்கும் தம்பி.

எல்லாம் தெரியும்.

அவளது ரிசப்ஷனிஸ்ட் உத்தியோகத்தில், ஒற்றைச் சம்பளத்தில் குடும்பச் சக்கரம் முக்கல் முனகலோடு சுற்றுவதும் தெரியும்.

பல கல்யாணங்களுக்கு அவன் ஆட்டோவிலேயே போய் கல்யாணி தலை காட்டி அட்சதை தூவி மொய் எழுதி வந்திருக்கிறாள்.

அவன் சாட்சி.

அவர்கள் எல்லாம் அவ்வளவு நெருக்கமில்லை. இந்தக் கல்யாணம் அப்படியல்ல. மித்ரா மிக மிக நெருக்கம். எல்லோருக்குமே தெரிந்த விஷயம் அது.

கல்யாணத்திற்குப் போய் நின்றவுடனே ஒப்பீடு தொடங்கிவிடும்.

இருபத்தொன்பதில் தான் வெறுங் கழுத்தோடு நிற்க, இருபத்தி நாலில் அவள் கழுத்தில் மஞ்சள் கயிறு ஏறுவதை மௌனமாகவோ, வாய் விட்டோ அலசுகிற கூட்டம் எல்லாக் கல்யாண மண்டபங்களைப் போல் அங்கும் இருக்கும். அதற்கே போக விரும்பவில்லை.

வரவர இந்த உணர்வு ரொம்பத்தான் உறுத்துகிறது. தனக்குக் கல்யாணம் ஆகாதது என்னவோ தன் குற்றம் என்கிற மாதிரி.

ஏதோ பெண்ணாகப் பிறந்த ஒவ்வொருத்தியின் இறுதி லட்சியமே அவளுக்குச் சீக்கிரம் கல்யாணம் ஆகிவிட வேண்டும் என்ற எண்ணம், சதர் வெளியில் அங்கிங் கெனாதபடி எங்கும் பரவிவிட்ட பிரமை.

வேளை வரவேண்டும் என்று வாய்ப் பசப்பலாகப் பேசுகிறவர்களுக்குக் கூட வரத் தாமதிக்கும் அந்த வேளைத் தவறுதலுக்கு தன் துரதிருஷ்டமே காரணம் என்ற உள்ளெண்ணம்.

விநா மட்டும்தான் அவளை நன்கு புரிந்து கொண்டவன். அவன் தன்னை விட மூத்தவன். முப்பத்திரண்டு. தன் மாதிரியே குடும்பச் சூழ்நிலை. தன் மாதிரியே, தப்பித்துக் கொண்டு. தன்னலம் தன் சுகம் தேடாமல் குடும்ப வண்டியில் சக்கரம் தள்ளுபவன். எத்தனை வகையான ஆண்கள். அலுவலகம், வெளியுலகம். அடடா எத்தனை வழிசல்கள்! எத்தனை பேடி விண்ணப்பங்கள்! எவ்வளவு ஊமைக் காயங்கள்!

இருபத்தொன்பது வரை கட்டுவிடாமல் முகப் பொலிவு மங்காமல் ஒரு கல்யாணமாகாத பெண் தென்பட்டால் மனுஷபுத்தி என்னமாய் வக்கரிக்கிறது!

விநாவும் அவளை ஏற்றிச் சென்ற முதல் சவாரியில் இப்படிச் சிறிது அசடு வழிந்திருப்பானோ!

சிச்சீ... அவன் ஜென்டில்மேன்.

ஜென்டில்மேனானால் என்ன? முதலில் மேன். ஆண். கல்யாணமாகாதவன்.

நான் பெண். கல்யாணமாகாதவள்.

இருந்திருக்கலாம். இப்போது இல்லை. அவனுள்ளிருந்த மேன் மாறி ஜென்டில்மேனாகி ரொம்ப நாள் ஆகிவிட்டது.

அவன் எதெதற்கு சாட்சியாக இருந்திருக்கிறான்!

மித்ராவின் அக்கா சௌம்யா விவாகரத்திற்கு, தக்க விவேகமான துணையில்லாததால் வக்கீலிடம் கல்யாணி அலைந்திருக்கிறாள் அவன் ஆட்டோவில்.

கணவனை விட்டு ஓடி வந்து பதினெட்டு நாள் புகலிடம் தேடி வந்தாளே பூர்ணிமா. அந்தக் கணவன் வீட்டுக்குக் கல்யாணி அலைந்திருக்கிறாள் அவன் ஆட்டோவில்.

ஐந்தாறு வரன்கள் அவளைப் பார்க்க வந்தபோதெல்லாம்

அவர்கள் திரும்பிப் போக அவன் ஆட்டோவைத்தான் அமர்த்த வேண்டி வந்திருக்கிறது.

விநா ஒரு நபரல்ல.

இன்னும் துடிக்கும் கருணை, பரிவு, கண்ணியம் என்ற மனுஷத்தன்மையின் சிறு துளித் தத்தளிப்பு. ஒருவேளை அதுவும் வற்றிப் போகலாம். ஹ^ பாதர்ஸ்?

"கல்யாணி உன் கல்யாணம் என்ன வாயிற்று? எப்போ எங்களுக்கெல்லாம் சாப்பாடு போடப்போறே? நீயா முயற்சி எடுக்க வேண்ணா ஒங்க வீட்டிலே யாருக்கும் ஒறைக்கப் போறதில்லே. கல்யாணி பருவத்தே பயிர் செய்யணும்மா."

ஆட்டோக்கார விநாயகத்திற்கும் அவளுக்கும் சிநேகமாம் என்ற கசமுசல், டைனிங்டேபிளில் அவளில்லாத போது ஒடி மறையப் பின் எத்தனை ஞானோபதேசங்கள்!

பொறுக்க முடியாமல் ஒருத்தியிடம் கல்யாணி முகத்திலறைந்தாற்போலச் சொல்லி விட்டாள்.

"த பாரு நீலா! நான் கல்யாணம் பண்ணிக்கறதாயில்ல. அந்த ஆட்டோக்காரனை வச்சிண்டிருக்கேன். நோ ட்ரபிள். போறுமா? நீங்கள்லாம் கல்யாணம் பண்ணி, காதல் பண்ணி என்ன கிழிச்சு எந்தக் குப்பை – என்ன குப்பை கொட்டினீங்க?"

"அடியேய், அடியேய்ய்" என்று நீலாவுக்கு உடல் நடுங்கியது கண் கூடாய்த் தெரிந்திருந்தது. அவள் நம்பி விடப் போவதில்லை. இருந்தாலும் தங்கள் 'டேபிள் வம்பு' ரகசியத்தை மோப்பம் பிடித்து கல்யாணி இந்தப் போடு போடுவாள் என்று எதிர்பார்க்கவில்லை. ஒரு வாரம் அலுவலகத்தில் அவளைச் சுற்றி மயான அமைதி.

கல்யாணிக்கும் ஒரு குரூர திருப்தி. தினவெடுத்த நாக்குகளை ஒரு வாங்கு வாங்கிய நிறைவு.

என்ன, வாய் கொழுத்தவள் என்று விமர்சனம் நிலவும்! ஹூ கேர்ஸ்?

இப்படிச் சொன்னதை யாரிடமாவது சொல்லிச் சிரிக்க வேண்டும் போலிருந்தது. விநாவிடமே சொன்னாள், சிரித்துக் கொண்டே.

அவன் சட்டென்று வண்டியை நிறுத்தினான்.

"என்ன விநா?"

மெல்லிய விசும்பல்.

"விநா... விநா... விநா..."

அவன் வாய்விட்டு ஒரு பெண் மாதிரி அழுதான். என்ன இவன்? இவ்வளவு அசடா! இவனைப் போய் ஜென்டில்மேன் கிண்டில்மேன் என்று நினைத்தோமே!

ஒருவேளை நான்தான் வெறுப்பேறி வக்கரித்துப் போனேனோ! சீ, இதைப் போய் இவனிடம்...

ஆனால் இவன் வெறும் இவன் இல்லையே! நானாய் அப்படி நினைத்தேனா? இப்படிச் சொல்வது இவன் தப்பாக எடுத்துக் கொள்ளத் தானே தூண்டியது போலிருக்குமென்று நினைக்கத் தவறிவிட்டேனா...

சே, இவன் ஏன் அழுகிறான் இதற்கு?

அன்று ஐந்து நிமிடம் கல்யாணி மௌனமாயிருந்தாள், அப்புறம் தொண்டை கனைத்துப் பேசினாள்.

"ரொம்ப ஸாரி விநா."

"இனிமே நீங்க வேற ஆட்டோவில் போறதா இருந்தாலும் போங்க மேடம்!" கம்மிய தொண்டை.

"ப்ச்! இதான் கோழைத்தனம். அத விடு. நீ ஏன் அழுதே?"

இன்றுவரை விநா அதற்குப் பதில் சொல்லவில்லை. அவன் பார்வை, அவன் காட்டும் மரியாதை இவற்றில் ஒரு மாற்றம். கூடுதல் பரிவு. கை கூப்பும் கருணை.

"விநா, எனக்கு இது பிடிக்கலப்பா. பீடம் உயர்த்தி நீயும் என்னை ஒரு விலக்கத்தில் வச்சுடாதப்பா."

கல்யாணி கெஞ்சவில்லை. பார்த்தாள். புரிந்திருக்கும். அவன் மாற்றிக் கொள்ளவில்லை.

திடீரென்று ஒரு நாள் ஆட்டோ பயணத்தில் அவன் சிரித்தான்.

"என்ன மேடம் சிரிக்கிறீங்க?"



"புது படத்துக்கு பூஜை போட ஜோசியரிடம் நான் பார்க்கப் போனது தப்பாப் போச்சு!"

"ஏன்?"

"சிம்மராசி, குரு பார்வைன்னு இப்பத்திய போக்குப்படி படத்துக்கு ஏழரை நாட்டு சனின்னு பேர் வைக்கச் சொல்றார்!"

– நரேந்திரன்

"ஒண்ணு ஞாபகம் வந்துது."

"சரி!" அவன் நிறுத்திக் கொண்டான்.

"சொல்லட்டுமா?"

"இஷ்டப்பட்டா சொல்லுங்க."

"ஆமாம். கேட்டுட்டு நீ பொம்பள மாதிரி அழுவே."

"இல்லே மேடம்!" விநா தேறியவன் போல் சொன்னான்.

"இந்த வேலைக்கு முன்னாடி நான் பொன்னேரி தாலுக்கா ஆபீஸ்ல செக்ஷன் கிளார்க் வேல பார்த்தேன். தெனம் ரெண்டு முறை ஸ்டேஷன் தரிசனம். அப்ப ஒரு சமயம் ஸ்டேஷன்ல ஒரு கூட்ஸ் என்ன காரணத்தாலோ ரொம்ப நாள் நின்னு போச்சு. லைன் ஓரமா நடந்து ஸ்டேஷனுக்கு வருவேன். ரெண்டு மாசம். கூட்ஸைப் பாத்தா ஐயோ பாவம்னு இருக்கும். அப்புறம் இது எப்படா கௌம்பிப் போவும்னு எனக்கே ஒரு 'போரா'ப் போச்சு."

"ம்ம், அப்புறம்?"

"ஒரு நாள் அது பொறப்பட்டுப் போயிடுச்சு. அப்புறம் ஸ்டேஷன் வெறிச்சோடிப் போச்சு."

விநா சிரித்தான். ஏன் எதற்குச் சொல்கிறாள் என்று புரிந்து கொண்டான். அழுவதை விடச் சிரிப்பது மேலென்று முதிர்ச்சி வந்திருந்தது.

"எங்கேயும் எதுவும் லேட்டாயிடக் கூடாதுன்னு ஏண்டா பதர்றோம்னு அப்ப நெனச்சேன்."

அது என்றோ ஒரு நாள் சொன்னது. வர வர மனசு சலித்து வருகிறது. வெறுப்பு. எதைப் பார்த்தாலும் கடுப்பு. இது நல்லதில்லை என்று தனக்கே கூட உறைக்கிறது.

"ஸாரி மேடம்! கொஞ்சம் லேட்டாப் போச்சு" என்று ஓட்டமும் நடையுமாக வந்தான் விநா.

"பரவால்லப்பா!"

வண்டியை ஸ்டார்ட் செய்தான். பிறகு விளக்கம் தரத் தொடங்கினான். "தங்கச்சி ஃபேமிலியிலே ஒரு ட்ரபிள். கோச்சிக்கினு வந்திருக்கா. அதை வேற டீல் பண்ணணும்!"

"என்னவாம்?"

"தங்கச்சிக்கி நாத்தனாக்காரி ஒருத்தி கண்ணாலமாவாமே வூட்ல குந்தினு கிறா. இவங்க சந்தோசமா இருக்கறது அவளுக்குப் பொறுக்கலே. சதா சில்மிஷம் பண்ணினே கிறா. தங்கச்சி தனிக் குடித்தனம் வக்கிறதா இருந்தா வந்து இட்டுனு போன்னு பொட்டியத் தூக்கினு வந்துட்டா."

"ம்ம்ம்."



"பையனைக் கொஞ்சம் கண்டிச்சு வையுங்க..."

"ஏன், என்ன செய்தான்?"

"ஜன்னல் செய்பவரை எப்படி அழைப்பேன்னு கேட்டால், தச்சன்னு சொல்லாம, டெய்லர்னு சொல்றான்!"

– காட்டாங்குளத்தூர் கிருஷ்ணரத்னம்

"அந்த நாத்தனாக்காரியை நெனச்சாலும் எரக்கமாத்தான் இருக்கு. மனுசான் ஏன் தான் இப்படிப் பொறத்தியார் சந்தோசதைப் பாத்துக் கண்ணு பொறுக்காமப் பொவஞ்சிப்பானாப் போவணும்? அட ஒரு சந்தோசம் நமக்கு இல்லேன்னா அந்த சந்தோசத்தைப் பாத்து நாம் ஏன் மேடம் வருத்தப்படணும்?"

ஆட்டோ டர்ர்ர்க் என்று கதறி நின்று விட்டது. விநா இரண்டு மூன்று முறை ஹேண்டில் தூக்கி ஸ்டார்ட் செய்தான். நடக்கவில்லை. ஒரு சுற்று வந்து பின்னாலும் முன்னாலும் ஐந்து நிமிஷம் எதை யெதையோ நோண்டித் திரும்பி வந்தான்.

"ரொம்ப ஸாரி மேடம்! வண்டி பிரேக் டவுன். சைத்தான், நடுவாந்தரத்திலே கழுத்தறுத்துட்டுது. போன வாரம்தான் மெக்கானிக் ஷாப்லே அறுநூத்து எழுபது ரூபா அழுதேன். மறுபடியும் மக்கர். வேற வண்டி பாத்து ஏத்தி வுடட்டுமா?"

"இல்ல விநா! நான் போய்க்கறேன்."

மணி பார்த்தாள். ஒன்பதே முக்கால்.

விநாயகம் சொன்னது பனிச்சென்று மண்டையில் எதுவோ ஆணியறைந்த மாதிரி விழுந்திருந்தது. அதோ அடுத்த சாலைத் திருப்பத்துக் 'கட்டிங்'கில் மித்ரா கல்யாண மண்டபம்!

போனால் அவளுக்கு என்ன சந்தோஷமாக இருக்கும்! அந்த சந்தோஷத்தைப் பார்க்க எல்லாக் குறைபாட்டையும் மூட்டை கட்டித் தூக்கி எறியலாம். பத்து நிமிஷம் நடந்தால் போதும். போய் விடலாம்! ஆட்டோவைக் கையால் தள்ளிக் கொண்டு விநா நகர்வதைப் பார்த்துவிட்டு, அவள் மண்டபத்திற்கு நடக்கத் தொடங்கினாள்.

# பொன்னியின் செல்வன்



முப்பத்து ஐந்தாம் அத்தியாயம்

## இலங்கைச் சிங்காதனம்

பிக்ஷு கையில் பிடித்த தீபத்தின் வெளிச்சத்தில் சுற்று முற்றும் ஒரு கணம் பார்த்தார். இளவரசரும் அவருடைய தோழர்களும் நிற்பதைக் கண்டு கொண்டார் போலும். மறுகணம் விளக்கும் வெளிச்சமும் மறைந்தன. சிறிது நேரத்துக்கெல்லாம் பிக்ஷு தடாகத்தின் படிக்கட்டுகளின் வழியாக நடந்து வருவது தெரிந்தது. இளவரசர் நிற்குமிடத்துக்கு வந்தார். நிலா வெளிச்சத்தில் அவருடைய திருமுகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

"தேவப்ரியா! வருக! வருக! தங்களை எதிர்நோக்கி வைதுல்ய பிக்ஷு சங்கம் காத்திருக்கிறது. மகா தேரோ குருவும் விஜயம் செய்திருக்கிறார். குறிப்பிட்ட நேரம் தவறாது தாங்கள் வந்து சேர்ந்தது பற்றி என் உள்ளம் உவகை கொண்டு நன்றி செலுத்துகிறது!" என்றார்.

"அடிகளே! இந்தச் சிறுவனிடம் பல குறைகள் குடி கொண்டிருப்பதை அறிந்துள்ளேன். எனினும், வாக்குத் தவறுவதில்லை என்ற ஒரு நல்விரதத்தை அனுசரித்து வருகிறேன். அந்த விரதத்தில் என்றும் தவறியதில்லை!" என்றார் பொன்னியின் செல்வர்.

"இன்று சூரியன் அஸ்தமிக்கும் நேரம் வரையில் தாங்கள் வந்து

அமரர் கல்கி




கல்கி கலெக்ஷன்

சேரவில்லை என்று அறிந்தேன். அதனால் சிறிது கவலை ஏற்பட்டது."

"முன்னதாக வந்திருந்தால், ஒரு வேளை வாக்கை நிறைவேற்ற முடியாமல் போயிருக்கலாம். அதனாலேயே சமயத்திற்கு வந்து சேர்ந்தேன்."

"ஆம், ஆம்! வானில் ஜோதி மயமாக ஒளிரும் கதிரவனை மறைத்து விடுவதற்குப் பல மேகத் திரள்கள் சுற்றி வருகின்றன. நாங்களும் அறிந்துள்ளோம். ஆனால் அந்த மேகத் திரள்கள் எல்லாம் புத்த பகவானுடைய கருணையென்னும் பெருங் காற்றினால் சின்னாபின்னமாகிக் கலைந்து விடும். போகட்டும்! இதோ நிற்பவர்கள் யார்? தாங்கள் நன்கு அறிந்தவர்கள்தானா? தங்களின் பூரண நம்பிக்கைக்கு உரியவர்களா? கொடுத்த வாக்கை தவறாது நிறைவேற்றக் கூடியவர்களா?" என்று பிக்ஷு கேட்டார்.

"அடிகளே! என்னுடைய கரங்கள் இரண்டையும் எப்படி நான் நம்புகிறேனோ, அப்படியே இந்த நண்பர்களையும் நம்புகிறேன். எனினும் தங்களுக்கு விருப்பமில்லையென்றால் இவர்களை இங்கேயே விட்டு விட்டுத் தங்களுடன் தனித்து வரச் சித்தமாயிருக்கிறேன்!" என்றார் இளவரசர்.

"இல்லை, இல்லை! அவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்றுக் கொள்ள நான் சித்தமாயில்லை. தங்களை நான் அழைத்துப் போகும் இடம் மிகப் பத்திரமானதுதான். ஆயினும், நீண்ட வழியில் போக வேண்டும். எந்த மூலையில் எந்தத் தூணுக்குப் பின்னால் என்ன அபாயம் மறைந்திருக்கும் என்று யார் சொல்ல முடியும்? இவர்கள் இருவரும் அவசியம் வரட்டும்!" என்றார் பிக்ஷு.

இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவனுடைய உள்ளம் கொந்தளித்தது. முன்பின் அறியாத தன்னிடம் இளவரசர் இவ்வளவு பரிபூரண நம்பிக்கை காட்டி மிக அந்தரங்கமான காரியத்துக்கு அழைத்து வந்ததை நினைத்துப் பூரிப்பு உண்டாயிற்று. இன்றிரவு ஏதோ முக்கியமான நிகழ்ச்சி நடைபெறப் போகிறது, அது என்னவாயிருக்கும் என்ற நினைவு பரபரப்பை அளித்தது.

க்ஷு முன்னால் சென்று வழி காட்ட மற்றவர்கள் பின் தொடர்ந்து சென்றார்கள். தடாகத்தின் படிக்கட்டுகளின் வழியாகச் சென்று, பின்புறத்துக் கல் சுவரில் குடைந்து அமைந்திருந்த அறையில் புகுந்தார்கள். அதன் ஒரு பக்கம் சென்று இருட்டில் பிக்ஷு ஏதோ செய்தார். உடனே ஒரு வழி ஏற்பட்டது. உள்ளே வெளிச்சம் காணப்பட்டது. பிக்ஷு அங்கு வைத்திருந்த தீபத்தைக் கையில் ஏந்திக் கொண்டார். மற்ற மூவரும் உள்ளே வந்ததும் வழியும் அடைபட்டது. வெளியே தடாகத்தில் சிங்க முகத்திலிருந்து விழுந்த அருவியின் ஓசை மிக இலேசாகக் கேட்டது. இல்லாவிட்டால் ஒரு கணத்துக்கு முன்னால் அப்படி தடாகக் கரையில் நின்று கொண்டிருந்தோம் என்பதையே அவர்களால் நம்ப முடியாமல் போயிருக்கும்.

குறுகலான சுரங்கப் பாதை வழியாக அவர்கள் சென்றார்கள். பாதை வளைந்து வளைந்து சென்றது. முடிவில்லாமல் சென்று கொண்டிருப்பதாகத் தோன்றியது. அவர்கள் காலடிச் சப்தமும் அதன் எதிரொலியும் பயங்கரத்தை உண்டாக்கின. வந்தியத்தேவனுக்கு நடுநடுவே இளவரசர் ஏமாந்து போய் ஏதோ ஒரு சூழ்ச்சியில் சிக்கிக் கொண்டாரோ என்ற ஐயம் உண்டாயிற்று.

பாதை அகன்று அகன்று வந்து கடைசியில் ஒரு மண்டபம் தெரிந்தது. எப்பேர்ப்பட்ட மண்டபம்? பிக்ஷு கையில் பிடித்து வந்த தீபத்தில், சிறிய



பகுதிதான் மங்கலாகக் கண்ணுக்குப் புலனாயிற்று. ஆயினும் அதன் தூண்கள் பளிங்குக் கல்லினால் ஆன தூண்கள் என்பது தெரிந்தது. நாற்புறமும் புத்தர் சிலைகள் தரிசனம் தந்தன. நிற்கும் புத்தர்கள், படுத்திருக்கும் புத்தர்கள், போத நிலையில் அமர்ந்திருக்கும் புத்தர்கள், ஆசிர்வதிக்கும் புத்தர்கள், பிரார்த்தனை செய்யும் புத்தர்கள் – இப்படிப் பல புத்தர் சிலைகள் தோன்றின.

பளிங்கு மண்டபத்தைத் தாண்டி அப்பால் சென்றார்கள். மறுபடி ஒரு குறுகிய பாதை. பின்னர் இன்னொரு மண்டபம். இதன் தூண்கள் தாமிரத் தகடுகளினால் ஆனவை. இரத்தினச் சிவப்பு

திறம் பெற்றுத் திகழ்ந்தன. இந்த மண்டபத்தின் மேற்கூரையிலும் செப்புத் தகடுகள், அவற்றில் பலவகைச் சித்திர வேலைப்பாடுகள், நாலாபுறமும் விதவிதமான புத்தர் சிலைகள். இம்மாதிரியே, அபூர்வமான மஞ்சள் நிற மரத் தூண்களை உடைய மண்டபம், யானைத் தந்தங்களால் இழைத்த தூண்களை உடைய மண்டபம், பொன்னும் மணியும் இழைத்த தூண்களைக் கொண்ட மண்டபம், - இவற்றையெல்லாம் கடந்து சென்றார்கள். அதிவேகமாக நடந்து சென்ற போதிலும் வந்தியத்தேவன் அங்கங்கே தூண்களைத் தொட்டுப் பார்த்துக் கொண்டே போனான். இளவரசர் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்தாது முன்னோக்கிய பார்வையுடன் சென்றது அவனுக்கு அளவிலா வியப்பை அளித்தது.

உலோக மண்டபங்களையெல்லாம் தாண்டிக் கடைசியில் சாதாரண கருங்கல் மண்டபம் ஒன்றுக்கு வந்து சேர்ந்தார்கள். ஆனால் விசாலமான அம்மண்டபத்தில் அபூர்வமான காட்சி தென்பட்டது. முந்தைய மண்டபங்களில் புத்தர் பெருமானின் சிலைகளைத் தவிர மனிதர் யாருமில்லை. இந்தக் கருங்கல் மண்டபத்தில் புத்த பிக்ஷுக்கள் பலர் கூடியிருந்தார்கள். அவர்களுடைய முக மண்டலங்கள் தேஜஸ் நிறைந்து திகழ்ந்தன. அவர்களுக்கு மத்தியில் மகா தேரோ குரு நடு நாயகமாக ஒரு பீடத்தில் வீற்றிருந்தார். அவருக்கு எதிரே நவரத்தின கசிதமான ஒரு தங்கச் சிங்காதனம் காணப்பட்டது. அதன் அருகில் ஒரு பீடத்தின் மேல் மணி மகுடம் ஒன்றும் உடை வாளும் செங்கோலும் இருந்தன. மண்டபத்தில் நாலாபுறமும் தீபங்கள் எரிந்தன. தீபச் சுடரின் ஒளியில் தங்கச் சிங்காதனமும் மணி மகுடமும் உடைவாளும் ஜொலித்துத் திகழ்ந்தன.

இளவரசர் முதலியோர் அந்த மண்டபத்துக்குள் நுழைந்ததும் பிக்ஷுக்கள் அனைவரும் எழுந்து நின்று "புத்தர் வாழ்க" "தர்மம் வாழ்க" "சங்கம் வாழ்க" என்று கோஷித்தார்கள்.

இளவரசர், மகா தேரோ குருவின் சமீபம் வந்து வணங்கி நின்றார்.

பிக்ஷுக்களின் அத்தியட்சகர் சிங்காதனத்துக்கு அருகில் கிடந்த ஒரு சாதாரண பீடத்தைச் சுட்டிக்காட்டி, அதில் அமரும்படி இளவரசரை வேண்டினார்!

"மகா குருவே! இச்சிறுவனுக்கு முன்னால் பிராயத்திலும் தர்மத்திலும் மூத்தவர்களாகிய தாங்கள் அமர வேண்டும்" என்று வேண்டினார் இளவரசர்.

அத்தியட்சக மகா குரு தமது பீடத்தில் அமர்ந்ததும் இளவரசரும் தமக்கென்று குறிப்பிட்ட ஆசனத்தில் பணிவுடன் உட்கார்ந்தார்.

"தேவர்களின் அன்புக்குரிய இளவரசரே! தங்கள் வருகையினால் இந்த மகா போதி சங்கம் மிக்க மகிழ்ச்சி அடைந்திருக்கிறது. நாங்கள் குறிப்பிட்ட நிபந்தனைகளையெல்லாம் ஒப்புக்கொண்டு பல சிரமங்களுக்கு உட்பட்டு வந்திருக்கிறீர்கள். புத்த பகவானுடைய கருணை தங்களிடம் பூரணமாக இருப்பதற்கு வேறு அத்தாட்சி தேவையில்லை!" - இவ்விதம் பாலி பாஷையில் பெரிய குரு கூற, இளவரசரை அழைத்து வந்த பிக்ஷு தமிழில் மொழி பெயர்த்துச் சொன்னார். மற்ற பிக்ஷுக்கள் "சாது! சாது!" என்று கோஷித்துத் தங்கள் சந்தோஷத்தை வெளியிட்டார்கள்.

மகா தேரோ மேலும் கூறலுற்றார்:- "இலங்கைத் தீவுக்குப் புத்த தர்மத்தை அனுப்பிய பாரத வர்ஷத்துக்கு நாங்கள் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறோம். ஆனால் ஆதி நாளிலிருந்து உங்கள்

நாட்டிலிருந்து படையெடுத்து வந்த சோழர்கள், பாண்டியர்கள், மலையாளத்தார், கலிங்கத்தார் எல்லாரும் இங்கே பல அட்டூழியங்களைச் செய்ததுண்டு. புத்த விஹாரங்களையும் பிக்ஷுக்களின் மடாலயங்களையும் குருகுலங்களையும் அவர்கள் இடித்துத் தள்ளி தேவர்களின் சாபத்துக்கு ஆளானார்கள். உங்கள் நாட்டவரைச் சொல்வானேன்? இந்த நாட்டின் மன்னர்களே அத்தகைய கோர கிருத்யங்களைச் செய்திருக்கிறார்கள். புத்த சங்கத்தில் பிரிவினையை ஏற்படுத்தினார்கள். தங்களுடைய தீய செயல்களை எதிர்த்த பிக்ஷுக்களின் விஹாரங்களை இடித்தார்கள்: அக்கினிக்கு இரையாக்கினார்கள். இரண்டு காத நீளமும் ஒரு காதம் அகலமும் உள்ள இந்த விசாலமான புண்ணிய நகரத்தில் ஒரு சமயம் பாதி விஸ்தீரணத்தில் புத்த விஹாரங்கள் இருந்தன. அவற்றில் பெரும் பகுதி இன்று இடிந்து பாழாய்க் கிடக்கின்றன. இடிந்த விஹாரங்களைப் பழுது பார்த்துச் செப்பனிட்டுக் கொடுக்க வேண்டும் என்று இதுவரை எந்த அரச குலத்தினரும் கட்டளையிட்டதில்லை. அத்தகைய ஆக்ஞை பிறப்பிக்கும் பாக்கியம் இளவரசர் அருள்மொழி வர்மருக்கே கிடைத்தது. தேவர்களுக்கு உகந்தவரே! தங்களுடைய இந்தச் செய்கையைப் புத்த மகா சங்கம் பெரிதும் பாராட்டுகிறது...''

இளவரசர் தலை வணங்கி மகா தேரோவின் வாழ்த்தை ஏற்றுக் கொண்டார்.

''இன்னும், இந்தப் புராதன புண்ணிய நகரத்தில் வெகு காலமாகப் பெரஹரா உற்சவம் நடைபெறாமல் தடைப்பட்டிருந்தது. நூறு ஆண்டுகளுக்கு முன்னால் பாண்டியர்கள் ஒருசமயம் இந்த மாநகரத்தைப் பிடித்தார்கள். அப்போது இலங்கை அரச குலத்தார் புலஸ்திய நகரம் சென்றார்கள். அது முதல் இங்கே பெரஹராத் திருவிழா நடைபெற்றதில்லை. இந்தப் புண்ணிய வருஷத்தில் தாங்கள் அவ்வுற்சவம் மீண்டும் நடைபெறலாம் என்று கட்டளையிட்டீர்கள். அதற்கு வேண்டிய வசதியும் அளித்தீர்கள். இதுபற்றியும் புத்த சங்கத்தார் சந்தோஷமடைந்திருக்கிறார்கள்...''



இளவரசர் மீண்டும் சிரம் வணங்கி "மகா குருவே! அடியேன் புத்த சங்கத்தாருக்கு இன்னும் ஏதேனும் சேவை செய்யக் கூடியதாக இருந்தால் கருணை கூர்ந்து பணித்தருள்க!'' என்றார்.

அத்தியட்சகர் புன்னகை புரிந்து, ''ஆம், இளவரசரே! புத்த சங்கம் மேலும் தங்

களுடைய சேவையை நம்பிக்கையுடன் எதிர்பார்க்கிறது. அதற்கு முன்னதாக, இன்னும் சில வார்த்தைகள் கூற வேண்டும். புத்த பகவான் கடைசித் திரு அவதாரத்துக்கு முன்னால் வேறு பல அவதாரங்களில் தோன்றியதாக அறிந்திருப்பீர்கள். ஒரு சமயம் சிபிச் சக்கரவர்த்தியாக அவதரித்துக் கொடுமை நிறைந்த இந்த உலகத்தில் ஜீவகாருண்யத்தின் பெருமையை உணர்த்தினார். ஒரு சிறிய புறாவின் உயிரைக் காப்பாற்றும் பொருட்டுத் தமது திருமேனியின் சதையைத் துண்டு துண்டாக அவர் அரிந்து துலாக் கோலில் இட்டார். அந்தச் சிபிச் சக்கரவர்த்தியின் வம்சத்திலே வந்தவர்கள் என்று சோழ குலத்தவராகிய நீங்கள் சொல்லிக் கொள்கிறீர்கள். சிபியின் வம்சத்தில் வந்த காரணம் பற்றிச் 'செம்பியன்' என்ற பட்டப் பெயரும் சூடிக் கொள்கிறீர்கள். ஆனால் இதுவரையில் புத்த சங்கத்தார் அதை நம்பவில்லை. சோழ குலத்துப் புரோகிதர்கள் கட்டிய கதை என்றுதான் எண்ணியிருந்தார்கள். இன்று – தங்களுடைய அரும்பெரும் செயல்களைப் பார்த்த பிறகு, – சிபிச் சக்கரவர்த்தியின் பரம்பரையில் வந்தவர்கள் சோழர்கள் என்று ஒப்புக் கொள்ள வேண்டி வருகிறது. புத்த பகவானுடைய பெருங் கருணையை மாயை காரணமாக இதுகாறும் சோழ குலம் மறந்திருந்தது. அந்தக் கருணை இன்றைய தினம் தங்கள் மீது ஆவிர்ப் பவித்திருக்கிறது. அதற்கான சூசகமும் கிடைத்திருக்கிறது. இதோ!...'' என்று கூறி அத்தியட்சக தேரோ பின்னால் திரும்பிப் பார்த்ததும், பிக்ஷுக்கள் சிலர் பீடம் ஒன்றில் சாய்ந்து படுத்திருந்த மற்றொரு பிக்ஷுவைப் பீடத்துடன் தூக்கிக் கொண்டு வந்தார்கள். அந்தப் பிக்ஷுவின் உடம்பெல்லாம் இடைவிடாமல் நடுங்கிக் கொண்டிருந்தது. கைகள் வெட வெடவென்று நடுங்கின; உதடுகள் துடித்தன; சிவந்த கண்களுக்கு மேலே புருவங்களும் அசைந்தன.

''இந்த பிக்ஷுவின் பேரில் முப்பத்து முக்கோடி தேவர்களும் ஆவிர்ப் பவித்திருக்கிறார்கள். தேவர்கள் கருணை கூர்ந்து சொல்வதைக் கேட்டுக் கொள்ளுங்கள்!'' என்றார் மகா தேரோ.


வேசங் கொண்டிருந்த புத்த பிக்ஷுவின் வாயிலிருந்து நடுநடுங்கிக் குளறிய குரலில் ஏதேதோ மொழிகள் அதிவிரைவாக வந்தன. அவர் பேசி நிறுத்தியதும் அத்தியட்சக குரு கூறினார்: ''முப்பத்து முக்கோடி தேவர்களும் தங்களை ஆசிர்வதிக்கிறார்கள். முற்காலத்தில் தேவனாம் பிரிய அசோக வர்த்தனர் பாரத பூமியை ஒரு குடையில் ஆண்டு புத்த தர்மத்தை உலகமெல்லாம் பரப்பினார். அத்தகைய மகா சாம்ராஜ்யத்துக்கு தாங்கள் அதிபதியாவீர்கள் என்று தேவர்கள் ஆசிர்வதிக்கிறார்கள். அசோகரைப் போல் தாங்களும் புத்த தர்மத்தை உலகில் பரப்ப வேண்டும் என்று விரும்புகிறார்கள். அசோகர் பாடலிபுத்திரச் சிம்மாசனத்தில் வீற்றிருந்து செய்த தர்மப் பெரும் பணிகளைத் தாங்கள் இந்தத் தொன்மை மிக்க அநுராதபுரத்தில் ஆரம்பித்து நடத்த வேண்டுமென்று கட்டளையிடுகிறார்கள். இளவரசே! தேவர்களுடைய கட்டளைகளுக்குத் தங்கள் மறுமொழி என்ன?''

இதைக் கேட்டதும் இளவரசர், ''மகா குரு! தேவர்கள் சக்தி வாய்ந்தவர்கள். அவர்க்ள் சித்தப்படி நடத்திக் கொள்ளுவார்கள். ஆனால் அடியேனுக்கு இப்போது அவர்கள் இடும் பணி யாது என்று விளங்கவில்லையே?'' என்றார்.

''அதை நானே தெரிவிக்கிறேன்'' என்று அத்தியட்சக தேரோ கூறிச் சமிக்ஞை செய்ததும், ஆவேசம் வந்திருந்த பிக்ஷுவை அப்பால் எடுத்துச் சென்றார்கள். பின்னர் பிக்ஷு தலைவர் கூறினார்: ''இளவரசரே! இதோ உங்கள்

முன்னால் உள்ள சிங்காதனத்தைப் பாருங்கள். மணிமகுடத்தைப் பாருங்கள். செங்கோலையும் பாருங்கள். இலங்கை இராஜ வம்சத்தைச் சேர்ந்த மன்னர்கள் அனைவரும் இந்தச் சிங்காதனத்தில் அமர்ந்து, இந்த மணி மகுடத்தை அணிந்து, இந்தச் செங்கோலைக் கையில் தரித்த பிறகே, புத்த சங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட அரசர்களானார்கள். துஷ்டகமனு சக்கரவர்த்தியும் தேவானாம் பிரிய திஸ்ஸரும் மகாசேனரும் அமர்ந்து முடி சூடிய சிங்காதனம் இது! அவர்கள் சிரசில் தரித்த கிரீடம் இது: அவர்கள் கரத்தில் ஏந்திய செங்கோல் இது. இப்படிப்பட்ட புராதன சிங்காதனம், – இதோ தங்களுக்காகக் காத்திருக்கிறது. இதில் அமரவும் இந்த மணி மகுடமும் செங்கோலும் தரிக்கவும் தங்களுக்குச் சம்மதமா?"

இதையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவன் மிக்க பரபரப்பை அடைந்தான். இளவரசரைத் தூக்கி அந்தச் சிம்மாசனத்தில்



அந்தக் கணமே உட்கார வைத்து விட்டால் என்ன என்று எண்ணினான். ஆனால் இளவரசருடைய முக பாவத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை.

முன் போலவே அமைதியான குரலில், "அத்தியட்சகா! அது எப்படிச் சாத்தியம்? இந்தச் சிங்காதனத்தில் ஏறி முடி சூடிய மகிந்த மன்னர் இன்னும் ஜீவிய வந்தராக இருக்கிறாரே? அவர் இருக்குமிடம் தெரியாவிட்டாலும்..." என்று கூறி நிறுத்தினார்.

"இளவரசே! இலங்கை இராஜ வம்சம் மாற வேண்டும் என்பது தேவர்




களின் ட்டளை. அது நடந்தே திரும்.
கங்கை பாயும் வங்க நாட்டிலிருந்து
வந்த விஜயராகவன் ஸ்தாபித்த இந்த
வம்சத்தில் எத்தனையோ மகா
ராஜர்கள் தோன்றினார்கள்; தர்மத்
தையும் பரிபாலித்தார்கள். ஆனால்
பிற்காலத்தில் இந்த வம்சம் பல
கொடிய கிருத்தங்களைச்
செய்து தேவ சாபத்துக்கு
ஆளாகி விட்டது. இந்த
வம்சத்தில் பிறந்தவர்
களிலே தகப்பன்

மகனைக் கொன்றான்; மகன் தகப்பனைக் கொன்றான்; அண்ணனைத் தம்பி கொன்றான். தம்பியை அண்ணன் கொன்றான்; தாய் மகனைக் கொன்றான்; மருமகன் மாமியாரைக் கொன்றான்; இத்தகைய மகா பாதகங்களைச் செய்த வம்சத்தவர்கள் புத்த தர்மத்தைப் பரிபாலிக்கத் தகுதி வாய்ந்தவர்கள் அல்ல என்று தேவர்கள் கட்டளையிடுகிறார்கள். கடைசியாக முடி சூடிய மகிந்தன் இலங்கைச் சிம்மாதனத்துக்கு உரிமையை இழந்து விட்டான். அவனுக்குச் சந்ததியும் இல்லை. ஆகையால் இராஜ வம்சம் எப்படியேனும் மாறியே தீர வேண்டும். அப்படி இராஜ வம்சம் மாறும்போது புதிய வம்சத்தின் முதல்வனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை இந்தச் சங்கத்துக்கு உண்டு. இந்தச் சங்கத்தாரும் தங்களைத் தெரிந்தெடுக்க விரும்புகிறார்கள். தாங்கள் சம்மதம் கொடுத்தால் இன்று இரவே முடிசூட்டு விழா நடத்தி விடலாம்..."

அந்த மண்டபத்தில் சிறிது நேரம் பூகர்ப்பத்திலும் கடலின் ஆழத்திலும் குடி கொண்டிருப்பது போன்ற நிசப்தம் குடி கொண்டிருந்தது. வந்தியத்தேவனுடைய பரபரப்பு உச்ச நிலையை அடைந்து விட்டது.

அச்சமயத்தில் பொன்னியின் செல்வர் தமது பீடத்திலிருந்து எழுந்து புத்த பிக்ஷுக்களின் சங்கத்துக்கு வணக்கம் செலுத்தினார். வந்தியத்தேவன் குதூகலத்தின் எல்லையை அடைந்தான். இளவரசர் சிம்மாதனத்தில் அமர்ந்ததும் மணி மகுடத்தை எடுத்துத் தானே சூட்டி விடலாம் என்று ஆத்திரப் பட்டான்.

இளவரசர் கூறினார்: – "மகான்களே! உங்களை நமஸ்கரிக்கிறேன். இந்தச் சிறுவனிடம் எல்லையில்லா அன்பும் நம்பிக்கையும் வைத்து இந்தப் புராதன சிங்காதனத்தை அளிக்க முன் வந்த உங்கள் பெருந்தன்மையைப் போற்றி வணங்குகிறேன். ஆனால் தாங்கள் இப்போது இடும்பணி என் சக்திக்கு அப்பாற்பட்டது. நான் சோழ நாட்டில் பிறந்து வளர்ந்தவன். அந்த நாட்டு நிலங்கள் தந்த உணவும் நதிகள் அளித்த நீரும் இந்த உடலை ஆக்கின. என் தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்தியின் கட்டளைக்கு உட்பட்டு இங்கே வந்தேன். அவருடைய விருப்பத்தை அறியாமல் எதுவும் என்னால் செய்ய இயாது..."

பிக்ஷு குறுக்கிட்டுக் கூறினார்:- "இளவரசே! தங்கள் தந்தை சுந்தர சோழர் இன்று சுதந்திரமின்றிச் சிறையில் இருப்பது போல் இருப்பதை நீர் அறியீரா?"

"ஆம்; என் தந்தை நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையில் இருக்கிறார். கால்களின் சுவாதீனத்தை இழந்திருக்கிறார். ஆயினும் அவருடைய பெயரால், – அவரிடம் அதிகாரம் பெற்று, – சோழ நாட்டை ஆளுவோரின் கட்டளைக்கு நான் உட்பட்டவன். அவர்களுடைய கட்டளையின்றி நான் இந்தச் சிங்காதனத்தை ஏற்றுக் கொண்டால் தேசத் துரோகியும் ராஜத் துரோகியும் ஆவேன்..."

"அவ்வாறு தாங்கள் கருதுவதாயிருந்தால் தஞ்சாவூருக்குத் தூது கோஷ்டி ஒன்றை அனுப்பச் சித்தமாயிருக்கிறோம். தங்கள் தந்தையார் புத்த தர்மத்தில் மிகப் பற்றுக் கொண்டவர். எங்கள் வேண்டுகோளை நிராகரிக்க மாட்டார்..."

"இந்த நாட்டின் பிரஜைகள் இருக்கிறார்கள். அவர்களுடைய சம்மதமின்றி இராஜ்யத்தை விநியோகிக்க யாருக்கு உரிமை உண்டு?"

"தங்களை அரசராகப் பெறுவதைப் பெறற்கரிய பேறாக இந்நாட்டுப் பிரஜைகள் கருதுவார்கள்."

"எல்லாரும் சம்மதிக்கலாம்; மகிழ்ச்சியும் அடையலாம். இந்த உலகில் வேறு யாருடைய விருப்பத்தையும் காட்டிலும் நான் அதிகமாக மதிப்பது என் தமக்கையாரின் விருப்பத்தையே. என் அன்னை என்னைப் பெற்றாள்;

பொன்னி நதி என் உயிரைக் காப்பாற்றி அளித்தாள். ஆனால் என் தமக்கை என் அறிவை வளர்த்து அகக் கண்களைத் திறந்தார். அப்படிப்பட்டவருடைய விருப்பத்தைக் காட்டிலும் என் உள்ளத்திலே உள்ள ஒரு குரலின் கட்டளையே எனக்கு மேலானது. மகா புருஷர்களே! தாங்கள் இச்சிறுவனுக்கு மனமுவந்து அளிக்கும் மகா பாக்கியத்தை ஏற்றுக் கொள்ளும்படி என் உள்ளக் குரல் எனக்குச் சொல்லவில்லை! தயவு செய்து இச்சிறுவனை மன்னித்து அருளுங்கள்!...''

மறுபடியும் அந்த மகா சபையில் சிறிது நேரம் மௌனம் குடி கொண்டிருந்தது. வந்தியத்தேவனுடைய நாடி நரம்புகள் படபடவென்று துடித்த சத்தம் அவன் காதில் மட்டும் விழுந்தது.

சற்றுப் பொறுத்து, பிக்ஷு சங்கத்தின் அத்தியட்சகர் கூறினார்:- ''இளவரசே! தாங்கள் கூறிய மறுமொழி எனக்கு அதிக வியப்பை அளிக்கவில்லை. ஒருவாறு எதிர்பார்த்தேன். இதனாலேயே இந்த இலங்கைச் சிங்காதனத்தில் ஏற எவரிலும் அதிக தகுதி வாய்ந்தவர் தாங்கள் என்று ஏற்படுகிறது. தர்ம சூக்ஷ்மத்தை உணர்ந்த எங்களுக்கு இதைப் பற்றிச் சிறிதும் சந்தேகம் கிடையாது. ஆனால் தங்களை வற்புறுத்தவும் விரும்பவில்லை. யோசிப்பதற்கு அவகாசம் கொடுக்கிறோம். ஓராண்டுக்குப் பிறகு இதே மாதிரி ஒருநாள் தங்களுக்குச் சொல்லி அனுப்புகிறோம். அப்போது வந்து தங்கள் முடிவான கருத்தைத் தெரிவிப்பீராக!.... ஒரு விஷயம் மட்டும் நினைவிருக்கட்டும். இந்தப் புராதன அநுராதபுரத்தில் பல புத்த விஹாரங்கள் மூர்க்கமான யுத்தக் கொடுமைகளினால் பாழாய்ப் போயிருக்கின்றன. ஆனால் இந்த மகா போதி விஹாரத்துக்கு மட்டும் எவ்விதச் சேதமும் இதுவரை ஏற்படவில்லை. ஏனெனில் இது பூமிக்குக் கீழே குடைந்து அமைத்த விஹாரம். இங்கே வரும் வழி இவ்விடத்தில் தற்சமயம் கூடியிருக்கும் புத்த சங்கத் தலைவர்களுக்கு மட்டுமே தெரியும். எங்களில் ஒருவர் வழிகாட்டாமல் இங்கே யாரும் வர முடியாது. இலங்கை மன்னர்கள் தங்கள் வாழ்க்கையில் ஒரு தடவை, புத்த சங்கத்தாரால் முடி சூடிக் கொள்வதற்கு மட்டுமே, இங்கு அழைக்கப்படுவார்கள். அத்தகைய புனிதமான இரகசியப் பாதையுள்ள விஹாரம் இது. இங்கே தாங்கள் வந்தது, போனது, இங்கே நடந்தது எதையும் பற்றி வெளியில் யாருக்கும் சொல்லக் கூடாது. தங்களுடைய நண்பர்களும் சொல்லக் கூடாது. சொன்னால் மிகக் கடுமையான தேவ சாபத்துக்கு உள்ளாகும்படி நேரிடும்!''

''அத்தியட்சக! சாபத்துக்குத் தேவையில்லை; வெளியில் யாருக்கும் சொல்வதில்லையென்று வாக்குக் கொடுத்து விட்டுத்தான் இங்கே என் நண்பர்களையும் அழைத்துக் கொண்டு வந்தேன். கொடுத்த வாக்கை ஒரு நாளும் மீற மாட்டேன்'' என்றார் பொன்னியின் செல்வர்.

அரை நாழிகை நேரத்துக்குப் பிறகு இளவரசர் அருள்மொழி வர்மரும் ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் அநுராதபுரத்தின் வீதியில் நிலா வெளிச்சத்தில் நடந்து கொண்டிருந்தார்கள். விஹாரத்துக்குள் இருந்த வரையில் வாயைக் கெட்டியாக மூடி வைத்துக் கொண்டிருந்த வந்தியத்தேவன் இப்போது அடக்கி வைத்திருந்த எண்ணங்களையெல்லாம் அவிழ்த்து விட்டான்.

''சோழ நாடு நீர்வளம் நிலவளம் பொருந்தியதுதான். ஆனாலும் இந்த இலங்கைக்கு இணையாகாது. இப்படிப்பட்ட இரத்தினத் தீவின்

சிம்மாசனம் வலிய வந்ததை உதைத்துத் தள்ளி விட்டீர்களே? இது என்ன பேதைமை? தங்களை அழைத்து மணி மகுடத்தை வழங்க வந்த பிக்ஷுக்களின் மதியை என்னவென்று சொல்ல? அடுத்தாற்போல் நானும் தூணோடு தூணாக நின்று கொண்டிருந்தேனே? எனக்குக் கொடுத்திருக்கக் கூடாதா?'' என்று இப்படியெல்லாம் பொருமிக் கொண்டிருந்தான்.

இளவரசர் அவனைச் சமாதானப்படுத்த முயன்றார். ''துஷ்ட கமனுவின் மகன் ஸாலி அசோகமாலா என்னும் பெண்ணின் காதலுக்காக இந்த இலங்கை ராஜ்யத்தைத் துறந்தானென்று சொன்னேனே? அது உமது காதில் ஏறவில்லையா?'' என்றார்.

''எல்லாம் ஏறிற்று. அப்படித் தாங்கள் எந்தப் பெண்ணைக் காதலிக்கிறீர்கள்? அவ்விதம் தாங்கள் சிம்மாசனம் ஏறுவதற்குக் குறுக்கே நிற்கும் பெண் யார்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''ஒரு பெண் அல்ல; இரண்டு பெண்கள். சத்தியம், தர்மம் என்னும் இரு பெண்களை நான் காதலிக்கிறேன். அவர்களுக்காகவே இலங்கை மணி மகுடத்தை வேண்டாம் என்றேன்.''.

''இளவரசே! தங்களைப் பார்த்தால் இளம்பிராயத்தினராகக் காணப்படுகிறது. பேச்சோ, வயதான கிழவரைப் போல் பேசுகிறீர்கள்.''

''நம்மில் யார் வயதானவர், யாருடைய பிராயம் முடியப் போகிறது என்பது யாருக்குத் தெரியும்?''

இப்படி அவர்கள் பேசிய போது வீதியின் ஓரமாக ஒரு பழைய மாளிகையின் சமீபம் போய்க் கொண்டிருந்தார்கள்.

வீதிக்கு எதிர்ப்புறத்தில் யாரோ கையைத் தட்டும் சப்தம் கேட்டது.

சப்தம் கேட்ட இடத்தில் ஓர் உருவம் நின்று கொண்டிருந்தது.

''இப்படி வாருங்கள்!'' என்று கூறி, இளவரசர் அந்த உருவத்தை நோக்கி வீதியைக் கடந்து போனார்.

மற்றவர்களும் தொடர்ந்து போனார்கள்.

அவர்கள் பாதி வீதியைக் கடந்து கொண்டிருந்தபோது பின்னால் பெரிய தடபுடல் சப்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தார்கள். அவர்கள் எந்த வீட்டின் ஓரமாகப் போய்க் கொண்டிருந்தார்களோ அதன் மேல் மாடத்தின் முகப்பு இடிந்து விழுந்து கொண்டிருந்தது!

அவர்கள் அங்கே வீதியைக் கடக்கத் திரும்பியிராவிட்டால் அவர்கள் தலை மேலே விழுந்து கொன்றிருக்கும்.

ஒருகண நேர வித்தியாசத்தில் மூன்று உயிர்கள் பிழைத்தன! அதுவும் எப்பேர்ப்பட்ட உயிர்கள்!

''நம்மில் யாருக்குப் பிராயம் முடியப் போகிறது என்று யாருக்குத் தெரியும்?'' என்று பொன்னியின் செல்வர் கூறியது எவ்வளவு உண்மையான வார்த்தை?

இப்படி எண்ணி வந்தியத்தேவன் நடு வீதியில் நின்று பார்த்துக் கொண்டிருக்க, இருவரும் அப்பால் சென்றார்கள்.

வந்தியத்தேவன் அவர்களை மறுபடி அணுகியபோது அங்கே நின்ற உருவம் நிலா வெளிச்சத்தில் நன்கு தெரிந்தது.

'கண் முன்னே காண்பதை நம்புவதா, இல்லையா என்ற சந்தேகம் அச்சமயம் அவனுக்கு உண்டாயிற்று.

இது என்ன பைத்தியக்காரத்தனம்? இது எப்படிச் சாத்தியமாகும்?

தஞ்சையில் பழுவேட்டரையர் அரண்மனையில் பார்த்த நந்தினி இங்கே இந்த அநுராதபுரத்து வீதிக்கு எப்படி வந்திருக்க முடியும்? நள்ளிரவில் இங்கே வந்து எதற்காக நிற்க வேண்டும்! மறுகணம் அந்த உருவம் மாயமாய் மறைந்தது. மற்ற இருவர் மட்டும் நின்றார்கள்.

(தொடரும்)

கல்கி கலெக்ஷன்


• பெரம்பூர் சங்கீத சபாவில் அமரர் கல்கி

# நடிவிலே! எங்கள் சங்கீதம்!

நமது இளம் நேயர்களில் சிலர் நமக்கு மிகக் காரசாரமாக எழுதியிருக்கிறார்கள். சக்கைப் போடு போட்டு வெளுத்து வாங்கியிருக்கிறார்கள். எல்லாம் 'லாரலப்பா' சங்கீதத்தை நாம் தாக்கி எழுதியதற்காகத்தான்!

ஸ்ரீ எம். ராஜாராம் (மெயின் ஹாஸ்டல், அமெரிக்கன் காலேஜ், தல்லாகுளம், மதுரை) எழுதியிருக்கிறார்:-

"இன்று இந்நாட்டில் ரேடியோ வைத்திருப்பவர்களில் 70 சதவிகிதத்தினர் கர்நாடக சங்கீதம் கேட்பதற்காக ரேடியோ வாங்கவில்லை. ஓய்வு நேரங்களிலே நல்ல சினிமாப் பாட்டுக்களையும், ஹிந்தி சினிமா கீதங்களையும், சுவை மிக்க நாடகங்களையும் கேட்பதற்காகத்தான். உண்மை நிலை இது. அது கண்டு ஆத்திரப்படுவதில் அர்த்தமேயில்லை... சங்கீதம் என்பது யாது? சாதாரண மக்களையும் தன்பால் ஈர்க்கக்கூடிய சக்தி வாய்ந்ததே உண்மையான சங்கீதமாகும்... தங்கள் யோசனையைத் திவாகர் பின்பற்றினால் அதன் விளைவாக இந்தியாவில் 70 சதவிகிதத்தினர் இந்திய நிலையங்களை வைத்துக் கேட்க மாட்டார்கள். அவர்கள் விரும்பியவண்ணம் பணியாற்றிக் கொண்டிருக்கும் 'ரேடியோ சிலோன்' 'ரேடியோ கோவா' ஆகிய நிலையங்களை வைத்துக் கேட்டுக் கொள்வார்கள். தங்களைப் போன்ற ஒருசிலர் மட்டும் இந்திய வானொலி நிலையங்களில் 'பாரதிய சங்கீதம்' கேட்டு ரஸித்துக் கொண்டிருக்கலாம்!..."

ஸ்ரீ ம.ந. ராமசாமி (பவர்ஹவுஸ், சிங்காரா, நீலகிரி) எழுதியுள்ளார் :-

"ஜூலை 22-ந் தேதி இதழில் கர்நாடக சங்கீத ரஸிகர்கள் என்னும் பிற்போக்குக் கும்பலுக்கு வக்காலத்து வாங்கித் தலையங்கம் எழுதியிருக்கிறீர்கள். நாலு வருடங்களுக்கு முன் 'ரத்தன்' என்னும் படம் சென்னையில் மட்டும் 25 வாரங்கள் ஓடியதே, அது ஞாபகம் இருக்கிறதா? சரியான விளம்பரம் அளிக்கப்படாத அப்படம் அவ்வளவு

அமரர் கல்கி

காலம் ஓடக் காரணம் என்ன? கதை சுமாரானது. டைரக்ஷன், ஸினோரியா, படப்பிடிப்புக் கோணங்கள் முதலியவற்றைப் பற்றி நம் ஜனங்களுக்கு அவ்வளவாகத் தெரியாது. திறமையான நடிகர்கள் நடித்த எவ்வளவோ படங்கள் மண்ணைக் கவ்வியிருக்கின்றன. இதனால் ரத்தன் படத்தின் வெற்றிக்கு அதன் பாட்டுக்களே காரணம் என்பதைத் தாங்கள் அறிய வேண்டுகிறேன்... 'மங்கேஷ் கீதம்' என்று கிண்டலாக எழுதியிருக்கிறீர்களே? தாங்கள் என்றாவது அவ்வம்மையாரின் இசைத் தட்டுக்களைக் காது கொடுத்துக் கேட்டதுண்டா? 'படீபஹன்' என்ற படத்தில் 'கப் கப் கடே' என்ற பாடலை லதா பாடியிருக்கிறார். என் நான்கு வயதுத் தம்பி இப் பாடலைக் கேட்கப் பாதி சாப்பாட்டில் ரேடியோ அருகில் ஓடி விடுவான். தற்சமயம் வெளிவரும் ஹிந்திப் படங்களின் பாடல்களைக் குழந்தைகளே வெகு ஆவலோடு ரஸிக்கின்றனர்; கேட்டுக் கேட்டுக் கூத்தாடுகின்றனர். இப்படிப்பட்ட ஒரு சங்கீதத்தை, நந்த வம்சத்தைச் சாணக்கியன் ஒழித்துக் கட்ட விரும்பியதைப் போல் தாங்களும் விரும்புகிறீர்கள். சங்கீதம், சங்கீதம் என்கிறீர்களே, எது சங்கீதம்? எருமைக் குரலில் சப்த ஸ்வரங்களில் 'ஸ'வுக்கும் 'க'வுக்கும் வித்தியாசமில்லாது உறுமும் சங்கீத வித்வானின் கூச்சலைச் சங்கீதம் என்கிறீர்களா? நாளை தங்கள் மடியில் தவழும் பேரனோ, பேத்தியோ தன் மழலை வாயால் 'கப் கப் கடேஹோஜா' என்றோ 'லாரலப்பா' என்றோ பாடத் தொடங்கினால், தயவுசெய்து தங்களுடைய கோபத்தை அடக்க முடிந்தால், அக் குழந்தையிடம் 'ஸரஸீருகா ஸனப் பிரியே' என்றோ, 'நடசி நடசி' என்றோ பாடி, கர்நாடக சங்கீதத்தின் உயர்வைக் குழந்தைக்கு அறிவுறுத்தப் பாருங்கள்...!''

இதே தோரணையில் இன்னும் போடு போடு என்று போட்டிருக்கிறார் மேற்படி நண்பர். செங்கற்பட்டிலிருந்து ஸ்ரீ பி. வெங்கடேஷ் (பி.ஏ. ஆனர்ஸ் மாணவர்) எழுதியிருப்பதையும் கேளுங்கள் :-

''பாமர மக்கள் கர்நாடக சங்கீதத்தை அநுபவிப்பது மிகவும் கஷ்டம். அவர்கள் சங்கீதத்தில் எதிர்பார்ப்பது இனிமைதான்... அந்த இனிமை ஹிந்திப் பாட்டுக்களில் அதிகமாக இருக்கிறது. 'லாரலப்பா' உங்களுக்கு அலறல் சத்தமாக இருக்கலாம். ஆனால் அதே பாட்டு அநேகருக்கு ஆனந்தத்தை அளிக்கிறது. கல்யாணி ராகத்தை வித்வான் ஒருவர் எவ்வளவு அலசி அலசிப் பாடினாலும் அதைக் கேட்கும் பிரமுகர்கள் கொஞ்சம். அதே சமயத்தில் மற்றொரு நிலையத்தில் 'பர்ஸாத்' பாட்டுகள் ஒலிபரப்பப்பட்டால் அதைக் கேட்டு மகிழும் அன்பர்கள் அநேகம்... வானொலி நிலையங்களிலுள்ள அவ்வளவு ஸினிமாப் பாட்டுக்களையும் உடைத்தெறிந்து விட வேண்டும் என்று எழுதியிருப்பது அதிசயத்தையும் ஆத்திரத்தையும் மூட்டுகின்றது. உங்களுக்கு ஸினிமாப் பாட்டுக்கள் பிடிக்கவில்லையென்றால் அவை ஒலிபரப்பப்படும்போது ரேடியோவை மூடி விடும். பக்கத்து வீட்டில் சினிமாப் பாட்டு, உரக்கப் பாடிக் கொண்டிருந்தால் காதில் பஞ்சு அடைத்துக் கொள்ளும். ஹிந்திப் பாட்டுக்களை 'டப்பா' பாட்டுக்கள் என்று சிறிதும் கூச்சமில்லாமல் எழுதியிருக்கிறீர்கள். நானும் ஒரு பத்திரிகை நடத்தி அதில் கர்நாடக சங்கீதத்தைத் 'தரநந்நா' என்றால் நீர் சும்மா இருப்பீரா...?''

இம்மாதிரி இன்னும் பல கடிதங்கள். பெரும்பாலும் இளம்பிராயத்து நண்பர்கள் எழுதியவை. ஹிந்தி ஸினிமா மெட்டுக்களை நாம் தாக்கியது அவர்களுடைய எழுதும் ஆற்றலையே வெளிக்கொண்டு வந்திருப்பது போல் தோன்றுகிறது. அவ்வளவு ஆவேசத்துடனே எழுதியிருக்கிறார்கள்.

ஹிந்தி ஸினிமா மெட்டுக்களினால் கர்நாடக சங்கீதத்துக்கு அபாயம் என்று நாம் எழுதியது ஒருவேளை மிகையாயிருக்குமோ என்ற சந்தேகம் சிறிது நமக்கு இருந்தது. அதுவும் இப்போது தீர்ந்து விட்டது. இப்போது போகிற போக்கில் போய்க் கொண்டிருந்தால், அடுத்த தலைமுறையில் கர்நாடக சங்கீதத்தைக் கேட்கவே யாரும் இருக்க மாட்டார்கள் என்று நாம் இப்போது திட்டமாகச் சொல்லக்கூடும்.

நம்முடைய கட்சியை ஆதரித்து எழுதியுள்ள சில 'கர்நாடகப்' பேர்வழிகளும் இல்லாமற் போகவில்லை. ஜேம்ஷெட்பூரிலிருந்து ஸ்ரீ டி.எஸ். பாலு எழுதுகிறார் :-

"The 'Dappa' music which you have mentioned comes mainly from the Radio Ceylon. This station has about one dozen gramaphone plates. This 'Dappa' plate and its sisters are played over and over again with the result that at any time of the day or night you tune your Radio and hear only the 'Dappa'. The only remedy to stop this is for our Government to jam the station. None who is sane and has taste will tune to such music, but unfortunately in a house where there are children only such programmes will come out... This dirty and unwholesome music does more harm than good to the children. If anything is done so that this music is not heard in India every parent will be grateful to the authorities."

இந்த நண்பருக்கு ஸினிமா சங்கீதத்தின் பேரில் அவ்வளவு வெறுப்பு இருக்கிறது. டப்பா சங்கீத இசைத் தட்டுக்கள் அடிக்கடி வைக்கப்படும் ஸிலோன் ரேடியோவை இந்தியாவில் கேட்க முடியாமல் செய்துவிட வேண்டும் என்று சொல்கிறார். ஆனால் இவரும் ஒரு விஷயத்தை ஒப்புக் கொள்கிறார். வீட்டில் குழந்தைகளின் இளம் உள்ளத்தை அந்த ஸினிமா 'டப்பா' சங்கீதம் கவர்ந்து விடுகிறது என்று. ஆகவே, கர்நாடக சங்கீதத்தின்

## கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை

வாழையடி வாழையாக வந்த தஞ்சாவூர் சங்கீதத் திருக்கூட்டத்தில் கும்பகோணம் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை உன்னத ஸ்தானம் பெற்றவர். திருக்கோடி காவல் கிருஷ்ணையராலும் மலைக்கோட்டை கோவிந்தசாமிப் பிள்ளையாலும் அழியாத பெருமையை அடைந்த வயலின் வாத்தியத்தை இன்று அருமையாகக் கையாண்டு வருகிறவர். ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை பிடில் தந்தியில் வில்லைப் போட்டு இழுக்கும்போது, அவர் வாத்தியந்தான் வாசிக்கிறாரா, அல்லது இன்னிசையுடன் இனிய தேனைக் கலந்து பொழிகிறாரா என்று தோன்றும். அவ்வளவு மாதுரியமும் விறுவிறுப்பும் உள்ள வாசிப்பு. நமது பிரபல வாய்ப்பாட்டு வித்வான்களிலே, பக்க வாத்தியத்துக்கு ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளையை விரும்பாதவர் இல்லை. இளம் பாடகர்களிலே, அவருடைய பக்க வாத்தியத்துக்கு ஆசைப்படாதவர் இல்லை. பாடகர்களுக்கு ஒத்தாசையாகப் பக்கவாத்தியம் வாசிப்பதில் இராஜ மாணிக்கம் பிள்ளைக்கு இணை இராஜ மாணிக்கம் பிள்ளைதான். அவருடைய ஒத்தாசையான பக்கவாத்திய வாசிப்பினாலேயே பிரபலமடைந்த பாடகர்களும் உண்டு.



சங்கீத வித்வான்களுக்குள்ளே இங்கித மறிந்தவர் இராஜ மாணிக்கம் பிள்ளை; எல்லாருக்கும் நல்லவராய்ப் பழகுகிறவர். காந்தி பக்தர்; கதர் அபிமானி; பரிமள சந்தனப் பிரியர்; தியாகப் பிரம்மத்திடம் அபார பக்தி; தமிழிசையிலும் ஆர்வம் உண்டு. - ஒருவருடைய வாழ்க்கை சந்தோஷமயமாயிருப்பதற்கு இன்னும் என்ன வேண்டும்?

**(கல்கி, செப்டெம்பர் 10, 1944)**

வருங்கால கதியைப் பற்றி நம்முடைய பயம் மேலும் உறுதிப்படுகின்றது!

கிரேக்க நாடு ஒருகாலத்தில் உலகில் இணையற்ற மகோந்நத பதவியை வகித்திருந்தது. கிரேக்க சாம்ராஜ்யம் எங்கெங்கும் பரவியிருந்தது. பிறகு அந்த சாம்ராஜ்யத்துக்கு அபாயம் வந்தது. நாலாபக்கமும் எதிரிகள் சூழ்ந்தார்கள். தோல்விக்கு மேல் தோல்வி ஏற்பட்டது. சாம்ராஜ்யம் சின்னாபின்னமாகி விடும் என்று தோன்றியது. அப்போது கிரேக்க நாட்டு மகான் ஒருவர் இருந்தார். அவர் கடவுளிடம் பிரார்த்தனை செய்தார் :-

"எங்கள் சாம்ராஜ்யம் போகட்டும்; எங்கள் ஐசுவரியம் போகட்டும்; எங்கள் மாடமாளிகை வண்டி வாகனங்கள் போகட்டும், எங்கள் வர்த்தகம், கைத்தொழில், கப்பற்படைச் செல்வம் எல்லாம் போகட்டும். ஆனால், ஆண்டவனே! எங்கள் நாட்டின் புராதனமான கலைகளை, கவிதை, காவியம், சிற்பம், சங்கீதம் ஆகிய இணையில்லாச் செல்வங்களை, - அழியாதபடி காப்பாற்றிக் கொடுப்பாயாக!"

இவ்விதம் அந்த கிரேக்க ஞானி வேண்டிக் கொண்டார். ஆண்டவனும் அருள்புரிந்தார். கிரேக்க நாட்டுக் கலைச் செல்வங்களே மேனாட்டின் கலை வளர்ச்சிக்கெல்லாம் அடிப்படையாக அமைந்திருக்கின்றன.

இவ்விதம் அந்த கிரேக்க ஞானி வேண்டிக் கொண்டார். ஆண்டவனும் அருள்புரிந்தார். கிரேக்க நாட்டுக் கலைச் செல்வங்களே மேனாட்டின் கலை வளர்ச்சிக்கெல்லாம் அடிப்படையாக அமைந்திருக்கின்றன.

மனிதர்களுக்கு ஆன்மா உள்ளது போல் ஒரு நாட்டுக்கும் ஆன்மா உண்டு. அந்த ஆன்மா அந்த நாட்டிற்கே உரிய புராதனக் கலைதான். உடம்பில் நோய் வந்தால் தீர்த்துக் கொள்ளலாம்; ஆன்மாவுக்கே நோய் வந்து விட்டால் அழிவுதான். அரசியலில் அடிமைப்பட்டிருந்தால் விடுதலை தேடிக் கொள்ளலாம்; செல்வம் பறிபோயிருந்தால் திரும்பச் சம்பாதித்துக் கொள்ளலாம்; ஆனால் கலை ஞானத்தை இழந்து விட்டால் அந்த நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் கதிமோட்சமே கிடையாது.

மிக இனிமையான குரலில் பாடப்படும் சினிமா 'டப்பா' சங்கீதத்தைக் காட்டிலும், உடைந்த குரலை உடைய கர்நாடக சங்கீத வித்வான் பாடும் கல்யாணி ராக ஆலாபனத்தை அதிகமாக ரஸிப்பவர்கள் தென்னாட்டில் உள்ள வரையில் இந்நாட்டுக்கு உயிர் உண்டு. இத்தகைய ரஸிகர்கள் அற்றுப் போகும்போது தென்னாட்டின் ஆன்மா நோய்ப்பட்டு அழிந்து விட்டது என்று வைத்துக் கொள்ளலாம்.

"பாமர ஜனங்களுக்குப் பிடித்திருக்கிறது" "குழந்தைகள் ஸினிமாப் பாட்டையே விரும்புகிறார்கள்" என்று நம் இளம் நேயர்கள் சொல்லும் வாதங்கள் உண்மையில் நம்முடைய கட்சியையே பலப்படுத்துகின்றன.

நமது கலை எல்லாம் குழந்தைகளின் தரத்திலேயே இருக்க வேண்டுமா, என்ன? குழந்தைகள் பிரியப்படும் உணவையே அவர்களுக்கு அளித்துக் கொண்டிருப்போமா?

ஜனங்கள் அடிக்கடி எதைக் கேட்கிறார்களோ அதுவே அவர்களுடைய காதுக்குப் பழக்கமாகிப் பிடித்துப் போகிறது. நல்ல விஷயங்கள் ஜனங்களுக்குப் பிடிக்கும்படி செய்வது பெரியோர்களின் கடமை; பொதுஜன சர்க்காரின் முதன்மையான கடமை.

தென்னாட்டின் புராதன கலைச் செல்வங்களில் கர்நாடக சங்கீதம் தலைசிறந்தது. நமது சங்கீதத்துக்கு இணையான சங்கீதம் உலகத்திலேயே வேறு கிடையாது. அப்படிப்பட்ட கலைச் செல்வத்துக்குத் தீங்கு நேருவதைப் பார்த்துக் கொண்டிருப்பது நம் வருங்கால சந்ததிகளுக்குப் பெருந் தீங்கு செய்வதாகும்.

**(கல்கி, ஆகஸ்ட் 12, 1951)**

# ‘டபுள் டூட்டி!’

திரைப் பாடல்களில் குரல்களோடு இசைக் கருவிகளும் சங்கமமாவது தெரியும். அப்படி இசைப்பவர்களில் தேர்ந்த கர்நாடக இசைக் கலைஞர்களும் உண்டு என்பது தெரியுமா? இசைக் கச்சேரி, சினிமா ரெக்கார்டிங் ஆகிய இரண்டிலும் ஈடுபடுவதால் ஏற்படும் அனுபவங்களை அறிய, அப்படிப்பட்ட நால்வரைச் சந்தித்தோம்.

• பாலசாய்

• எம்பார் கண்ணன்

**டி.ஏ. ஸ்ரீநிவாஸ் (மிருதங்கம்):**



• டி.ஏ. ஸ்ரீநிவாஸ்

என் வீட்டுத் தோட்டத்தில் (ஜென்டில்மேன்), உயிரும் நீயே (பவித்ரா), தில்லானா தில்லானா (முத்து) - இப்படிப் பல பிரபல திரைப் படப் பாடல்களுக்கு நடுவே இவரது மிருதங்கம் ஒலித்திருக்கிறது. ''இசையமைப்பாளர்களே எங்களது 'பிட்'டுகளை உருவாக்குவார்கள். என்றாலும் அதை மேம்படுத்தி, எங்கள் இசை ஞானமும் நன்கு வெளிப்பட வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். அந்த வகையில், 'தில் ஸே' படத்தில் லதா மங்கேஷ்கரின் பாடல், டூயட்டில் இடம் பெறும் 'மெட்டுப் போடு', 'ருக்கு ருக்கு'வில் இடம்பெற்ற தனி ஆவர்த்தனம் ஆகியவை சவாலாகவும் சந்தோஷமாகவும் இருந்தன'' என்கிறார்.



''ஒரு கால்ஷீட்டுக்குக் குறைந்தது

மூவாயிரம் ரூபாய் கிடைக்கும்'' என்று அவர் கூற, 'கச்சேரிகளோடு நிறுத்திக் கொள்ளாமல், திரைப் படங்களுக்குச் சென்றதேன்?' என்ற நமது அடுத்த கேள்வியைக் கேட்க வேண்டிய அவசியமில்லாது போயிற்று!


• பார்த்தசாரதி

இருவித நிகழ்ச்சிகளுக்குமிடையே க்ளாஷ் ஏற்படாதா? 'படாதா'ம்! ''கச்சேரி தேதியைப் பற்றி இரண்டு மாதங்களுக்கு முன்பே தெரிந்து விடும். சினிமா சான்ஸ் அப்படியல்ல. ரெகார்டிங் அன்றோ அல்லது அதற்கு முதல் நாளோதான் சொல்லுவார்கள். அன்று கச்சேரி இல்லை என்றால் ஒப்புக் கொள்வேன். அவ்வளவுதான்'' என்கிறார். போன பத்தாவது நிமிடமே ரெகார்டிங் தொடங்கி விடுவது உண்டு என்றாலும் பிஸியான இசையமைப்பாளர் என்றால் ஆறு மணி நேரம் கூட அவர் வரும் வரை காத்திருக்க நேரலாம் என்பதையும் கூறுகிறார் ஸ்ரீநிவாஸ்.

**எம்பார் கண்ணன் (வயலின்):**

**1991**-ல் இளையராஜாவின் குழுவில் இடம்பெற்ற இவர், அவரது வாரிசான கார்த்திக் ராஜாவின் எல்லா திரையிசையமைப்பு முயற்சிகளிலும் பங்குபெற்றிருக்கிறார். 'நாம் இருவர் நமக்கு இருவர்' படத்தின் பின்னணி இசையில் தமது பங்கைக் குறிப்பிட்டுக் கூறுகிறார்.

''கச்சேரி என்றால் நூறு சதவிகிதம் சாஸ்திரிய சங்கீதம்தான். சினிமாவுக்கு என்றால் கொஞ்சம் மேற்கத்திய இசையையும் கலக்க வேண்டியிருக்கும். அந்த இசையையும் நான் பயின்றதும் வயலினே ஒரு மேற்கத்திய இசைக் கருவிதான் என்பதும் உதவியாக இருக்கின்றன. சில சமயம் இசையமைப்பாளர் நோட்ஸ் கொடுத்து அப்படியே வாசிக்கச் சொல்வார். தீபாவளி, பொங்கல் போன்ற சீசனில் தொடர்ந்து நிறைய வாய்ப்புகள் இருக்கும். அப்போது பல படங்கள் ரிலீஸாகுமே! கச்சேரிக்குப் போக வேண்டுமென்றால் ரெகார்டிங்கை அட்ஜஸ்ட் செய்து முடிக்கவும் இசையமைப்பாளர் உதவுவதுண்டு...''

இப்படி விவரித்த கண்ணனிடம், ''கச்சேரி, திரைப்பட பின்னணி இசை இரண்டில் எது அதிகம் திருப்தி தருகிறது?'' என்று கேட்டோம்.

''இரண்டுமே என்றாலும் கச்சேரியில்தான் கூடுதல் திருப்தி. நமக்கென்று தனி அப்ளாஸ் கிடைக்குமே! சினிமாவில் நாம் எவ்வளவுதான் பிரமாதமாகவும், கணிசமான நேரங்களில் சுயமாகவும் வாசித்தாலும் கூட முழுப் புகழும் இசையமைப்பாளருக்குத்தானே போகும்! எந்தெந்தப் பாடல்களில் என் பங்கு இருந்தது என்பதை நீங்கள் கூட என்னைக் கேட்டுத்தானே தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது!

**பார்த்தசாரதி (வீணை):**

**ரா**ஜேஸ்வரராவிலிருந்து ரஹ்மான் வரை உடன் பணியாற்றிய 25 வருட அனுபவம் உண்டு இவருக்கு! பன்னிரண்டு ஆண்டுகள் இளையராஜாவின் இசை




''கொடுத்த லஞ்சத்துக்குக் காரியம் நடக்கலாம், நடக்காமலும் போகலாம்; அதுக்காக இவ்வளவு பகிரங்கமா போர்டு போடணுமா ஸார்?''

— சீர்காழி வி. ரேவதி

யமைப்பில் இசைத்திருக்கிறார்.

"பொதுவாக மற்றவர்கள் பாரம்பரிய பாணியில்தான் சினிமாவில் வீணை வாசிப்பார்கள். நான் சிதார், வீணை இரண்டின் ஒலி மிக்ஸை வெற்றிகரமாகப் புகுத்தினேன்."

தம் தந்தை வீணை ராகவனிடம் பதினைந்து வருடங்கள் இந்த இசையைக் கற்றபோது திரைப்படப் பாடல்களில் நுழையும் ஆர்வம் இருந்ததில்லை என்றாலும் அவரது தந்தையின் இருதய அறுவை சிகிச்சைக்கு ஏற்பட்ட செலவின் காரணமாக திரைத் துறையிலும் தடம் பதிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டிருக்கிறது இவருக்கு.

"சினிமாதானே என்று அலட்சியமாக நினைக்கக் கூடாது. நம் திறமையை நிரூபித்துக் காட்டுவதுடன், அதை மேலும் மேலும் பட்டைத் தீட்டிக் கொண்டே இருந்தால்தான் இந்தத் துறையில் நிலைத்திருக்க முடியும்" என்கிறார்.

**பாலசாயி (புல்லாங்குழல்):**

**க**ன்னடத்தில் விஜயபாஸ்கர், தெலுங்கில் கிரவாணி, மலையாளத்தில் ரவீந்திரன் என்று பட்டியலிடுகிறார் பாலசாயி. கடந்த பத்து வருடங்களில் இவர்களின் இசையமைப்பில்தான் அதிகம் பங்கு பெற்றிருக்கிறாராம்.

இசை நிகழ்ச்சிகளில் வழக்கமான புல்லாங்குழல் என்றால், திரைப்படப் பாடல்களுக்கு 'மேற்கத்திய புல்லாங்குழலை' (இதில் கமகம் கிடையாது. தவிர பட்டன்கள் கொண்டது இது) பயன்படுத்த வேண்டி இருக்கிறதாம். இவரது அப்பாவும் பிரபல அந்நாள் இசையமைப்பாளர் சுதர்ஸன் ராவிடம் பணியாற்றிய புல்லாங்குழல் வித்வான்தான்.

"பத்து வருடங்களுக்கு முன் சினிமாப் பாடலுக்கு ஃப்ளூட் வாசிக்கும் வாய்ப்பு கிடைத்தபோது ரொம்பவும் தயக்கமாக இருந்தது. சீக்கிரமே இதில் எந்தவித கௌரவக் குறைவும் இல்லையென்று புரிந்து கொண்டேன்" எனும் பாலசாயி, வேறு ஒரு விஷயத்திற்கு வருத்தப்படுகிறார்.

"கம்ப்யூட்டர் போன்ற எலக்ட்ரானிக் சாதனங்களின் பங்கு திரை இசையில் அதிகமாக ஆக எங்களது பங்கு குறைந்து வருகிறது."

— ஜி.எஸ்.எஸ்.

பா

ரதி மாடிக்குச் செல்ல விரும்பினாள். "நீங்கள் மட்டும் வாங்க ரியாஸ்" என்றாள்.

சற்று நேரம் அந்த பெரிய வீட்டின் மொட்டை மாடியில் நின்றாள். ரியாஸ் சற்று எச்சரிக்கையாக இருக்க விரும்பினார். சட்டென்று குதித்து விடப் போகிறாள் என்று அருகில் போய் நின்றார்.

"குதிச்சுருவேன்னு பயப்படறீங்களா? இல்லை ஸார். குதிக்கமாட்டேன். தற்கொலை செய்துக்கறதா இருந்தா என் ஆனந்தை சுட்ட கணமே நானும் சுட்டுக்கிட்டு இருந்திருக்கலாமில்லை! ஏன் அந்த மாதிரி செய்யலை? எனக்கே புரியலை!"

"எனக்குக் கொஞ்சம் புரிய ஆரம்பிக்குதுங்க!"

"ஒரு மிக அருமையான சைன்டிஸ்டை அந்தக் காரியம் செய்ய வெச்சது எதுங்கறதை முழுமையா கண்டு பிடிக்கற விருப்பமா இருக்கலாம். எத்தனை தடவை கேட்டேன், 'எதுக்காக வீட்டில் போன் இருக்கறப்ப எஸ்டிடி பூத்ல போய் போன் பண்றிங்க ஆனந்த்? ஏதாவது

# ஆர்யபட்

சிக்கல்ல மாட்டிக்கிட்டிருக்கீங்களா, சொல்லுங்க ஆனந்த். என்ன விஷயமா இருந்தாலும் சொல்லுங்க ஆனந்த். நான் உங்க கட்டின பெண்டாட்டி. எங்கிட்ட எதையும் மறைக்கத் தேவையில்லை. கெட்ட செய்தியா இருந்தாலும் சரி. சொல்லிடுங்க. அப்பத்தான் மனசில நிம்மதி வரும்'னேன்.

"மௌனமாவே இருந்தார். மனசில போராட்டம், முகத்தில் தெரியுது. சொல்லிடலாம் சொல்ல வேண்டாம்னு அல்லாடறது எனக்குத் தெரியுது. 'ஆனந்த் என் வயிற்றில் வளர்ற உங்க குழந்தை

# 19

மேல சத்தியமா சொல்லுங்க. எங்கிட்டருந்து எதையும் மறைக்கலைன்னு...'

'அதுக்கெல்லாம் பயப்படறவன் இல்லை நானு' என்றார்.

"நான் என்ன பண்ணேன், லாப்ல ஒரு ஆஸிட் பாட்டிலை எடுத்தேன். குடிச்சுருவேன்னு பயமுறுத்தினேன். ஆளு பயந்துட்டார். 'வேண்டாம் பாரதி. சொல்லிடறேன். நான் சொல்றதில உள்ள அதிர்ச்சியை தாங்கிக் கொள்கிற சக்தி இருக்கணும் உன்க்கு. இனிமே இந்த பைத்தியக்கார காரியம் செய்ய மாட்டேன்னு சத்தியம் பண்ணிக் கொடுக்கணும்'ன்றார். சத்தியம் பண்ணிக் கொடுத்தேன்.

'உங்கிட்ட சொல்லி மனசை லேசாக்கிக்கலாம்னு நினைச்சேன். இதுவரைக்கும் அதுக்கு வேளை வரலை. உலகத்தில் பணத்தை விட பெயர்தான் முக்கியம்ங்கற தப்பான பாவனையை அழிச்சுப் பெயரெடுப்பதைவிட, பணம்தான் பெரிசுங்கறதே இந்த சமூகம் எனக்கு கத்துக் கொடுத்த பாடம்?'

'அதில் தப்பு என்ன?'ன்னேன்.

'இருக்கு. தப்பு இருக்கு. தப்பு இருக்கு. தேசத்துரோகம்!'

"எனக்கு அந்த வார்த்தைகளின் பூரணமான தாக்குதல் கிடைச்சபோது, அதிர்ச்சில எதும் பேச முடியாம என் ரூமுக்கு வந்து கதவை மூடிக்கிட்டேன். எனக்கு அந்த அதிர்ச்சியை கிரகிச்சுக்க அவகாசம் தேவையாக இருந்தது.

'பாரதி பாரதி! என் நிலையைப் புரிஞ்சுக்கணும் பாரதி. நீ புரிஞ்சுக்கிட்டே ஆகணும்'னு வற்புறுத்தினார்.

"அதுக்கப்புறம் ஒரு வாரம் நான் அவர் கூட பேசவே இல்லை. முழு நேரமும் லாப்ல தான் இருந்தார். ஏதோ பீக்கரில் ஏதோ திரவம் பொங்கும். அதில் ஏற்படும் மாற்றத்தை ஆனந்த் தீவிரமாக யோசிப்பார். தனக்குள்ளேயே பேசிப்பார். அவருடைய ஆராய்ச்சி உச்சகட்டத்தை அடைந்திருக்கறது தெரிஞ்சுது. போர்டில் ஃபார்முலாவை எழுதுறார். கம்ப்யூட்டரில் கணக்குப் போட



றார். போர்டை அழிக்கிறார். எதோ பித்துப் பிடித்தவர் போல் இயங்கினார்.

"பெரிய பெரிய புத்தகங்களைப் புரட்டிக் கிட்டு, யார் என்ன சொன்னாலும் நான் சொன்னதுதான் சரி. யார் குறுக்கிட்டாலும் நான் செய்யப் போறது நிச்சயம்னு தனக் குள்ளயே பேசிக்கிட்டு.... எனக்கு பயமாவே இருந்தது. அது என் ஆனந்தே இல்லை. அது ஏதோ ஒரு பேய் பிடிச்ச ஆனந்த்...

"எனக்கு என்ன செய்யறது, எப்படி அவரைத் தடுக்கறது? எதுவுமே புரியாம இருந்தது. சட்டுனு தீர்மானிச்சு சென்னைக்கு வந்தேன் அப்பாவைப் பார்க்க.

"அப்பாகிட்ட விவரமா சொல்லிட்டேன். அவர், 'நீ செஞ்சது தப்பு, வீட்ட விட்டு இந்தச் சமயத்தில் வந்திருக்கக்கூடாது. சூழ் நிலையும் சந்தர்ப்பமும், திறமைக்கு மதிப்புத்

## சுஜாதா

தராத இந்தச் சமுதாயமும், ஆபீஸ்ல ரெகாக் னிஷன் இல்லாததும்தான் ஆனந்தை கெட்ட வழியில், செலுத்துது. நீ இருந்து அவனைத் திருத்த, திருப்ப முயற்சிக்கணும்மா. நீதாம்மா அவருக்கு பக்கபலம்'னார்.

'அந்தச் சூழ்நிலையில் என்னால ஒரு நிமிஷம் வாழ முடியலைப்பா. 'ஆனந்த் இருந் தற நிலையைத் தாண்டிட்டார். வெறி புடிச் சாப்பல ஆராய்ச்சி பண்ணிக்கிட்டு இருக் கார். அதை ஏதோ தேச விரோதிகளுக்கு விற்கத் தீவிரமா முயற்சி செய்துக்கிட்டு இருக் கார்ப்பா' என்றபோது அப்பாவால் நம்ப முடியலை. 'ஆனந்த் இப்படியெல்லாம் செய் வானான்னு எதுக்கும் நான் முன்னாவுக்கு

போன் பண்ணி, ஆனந்த் கிட்ட பேசச் சொல்றேன்'னாரு.

"இரண்டு மூன்று தினம் அப்பாவுடன் மதராஸில் இருந்தேன். என் ஆனந்தை விட்டு ஒரு நிமிஷம் கூட பிரிந்திராதவளுக்கு, பிறந்த வீடு நரகமாக இருந்தது.

"அப்பா சொன்னது சரிதான். நான் ஆனந்தை விட்டு வந்திருக்கக்கூடாது. அவரை நல்ல வழியில் திருப்புவதற்கு என்னைத் தவிர வேறு யாரால் முடியும்? நான் தப்புச் செய்துட்டேன். உடனே நான் வீடு திரும்ப வேண்டும்.

"என் மாமன் முன்னாவுக்குத் தகவல் சொல்லிவிட்டு, நான் பெங்களூர் திரும்பினேன். ஆனந்துக்கு ஒரு சர்ப்ரைசாக இருக்கட்டும் என்று போன் பண்ணாமல் புறப்பட்டேன்.



''மழைக்காலமும் அதுவுமா குடையை இப்படி உடைச்சிட்டியேடா, முட்டாள்!''

"மத்த நாள்ல உடைச்சா மட்டும் சும்மா விட்டுடப் போறியா என்ன?"

– ஆட்டையாம்பாளையம் சு. குமார்

"சர்ப்ரைஸ் எனக்குத்தான். சர்ப்ரைஸ் மட்டும் இல்லை. அதிர்ச்சி!

"ஒரு ஆட்டோவில் வந்து இறங்கிட்டு காசு கொடுத்துவிட்டு மெல்ல கதவைத் திறக்கிறேன். என்னிடம் டுப்ளிக்கேட் சாவி இருந்தது. ஆனந்துக்கு ஒரு இன்ப அதிர்ச்சி கொடுக்க வேண்டும். முன்னறிவிப்பில்லாமல், சப்தமிடாமல் பின்னால் வந்து அணைக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் பூனைப் பாதங்களுடன் மெல்ல அணுகினேன்.

"உள்ளே பேச்சுக்குரல் கேட்டது. ஆனந்த் சில அன்னியர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். ஆனந்தின் அறையில் மேசை மேல் பலவிதமான ப்ளுப்ரிண்ட்கள் வைக்கப்பட்டிருந்தன. ஓவர்ஹெட் ப்ரொஜெக்டரில் சுவரில் ஹைதராபாதின் வரை படம் தெரிந்தது.

"அங்கே வீற்றிருப்பவர்கள் அன்னிய முகங்கள். ஸ்கல் காப் அணிந்த இரானிய தோற்றமுள்ள ஒருவன், ஒரு வெள்ளைக்காரன், ஒரு இடாலியன், ஒரு இந்திய ஏஜெண்ட்.

"அனைவரும் ஆனந்த் சொல்வதை உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருந்தார்கள். சுவரில் Project SOMU To conquer the world என்று எழுதியிருந்தது. ஆனந்த் அந்த அன்னியர்களுக்கு ஒரு மிக அபாயகரமான ஏவுகணையைப் பற்றி விவரங்கள் தந்து கொண்டிருந்தார்.

"எனக்கு பிரமிப்பில் அப்படியே பேச்சு வராமல் சற்று நேரம் கேட்டுக் கொண்டிருந்தேன். என்னால் என் கண்களையும் காதுகளையும் நம்பவே முடியவில்லை. நம் ஆனந்தா இப்படி நாட்டின் அழிவிற்கு வித்திடும் ஆயுதத்தை வெளிநாட்டுச் சதிகாரர்களுக்கு விற்கிறார்! அவர்களைப் பார்த்தால் நல்லவர்களாகத் தெரியவில்லை. காசுக்காக எந்நாட்டையும் அழிக்கவல்ல, எந்தக் காரியத்தையும் செய்யவல்ல, மெர்ஸினரிக்கள் போல தோற்றமளித்தார்கள். ஆனந்த் இதில் அழிவு அதிகம் என்கிறார்.

'கவலைப்படாதே. எந்த நகரத்தையும் அழிக்க மாட்டோம். அழிப்பதாகச் சொல்லி அந்தந்த அரசாங்கத்திடமிருந்து பணம் பறிக்க வேண்டும். அதில்தான் சாகசம். நீ வியாபாரம் பேசு ஆனந்த்?'

"அவர்களில் தலைவன் ஆனந்துடன் கை குலுக்கினான்.

'முப்பதாம் தேதிக்குள் பதினெட்டு தயார் செய்துவிடு' என்றான்.

ஆனந்த், 'வாண்ட் எ டெமோ?'ன்னார்.

தலைவன் 'சாக்கிரதை'ன்னான்.

"ஆனந்த் சிரித்து, பயப்படாதீர்கள் என்று சொல்லி வருணித்தது மிக பயங்கரமான திட்டம்!

"நாட்டில் கலகம் விளைவிக்க பொதுக் கட்டடங்கள், பொதுக்கூட்டங்கள் அருகில் இந்த மிசைல்களை புதைத்து விட வேண்டியது. அவைகளை ஒரே சமயத்தில் தூரத்திலிருந்து ஒரு ஆணை கொடுத்தால், நகரம்



"ஆனாலும், இந்த பிளேடு கம்பெனிக் காரங்க, விளம்பரம் செய்யறதில இவ்வளவு ஓவரா போயிருக்கக் கூடாது!"

"அப்படி என்ன செஞ்சுட்டாங்க?"

"பிளேடு பக்கிரி உபயோகிப்பது எங்களுடைய கூர்மையான பிளேடுகளைத் தான்'னு விளம்பரம் பண்ணியிருக்காங்களே!"

– மதுரை என். உஷாதேவி

முழுவதும் இந்த பாக்கெட் அணுகுண்டுகள் வெடிக்கும். ஒரு நகரத்தையே அழித்துவிடும் வல்லமை பெற்றது. அதனால் என்ன நிகழும் என்பதைக் காட்டினார்.

'சூரியன் தவறவே தவறாத டைம்பாம். சூரியனின் ஒளி சரியா பதினோரு மணிக்கு 75 டிகிரி கோணத்தில் சாய்வாக இந்த ஹீலியோ ஸ்டாட் கண்ணாடியின் மேல் படும்போது. அதிலிருந்து புறப்படும் ஒளிக் கற்றை இந்த ப்யூஸை அறுத்துவிட, முதல் மிசைல் லாஞ்ச் ஆகும். யாரும் அருகில் இருக்க வேண்டியதில்லை. விளைவு நீங்களே பாருங்க. இது ஒரு கம்ப்யூட்டர் சிமுலேஷன். நிஜம் போலவே இருக்கும்' என்றார்.

"மானிட்டரில் விதான் சௌதா மெல்ல பகுதி பகுதியாக இடிந்து விழுந்தது. அதே போல் எம்ஜி ரோடின் பல மாடிக்கட்டடங்கள் அனைத்தும் ஒவ்வொன்றாக விழ. மேசை மேல் ஒரு டவுனின் மாடலைக் கொண்டு வைத்தார். அதில் பல இடங்களில் குறியிட்ட இடங்களை எல்லாம் காட்டி, 'இது எந்த நகரமாக வேண்டுமானாலும் இருக்கலாம். ஹைதராபாத், டில்லி, பம்பாய், கல்கத்தா, சென்னை, கோவை ஏன் நியூயார்க், ரியோ, எது வேண்டுமானாலும். பத்து முக்கியமான இடங்களில் இவ்வாறு இங்கெல்லாம் மிசைல் பொருத்தியிருக்கிறது. இந்த கட்டடத்தில்தான் ட்ரிக்கர் இருக்கிறது. எத்தனை மணிக்கு உங்களுக்கு இந்த மாடல் நகரம் வெடிக்க வேண்டும்' என்று அவர்களைக் கேட்டார்.

தலைவன், 'எட்டு மணிக்கு' என்றான்.

"ஆனந்த் கம்ப்யூட்டர் டெஸ்மினலில் 0800 என்று உள்ளிட்டார். சற்று நேரம் கம்ப்யூட்டரில் ஒரு கவுண்ட் டவுன் ஆரம்பித்தது.

'இந்த இடைப்பட்ட நேரத்தில் அரசாங்கத்தோடு பேரம்பேசலாம். பணம் வந்தால் கடைசி செகண்டு வரை திருத்தலாம், மாற்றலாம் அல்லது ரத்து செய்யலாம். எல்லாம் ரிமோட்டிலிருந்து. இறுதிவரை அரசாரங்கம் உங்கள் நிபந்தனைக்குப் பணியவில்லை என்றால் அது அவர்கள் தலைவிதி!' என்று ஆனந்தின் வாட்சில் எட்டு மணி இருக்கும் போது ஒரே சமயத்தில் அந்த பொம்மை நகரத்தில் பதித்த அத்தனை குண்டுகளும் வெடிக்க, ஒரு நிமிஷத்தில் முழுவதும் அழிந்தது!

'அத்தனையும் பாக்கெட் அணுகுண்டுகள். கண்ட்ரோல்டு ஃப்யுஷன். கச்சிதமாக, ஆனால் முழுமையாக அழித்துவிடும். பூமிக்குள் அஸ்திவாரத்தில் வெடிப்பதால் ரேடியேஷன் அதிகம் இருக்காது. ECO FRIENDLY Positive action Detonator, Sread spectrum Technique, coded commands யூஸ் பண்ணுதால 250 கிலோமீட்டரிலிருந்து பேரம் பேசலாம்'னு அப்படியே பரவசத்தில் உளர்றார்.

"தலைவன் ஆனந்தின் கைகுலுக்கிவிட்டு, 'ஒரு மணி நேரத்தில் உனக்கு ஸ்விட்ஜர்லாந்தில் ஒரு அக்கவுண்ட் திறக்கப்பட்டு, முதல் மிலியன் டாலர் பணம் கட்டப்படும். போன் வரும். காத்திரு'னு சொல்லிவிட்டு புறப்பட்டுட்டான்.

"நான் ஒளிந்து கொண்டேன். ஆனந்த் அவர்களை வழி அனுப்பிவிட்டு, உற்சாகமா விசில் அடித்துக் கொண்டு உள்ளே வந்து என்னைப் பார்த்துத் திடுக்கிட்டார்.

'பாரதி! எப்ப வந்தே?'

'நீங்க அந்த துரோகிகளோட தேசத் துரோகம் பேசறப்பவே வந்துட்டேன்!'

'தேசத் துரோகமா, என்ன சொல்ற?'

'எனக்கு எல்லாம் தெரிஞ்சுருச்சு. ஆனந்த். நீங்க நம் தேசத்தையே அழிக்க அவங்களுக்கு வழி சொல்லித்தரீங்க. அது துரோகமில்லாம வேற என்ன?'

'அழிக்க அல்ல, அழிக்கறதா பயப்படுத்த!' என் திறமையை விக்கறேன். ஒரு கவிஞனோ கதை எழுதுறவனோ பத்திரிகைக்குத் தான் எழுதினதை விக்கறதுபோல...'

# நகலை விரும்பாத மக்கள்!

பீகார் மாநில முன்னாள் முதல்வர் லாலு பிரசாத் யாதவை மையமாக வைத்து, 'தண்ட் நாய்க்' என்ற பெயரில்



இந்தித் திரைப்படம் வெளியானது. மாட்டுத் தீவன ஊழலை திரைக் கதையில் நுழைத்திருந்ததால் லாலு பாத்திரத்தில் நடித்த பரேஷ் ராவல் என்ற நடிகருக்கு அவரைப் போலவே மேக்-அப் செய்திருந்தார்கள்.

இந்தத் திரைப்படம் பீகாரில் திரையிடப்பட்ட போது தடை செய்வார்களென்று எதிர்பார்த்தார்கள். ஆனால் லாலுவோ தம்மைக் கிண்டல் செய்து ஒரு படம் வந்திருக்கிறதே என்று கோபப் படாமல், 'ஏற்கெனவே உண்மையான லாலு நான் இங்கிருக்கும்போது மக்கள் ஏன் போலியான ஆளைப் போய்ப் பார்க்கப் போகிறார்கள்?' என்று சொன்னார். அவர் சொன்னபடியே 'தண்ட் நாயக்' பீகாரில் திரையிடப்பட்ட போது மக்கள் ஆர்வத்துடன் போய்ப் பார்க்க வில்லை. படம் இரண்டு வாரங்களுக்கு மேல் ஓடவும் இல்லை!

— அ. குமார்

'இல்லை. அப்படியில்லை, கவிதைகளாலயும் கதைகளாலயும் தேசம் அழிவதில்லை...'

'சரி, துரோகம்ங்கற அதை. என் திறமையை அவங்க கண்டு கொள்ளாம இருந்தது தேசத் துரோகமில்லையா? என்னை ஒவ்வொரு கட்டத்திலயும் மட்டம் தட்டி முன்னுக்கு வர முடியாம செய்த இந்த அட்மினிஸ்ட்ரேஷன் - இந்த அரசமைப்பு செய்தது துரோகம் இல்லையா? எத்தனை திட்டம் போட்டுக் கொடுத்தேன். அது எதற்கும் நிதி ஒதுக்கீடு செய்யாம, என்னைத் தலை குனிய வச்சது துரோகம் இல்லையா? நான் என்ன செய்தேன்? என் நிஜமான திறமைக்கு மதிப்புக் கொடுத்து வாங்கறவன் கிட்ட அதை விக்கறேன். அது தப்பா? இவங்க இந்தத் திறமை வேண்டாம்னுட்டாங்க பாரதி!'

'இதனால தேசத்துக்கு அழிவு வரும்ங்கறது ஏன் ஆனந்த் உங்களுக்குத் தோணலை?'

'அதுக்கு நான் காரணமில்லை' என்றார் அலட்சியமாக.

'இது பொறுப்புள்ள பதிலா ஆனந்த்?'

'உனக்குத் தெரியாது பாரதி. நான் ஆபீஸ்ல பட்ட சிறுமையும் அவமானமும். தகுதியே இல்லாதவனை எனக்கு மேல ப்ரமோஷன் பண்ணாங்க. பரவால்லை. கவர்மெண்ட் பாலிஸி அது. இட ஒதுக்கீடு அப்படி இப்படின்னு. ஆனா நான் பெர்டிலைஸர் பாம் ப்ராஜெக்டை ப்ரபோஸ் பண்ணப்ப, அவங்க என்ன செய்தாங்க தெரியுமா? இந்த தேசத்து விவசாயிகளுக்குக் குறைந்த விலையில் ஏக்கர் கணக்கா நிலத்தைப் புரட்டிப் போடுகிற திட்டம் அது. அதனால நம்ம பொருளாதார முன்னேற்றம் கணிசமா அதிகமாகும்னு ஒரு ப்ரபோஸல் கொடுத்தேன். இந்தத் திட்டத்தை சரியா புரிஞ்சுக்கிட்டு செயல்படுத்த எங்களுக்குத் திறமை இல்லைன்னு மரியாதையா சொல்றதுக்குப் பதிலா, ஏதோ பெரிய ஹாஸ்யத் துணுக்கை கேட்டாப்ல சிரிச்சாங்க!

'ப்ரொபசர் பாக்கெட்ல என்ன வெச்சிருக்கீங்க? அணுகுண்டா, மத்யானம் என்ன டிபன்? அணுகுண்டா ப்ரொபசர்? கடலை சைஸ்ல அணுகுண்டு செய்ய முடியுமா?' இப்படியே தினம் தினம்!... செய்து காட்டறேண்டா மகனுகளா என்று நான் செய்து காட்டியது தப்பா?'

'துரோகம்ங்கற துரோகத்தினால எத்தனை நல்லது நமக்கு வந்திருக்கு தெரியுமா பாரதி. உன் உடம்பில் இருக்கற தங்கம், நீ உடுத்தற பட்டுப்புடைவை! அது என்ன ஷிஃபான் ஜார்ஜெட்டா எத்தனை ஆயிரம் ரூபாய்? உன் அழகான கழுத்தில் இருக்கற நகை, இந்த வீடு, காரு... இதெல்லாம் சைண்டிஸ்ட் க்ரேட் டூ வின் சம்பளத்தில் சாத்தியமா? எல்லாம் அதிலதான் வந்தது பாரதி. எல்லாமே உனக்குத் தந்தது. இந்த ஒரு மந்திர வார்த்தை சோமு Surface Operated Missile Underground!'

(தொடரும்)

(35-ம் பக்கத் தொடர்ச்சி)

ராகவும் மாற்றியது!

சிறு வயதிலிருந்தே ஸ்ரீரங்கநாதர் மேல் இனம்புரியாத பக்தி மௌலானாவுக்கு. பிறந்து, வளர்ந்து, வாழ்வதோ இஸ்லாம் மதப் பற்று மிக்க குடும்பத்தாருடன். இதை எவ்வகையில் சேர்ப்பது என்கிற குழப்ப மெல்லாம் அவருக்கு இருக்கவில்லை. அல்லாஹ்வுக்கும் அரங்கனுக்கும் வித்தியாச மேதும் அவருக்குத் தெரியவில்லை. இந் நிலையில் அரங்கனே தன்னை ஸ்ரீரங்கத் துக்கு அழைப்பதாக அவருக்கு அடிக்கடி தோன்ற ஆரம்பித்தது. அதன்பின் எப்படி ஆந்திரத்தில் வசிப்பது? ஸ்ரீரங்கத்துக்கு வந்து விட்டார்.

"இங்கே வந்த பிறகுதான் எனக்கு எல்லா பெருமையும் வந்து சேர்ந்தன" என்று வானம் பார்த்து, விழி மூடி நினைவு கூர்கிறார் ஷேக் சின்னமௌலானா.

அமைதியான ஊர். அரங்கனின் நிழலில், எளிமையான வீடு. முன்புறம் கூரைச் சரிவு. சிலுசிலுக்கும் காற்று. பழைய கட்டிலில் அமர்ந்திருக்கும் மௌலானா சாஹிப், கதரைத் தவிர வேறெதுவும் உடுத்து வதில்லை. ஆபரணங்களோ, அசத்தும் அங்க வஸ்திரமோ, சரிகை ஜாலமோ எப்போதும் இடையாது. அவரது வாசிப்பைப் போல வேதான் வாழ்க்கையும். எழில் கொஞ்சும் எளிமை. (ஏனோ திருப்பதியில் நாம் சந்தித்த வித்வான்களை இவருடன் ஒப்பிடாமல் இருக்க முடியவில்லை. ஆறல்ல; அறுபதல்ல; அறுநூறு வித்தியாசங்கள்!)

உடல்நலக் குறைவால் சற்றே தளர்ந் திருக்கிறார். தவிரவும் எழுபதைக் கடந்து விட்ட வயது. தவழும் நதி அலை போல் மென்மையான அசைவுகள். அதிகம் பேசுவதில்லை. சைகை மூலம்தான் சகலமும். அவரது விழி அசைவையே மொழியாகப் புரிந்து கொண்டு பதில் சொல்லும் பேரனின் மனைவி.

நாகஸ்வர வாசிப்பு என்பது ஓர் அசுர சாதனை என்பார்கள். மௌலானாவின் பேரன்களும் பிரதம சிஷ்யர்களுமான காசிம் – பாபு இருவரும், "அந்தப் பதப் பிரயோகம் போதுமான்னு தெரியலை. ஒரு நாளைக்குக் குறைந்தது பத்து மணி நேரம் பழகணும்" என்றார்கள்.

கச்சேரிகள் வாசிப்பதை அநேகமாக நிறுத்திக் கொண்டு விட்ட சின்ன மௌலானா, இன்றைக்கும் தினம் அரைமணி நேரமாவது வாசிக்கத் தவறுவதில்லை! சாதகம்தான் அரை மணி. சிந்தனை நாள் முழுக்கவே!

"இப்பல்லாம் பேஸ்வே மாட்டாருங்கோ. எப்பவும் யோஸ்னேதான். ராகம் பத்தி ரிஸெர்ச் பண்வார் போலே!"

தெலுங்கு சொட்டும் தமிழில் பேசினார், காசிம்மின் மனைவி.

இசை பற்றிய இவரது ஆராய்ச்சிகள் தேசிய அளவில் முக்கியத்துவம் பெற்றவை. குறிப்பாக நாகஸ்வர வாசிப்பு – சம்பிர தாயம் பற்றிய இவரது லெக்சர் – டெமான்ஸ்ட்ரேஷன்கள்தாம் வட இந்தியர்களுக்கு நாகஸ்வரம் என்றொரு வாத்தியம் உண்டென்பதையும் அதற்கொரு தனி இலக்கணம் உண்டென்பதையும் அறிமுகப்படுத்தியது. (அங்கெல்லாம் ஷெனாய்தானே?)



**விளம்பரத்துக்கு மட்டுமல்ல!**

**பெப்சி, கோக், பூஸ்ட் போன்ற விளம்பரங்களில் நடிக்கும் கிரிக்கெட் வீரர்கள் உண்மையிலேயே அந்த பானங்களை அருந்துகிறார்களா என்று நமக்குத் தெரியாது. ஆனால் 77–ம் ஆண்டில் லண்டனில் உள்ள ஸ்டாண்டர்ட் லைஃப் இன்ஷூரன்ஸ் கம்பெனி விளம்பரத்தில் நடித்தார் கிளைவ் லாயிட். அவர் உண்மையிலேயே அந்தக் கம்பெனியில் இன்ஷூர் செய்து கொண்டிருந்தார்!**

**– அ. குமார்**

சின்னமௌலானாவின் மிகப் பெரிய சாதனை, நாகஸ்வரத்தைப் பாமரனும் ரசிக்கும்வண்ணம் வாசிப்பில் 'சம்பிரதாயம் மீறாத ஜனரஞ்சகம்' என்கிற உத்தியைப் புகுத்தியது. குறிப்பாகத் தோடி, சிந்து பைரவி, கபபந்துவராளி போன்ற ராகங் களை சங்கீத ஞானமே இல்லாதார் கூடக் கிரங்கி ரசிக்குமளவுக்கு எளிமையாகக் கையாண்டவர் இவர்.

ஷேக் சாஹிப் வாசிக்க ஆரம்பித்த காலத்தில் சக கலைஞர்களிடத்தில் ஒருவித மான முணுமுணுப்பு கிளம்பியதாம். திருவையாறு தியாகராஜர் உற்சவத்தில் அவர் வாசிக்க வந்தால், 'ஒரு முஸ்லிம் தியாகப்ரும்ம உற்சவத்தில் கலந்து கொள்வதா?' என்று குரல் எழுமாம்.

ஒரு சமயம் - உற்சவ சீஸன். வரிசையாக நாலைந்து நாகஸ்வர வித்வான்கள் வாசிக்க இருந்தார்கள். சின்ன மௌலானாவும் இருந்தார்.

குளித்தலை பிச்சப்பா தர்பார் ராகத்தை எடுத்தார்.

அவர் வாசித்து முடித்ததும் திருச்சேறை கிருஷ்ணமூர்த்திப் பிள்ளை. அவர் வாசித்ததும் தர்பார்.

அடுத்து வாசித்த ஷேக் சாஹிபும் தர்பாரிலேயே தர்பார் நடத்த, உணர்ச்சி வசப்பட்டு சீனியர் வித்வான்களான ஆலத்தூர் சகோதரர்கள் உரக்கச் சொன்னார்களாம் : "மூணுல எது ஹிந்து தர்பார்? எது முஸ்லிம் தர்பார்னு யாராவது பிரிச்சி அடையாளம் காட்ட முடியுமா? சங்கீதத்துல மதத்தை யாரும் கொண்டு வராதீங்க!"

அதற்குப் பிறகு அந்தப் பேச்சே எழவில்லை.

வாஸ்தவத்தில், சின்னமௌலானாவை ஹிந்துவா? முஸ்லிமா? என்று பிரித்துப் பார்க்கவே முடியாது. அவர் வணங்குவது ஸ்ரீரங்கநாதரை என்றாலும் வீட்டு விசேஷங்கள் பாரம்பரிய முஸ்லிம் சம்பிரதாயப்படிதான் நடக்கின்றன. "என் மதம் இசை ஒன்றுதான்" என்று அவர் சொல்வது சினிமா வசனம் போலில்லை. அவரளவில் அதுதான் சத்தியம். அவரது பேரன்களும் அப்படியே தயாராகி இருப்பதுதான் விசேஷம்.

"தாத்தாவுக்காவது ரெண்டு மூணு பேர் குருவா இருந்திருக்காங்க. எங்களுக்கு அவர் ஒருத்தர்தான் குரு. வாசிப்புக்கு மட்டுமில்லை; வாழ்க்கைக்கும்" என்கிறார் காசிம்.

வயது காரணமாக இன்று ஷேக் சாஹிபால் அதிகம் வாசிக்கவோ, வெளியே வரவோ, செயல்படவோ, பேசவோ கூட முடிகிறதில்லை. தம் வித்தை முழுவதையும் தம் பேரன்களின் தலையில் இறக்கி வைத்து இருக்கிறார். ஒரு புதிய சிஷ்ய பரம்பரையை அவர்கள் உருவாக்கத் தொடங்கி இருக்கிறார்கள். தம் வாசிப்பைத் தம் பேரன்களிடமிருந்து கேட்டுக் களிக்கும் சின்ன மௌலானாவுக்கு ஒரு சின்ன வருத்தம் இருக்கிறது. சபாக்களில் சீஸன் சமயங்களில் கூட நாகஸ்வரத்துக்கு அதிகம் வாய்ப்புத் தரப்படாதது பற்றிய வருத்தம்.

ம்யூசிக் அகடமி விழாவுக்காக டிசம்பர் 13 அன்று சென்னை வரும்போது, அந்த மேடையில் இதை ஒரு முக்கியப் பிரச்னையாக எழுப்பி, விவாதிக்க இருப்பதாகச் சொன்னார் காசிம்.

"அந்தக் காலத்துல தேடித் தேடி வந்து தாத்தாவையெல்லாம் கச்சேரிக்குக் கூப்பிடுவாங்க. அவர் பார்க்காத மேடை இல்லை. ஆனா, இன்றைய நாகஸ்வரக் கலைஞர்கள் நிலை அப்படி இல்லையே? சபாக்கள், அவங்களுக்கு உரிய கௌரவம் தரணும்ங்கறதுதான் தாத்தாவோட ஆசை."

வேறு ஆசை?

ஒன்று இருந்தது. தமது மானசீக குரு ராஜரத்தினம் பிள்ளையை ஒருமுறையேனும் சந்திக்க வேண்டும் என்று மிகவும் விரும்பினார் ஷேக். கடைசி வரை அது நடக்காமலே போய் விட்டது!

— ஔரங்கசீப்

படங்கள் : ஸ்ரீஹரி




### கடலாடி கட்டளைகள்!

**இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள கடலாடி என்னும் ஊரில் 1986-ம் ஆண்டு ''மனைவிக்கு மதிப்பு கொடுப்போர் சங்கம்'' ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. இதில் பல ஆண்கள் உறுப்பினர்கள். இச்சங்கத்தின் முக்கியமான இரண்டு கட்டளைகள்: 1. மனைவியிடம் விரல் நீட்டி பேசக்கூடாது. 2. எக்காரணத்தைக் கொண்டும் வயது வந்த பிற பெண்ணிடம் தனித்துப் பேசக்கூடாது.**

**தகவல்: ரமாராமநாதன்**

# அல்சரா ! மூட்டு வலியா !
# இனி கவலையே வேண்டாம்!
# தெய்வீக மூலிகை மருத்துவம்

அல்சர் நோயாளிகள் அவ்வப்போது ஏதேனும் சாப்பிட்டுக் கொண்டே இருக்க வேண்டும். வயிற்றுப் பகுதியினை காலியாக வைத்திருந்தால் எரிச்சல் உண்டாகும் என்னும் கருத்து முற்றிலும் தவறானதாகும். குடல் பகுதிகளுக்கு போதிய ஓய்வினை அளிப்பதன் மூலமும் , கசப்பு சுவை நிறைந்த மூலிகைகளை உண்பதன் மூலமுமே, குடல் பாகத்தினில் ஏற்பட்டுள்ள புண்களை ஆற்றுதல் முடியும். புண்களினால் எரிச்சல் இருப்பின் அவ்வப்போது தண்ணீர் அருந்தலாம். ஆபரேஷன் செய்ய வேண்டும் என்ற நிலையிலுள்ள அல்சர் நோயாளிகளும் தெய்வீக மூலிகைகள் மூலம் குணம் பெறலாம். நடக்கவும், குனியவும், உட்காரவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் தீராத மூட்டுவலி உடையவர்களும் முறையான உணவு கட்டுப்பாட்டுடன் தெய்வீக மூலிகைகளை தேவைக்கேற்ப பயன்படுத்தி உண்பதன் மூலம் நாட்பட்ட மூட்டு வலியிலிருந்து நிவாரணம் பெறலாம்.

இரசாயனப் பொருட்கள் கலக்காத உணவும், மருந்துமே, அல்சர் நோய்க்கான முதலுதவி, மூட்டு வலிக்கு காரணமாக விளங்கும் பசை, சுரப்பது குறைவதற்கு காரணமே இரத்தத்தில் இரசாயனப் பொருட்களின் ஆதிக்கமே. வேப்பிலை, அத்தி, துளசி, வில்வம், அருகு போன்ற தெய்வீக மூலிகைகளாலும், இயற்கை உணவுகள்ளாலும் மட்டுமே முழுமையாக நீக்க முடியும். இது பற்றிய விரிவான ஆலோசனையை நேரிலும், கடித மூலமும் பெற முகவரிகள்.




தெய்வீக மூலிகை வைத்தியர்கள்

தலைமை முகவரி : Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ : 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8

✆ : 6424285, 6427638

Singapore Enquiry : Mrs. Renuka, Blk 101, #04, -176, Jurong East Street-13, Singapore - 600 101. ✆ : 0065 - 5621218

## 1998 வைத்தியரிடம் நேரில் ஆலோசனை/மருந்தினைப் பெற முகாம் விவரம்.
## (முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)

| | | |
|---|---|---|
| 2-ந் தேதி | - வேலூர் (N.A.) | : பிற்பகல் 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா (கங்கா), 16, ஆப்பீசர்ஸ் லைன். ✆ : 0416 / 23060 |
| 2-ந் தேதி | - காஞ்சிபுரம் | : மாலை 5 to 6 ராஜம் லாட்ஜ், (பஸ் நிலையம் அருகில்) 9, காமராஜர் தெரு. ✆ : 04112 / 22519 |
| 1,3,10,17,18,19,20,27,28,ந் தேதி | -சென்னை | : காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில். ✆ : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி | - கடலூர் (S.A.Dt.) | : காலை 9 to 11 ஆர்க்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல். ✆ : 04142 / 30707, 30717 |
| 4-ந் தேதி | - விழுப்புரம் | : பிற்பகல் 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில். ✆ : 04146 / 22952. |
| 4-ந் தேதி | - திருவண்ணாமலை | : மாலை 5 to 6 ராதா லாட்ஜ் (பஸ் நிலையம் எதிரில்) ✆ : 04175 / 22536. |
| 9-ந் தேதி | - பெங்களூர் | : காலை 11 to 12.30 ஹோட்டல் பிராட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பே கவுடா ரோட். ✆ : 2268374 |
| 9-ந் தேதி | - ஓசூர் | : மாலை 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட். ✆ : 04344 / 22899 |
| 12-ந் தேதி | - சேலம் | : காலை 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில். ✆ : 0427 / 449333. |
| 12-ந் தேதி | - ஈரோடு | : மாலை 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்போர்டு, பஸ் நிலையம் எதிரில், ✆:0424 / 226611 / 12 / 13 / 14/15/16/17/18 |
| 13-ந் தேதி | - கோயம்புத்தூர் | : காலை 9.30 to 12.30 சேரன் பேலஸ் லாட்ஜ் (சாந்தி தியேட்டர் பின்புறம்) ✆ : 0422 / 302711, 302220 |
| 14-ந் தேதி | - மதுரை | : காலை 9 to 11 ஹோட்டல் கிராண்ட்ஸ் சென்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு. ✆ : 0452 / 743941 |
| 14-ந் தேதி | - தஞ்சாவூர் | : மாலை 5 to 6 அசோகா லாட்ஜ். ✆ : 04362 / 30021 / 30022 |
| 15-ந் தேதி | - திருச்சி | : காலை 9 to 11 ஹோட்டல் ஆனந்த் (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில்). ✆ : 0431 / 460545 |
| 15-ந் தேதி | - நாமக்கல் | : பிற்பகல் 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா. ✆ : 04286 / 20433 |
| 22-ந் தேதி | - தர்மபுரி | : காலை 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ். ✆: 04342 / 60226. |
| 22-ந் தேதி | - திருப்பூர் | : பிற்பகல் 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ். ✆ : 0421 / 740418. |
| 22-ந் தேதி | - உடுமலைபேட்டை | : மாலை 6 to 7 குறிஞ்சி லாட்ஜ் (பஸ் நிலையம் எதிரில்) ✆ : 04252 / 24353. |
| 23-ந் தேதி | - திண்டுக்கல் | : காலை 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, (பஸ் நிலையம் பின்புறம்) ✆:27017. |
| 23-ந் தேதி | - தூத்துக்குடி | : மாலை 5 to 6 ஹோட்டல் ஆஸ்வின், தேவர் புரம் ரோடு. ✆ : 0461 / 327780 |
| 24-ந் தேதி | - திருநெல்வேலி | : காலை 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சித்தாபதி, மதுரை ரோடு. ✆ : 0462 / 333312. |
| 24-ந் தேதி | - நாகர்கோவில் | : பிற்பகல் 2 to 3 ஹோட்டல் சரண்யா, மீனாட்சிபுரம். ✆: 04652 / 25689. |
| 25-ந் தேதி | - விருதுநகர் | : காலை 9 to 10 அண்டன் லாட்ஜ், மதுரை ரோடு. ✆ : 04562 / 45537. |
| 25-ந் தேதி | - கரூர் | : பிற்பகல் 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவகர் பஜார். ✆ : 63763. |




தகவல் : டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 25 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு M.O. அல்லது D.D. அனுப்பவும்.

7,8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 6 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589


• 'நல்ல' நாவல்!


• சொத்துக்காரர்!


• கௌரவப் பிச்சை?

● ஜெ. கண்ணன்,
சென்னை - 101.

? சல்மான்கானும் சபாநாயகர் பாலயோகியும் சந்தித்துக் கொண்டால் என்ன பேசுவார்கள்...?

! "அஜீரணத்துக்கு எந்த மாத்திரை சிறந்தது...?"

● க. நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

? சத்யமூர்த்தி பவன் ஜனதா தளத்துக்குச் சொந்தமானது என்று ஜி.ஏ. வடிவேலு கூறியுள்ளது பற்றி...?

! சிவசேனா, ஜார்கண்ட் முக்தி மோர்ச்சா, காஷ்மீர் விடுதலை முன்னணி, த்ருணமூல், லோக் சக்தி, அமெரிக்க ரிபப்ளிகன் கட்சி, போலந்தின் சாலிடாரிடி கட்சி - எல்லாமும் கூட சொந்தம் கொண்டாடி, போராட இருப்பதாக அறிகிறேன். ஒரே ஆறுதல் - இந்த ரகளையை யெல்லாம் பார்க்க சத்தியமூர்த்தி உயிரோடு இல்லை.

● செ. மீனாட்சிசுந்தரம், தென்காசி. ❑

? நம் நாட்டுத் தனியார் நிதி நிறுவனங்கள் போல திடீரென்று சுவிஸ் வங்கியும் மூடப்பட்டு விட்டால்...? அப்போதாவது இந்தியாவுக்கு விடிவு காலம் பிறக்குமா...?

! ஸ்விஸ் வங்கிகளிலிருந்து இந்திய ஊழல் தலைவர்களின் பணம் இடம் மாறி, வேறு கணக்குக் கேட்காத நாடுகளின் வங்கிகளுக்குப் போய் நீண்ட காலமாகி விட்டது. ஸ்விஸ் அரசிடம் இந்தியா ஒத்துழைப்புக் கோர ஆரம்பித்ததுமே இந்தக் காரியமும் தொடங்கி விட்டது. ஆக, உங்கள் கனவு நனவானாலும் ஆசை நிறைவேறாது!

● பெ. பொன்ராஜ்பாண்டி,
மதுரை - 10.

? 'மூன்றாவதாக உருவாகும் அணி பிச்சைக்காரர்களின் கூடாரம்' என்று வாழப்பாடி கூறுகிறாரே?

! பிச்சை எடுத்தாலும் அதை போயஸ் கார்டனில் எடுத்தால்தான் மதிப்பு என்று கருதுகிறார் போலும்!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? பாக். கிரிக்கெட் வீரர்கள் இந்திய மண்ணில் காலடி எடுத்து வைப்பதை அனுமதிக்க முடியாது என சிவசேனா தலைவர் தாக்கரே சீறுகிறாரே?

! பவார் சொன்னதுதான் பளிச் : "இந்தியா ஒரு ஜனநாயக நாடு. இவர் ஏதோ தமது சொந்த சொத்து என்பது போல் நடந்து கொள்கிறார்!" இத்தகைய குறுகிய புத்தியும் பிடிவாதமும் சர்வாதிகாரப் போக்கும் கொண்டவர்களிடம் மக்கள் மயங்குவதுதான் சோகம்.

● பி. நடராஜன், அன்னூர்.

? டி.என். சேஷன் சினிமாவில் நடிக்கிறாரே...

## டி.என். சேஷன் சினிமாவில் பிரகாசிப்பாரா?

பிரகாசிப்பாரா...?

! தேர்தல் கமிஷனில் இருந்த வரையில் ஹீரோவாக இருந்தவருக்கு, சினிமாவில் ஹீரோ ரோல் கிடைக்குமா என்ன!

● ஜி. ராம்தாஸ், கணபதி அக்ரஹாரம்.

? 'தராசு'வைத் தூக்கிப் பிடித்திருப்பவர் யார்...?

! நீதி தேவதைதான்! நீங்கள் பார்த்ததில்லையா?

● இரா. பார்த்திபன், சேத்துப்பட்டு.

? சமீபத்தில் வெளிவந்த தமிழ் நாவல்களில் உங்களைக் கவர்ந்தது?

! பாவைசந்திரனின் 'நல்ல நிலம்'. எளிய நடை, கனமான கதை, அளவான வர்ணனை, அற்புதமான சித்திரிப்புகள். வரவிருக்கும் இரண்டாம் பாகத்துக்காக ஆவலுடன் காத்திருக்கிறேன்.

● ஆரூர் அரசு, பவித்திரமாணிக்கம்.

? சுப்பிரமணியம் சுவாமி பூணூல் அணிந்து கொள்ள மாட்டாராமே?

! அப்பாடி! பூணூல் பிழைத்தது!

● வசந்தா சித்திரவேலு, கருப்பம்புலம்.

? உலகிலேயே பரிதாபகரமான மனிதர்


• "என்ன...?


• ...சுகந்தானா...?"


• ஆறுதல்

*என்று யாரைச் சொல்வீர்கள்...?*

! வாஜ்பேயியைச் சொல்வேன் என்று எதிர் பார்க்கிறீர்களா? அவரை விடவும் பரிதாபத்துக்குரிய ஜீவன் அரசியல் தலைவர்களால் மாறி மாறிப் பழிவாங்கப்படும் இந்தியக் குடிமகன்தான்!

● **வி. பரமசிவம், மதுரை.**

*? கிரண் மோரே கிரிக்கெட்டிலிருந்து ஓய்வு பெறுவதாக அறிவித்திருப்பது பற்றி...?*

! கிர்மானிக்குப் பிறகு கிடைத்த நல்ல விக்கெட் கீப்பர் அவர். எப்படி திடீரென்று டீமுக்குள் வந்தாரோ அதே போல திடீரென்று காணாமலும் போனார். நடந்தது அரசியல் விளையாட்டு. போர்டினால் ரன் அவுட் ஆக்கப்பட்ட பாவப்பட்ட ஜீவன்களுள் ஒருவர். கிரணின் சில கவித்துவமான ஸ்டம்பிங் காட்சிகள் இன்னும் கண்முன் நிற்கின்றன.

● **ஆர். கோபாலன், பனாஜி (கோவா).**

*? ரோமேஷ் ஷர்மா...?*

! ஹெலிகாப்டர் கனவுகள்!

● **யமுனா ரெங்கநாதன், மடிப்பாக்கம்.**

*? 'குமுதத்தில் பரபரப்புடன் வெளிவந்த ஒரு நடிகையின் கதை அதிகபட்ச கற்பனையே' என இப்போது மாலன் கூறியுள்ளாரே?*

! அப்படியானால் அது இன்னும் மோசம்! கற்பனை தரந்தாழும் கேவலம் ஒருபுறம்; பெண்மைக்கும் நடிகைகளுக்கும் இழைக்கப்படும் அநீதி மறுபுறம். வருத்தத்தில் மனம் கனக்கிறது.

● **ராஜி, கமுதி – 3.**

*? ரயில் கட்டணம் உயரப் போவதாகச் செய்தி... உண்மையா?*

! அது மட்டுமா உயரும்? ரயில் கட்டண உயர்வு வெறும் இஞ்சின்தான். பின்னால் இணைந்து வரும் பெட்டிகள் போல் சரக்குகளின் விலையும் உயரும்; DAவும் உயரும்! அது இல்லாதவர்கள் அவதிப்படுவார்கள்.

● ப. ராமகிருஷ்ணன், காயக்காடு.

*? அரசின் நலத்திட்டங்கள் கால்வாசியாவது மக்களுக்குப் போய்ச் சேர உருப்படியான வழி சொல்லுங்கள்...?*

! அதைத்தான் முதல்வரே சொன்னாரே. அரசு அதிகாரிகள் நேர்மையும் அஞ்சா நெஞ்சமும் உடையவராயிருந்தாலன்றி நலத் திட்டங்கள் மக்களைச் சென்றடையாது.


• அநியாய ரன் அவுட்!


• விருதுப் பொருத்தம்!


• காப்பாற்றினார்!

● **விக்கி வெங்கடேஷ், மயிலாடுதுறை.**

*? வெள்ளச் சேதங்களைப் பார்வையிடச் சென்ற சோனியாவின் நாய்களுக்கு மினரல் வாட்டர் அளித்து, கணக்கெழுதியிருப்பதாகச் செய்திகள் வந்துள்ளதே...?*

! வெள்ளப் பெருக்கின்போது சுத்தமான குடிநீர் கிடைப்பது அரிது. ஆகவே மினரல் வாட்டர் கொடுத்ததில் தவறில்லை. நாய்கள் மட்டும் உயிருள்ள ஜீவன்களில்லையா என்ன...? ஆனால் அவற்றை அந்தப் பயணத்தில் அழைத்துப் போயிருக்க வேண்டாம்; கட்சிப் பணத்தை அதற்குச் செலவழித்திருக்கவும் வேண்டாம்.


• நாய்களாய்...?

● **காசிதாசன், ஒசூர்.**

*? திறமைசாலிகள் கூடத் திணறுவது எப்போது....?*

! குழந்தைகள் கேட்கும் நேர்மையான கேள்விகளுக்குப் பதில் சொல்லத் தெரியாதபோது.

● **எஸ். பிரசன்னகுமார், காட்பாடி.**

*? சோவுக்கு 'பாஞ்சஜன்ய நசிகேதஸ்' என்ற பத்திரிகையாளர் விருது கிடைத்துள்ளது பற்றி...?*

! வாழ்த்துவோம். பாரதம் எழுதி முடித்த கையோடு பாஞ்சஜன்ய விருது கிடைத்துள்ளது பொருத்தம்!

**❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :**
**செ. மீனாட்சி சுந்தரம்**
**49, தெற்கு ஒப்பனைத் தெரு,**
**தென்காசி - 627 811. நெல்லை.**



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

வானிலை அறிக்கை மாதிரி இருக்குங்க இந்த வாரம். அதாவது எது நடக்கும்னு நினைக்கிறீங்களோ, அது நாலு நாள் இழுத்தடிக்கும். பூட்ட கேஸ்னு நினைக்கறதெல்லாம் ஒர்க் அவுட் ஆயிடும்! உங்க திறமைக்கு உரிய அங்கீகாரம், பாராட்டு, புகழ் எல்லாமே சேரும். ஆனா, எதிலும் ஒரு தடையை சந்திக்க வேண்டி வரும்! மேலதிகாரிகள் கிட்ட மரியாதையா நடந்துக்கங்க. நண்பர்கள், உறவினர்கள் யார்கிட்டயும் அநாவசிய விவாதங்கள் வேண்டாம். குறிப்பா பெண்கள் இந்த விஷயத்துல ரொம்ப கவனமா இருக்கணும்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

லட்சியவாதியான உங்களுக்கு மனச்சோர்வு வராப்பல பல தடைகள் வரும். உங்களுக்கு ரொம்ப நெருக்கமானவங்களே உங்களைப் புரிஞ்சிக்காம ஏதாவது பிரச்னை குடுத்துட்டிருப்பாங்க. எந்தக் காரியமும் லேசுல முடியாம இழுத்தடிக்கும். வெறுப்புல எல்லார் மேலயும் எரிஞ்சி விழுறதால என்ன லாபம்? நீங்க செய்ய வேண்டியதெல்லாம் எதையும் கண்டுக்காம இருக்கறதுதான். இந்த வாரம் பணம், தண்ணியா செலவாகும். டாக்டருக்கு தண்டம் அழ வேண்டி வரலாம்! தூக்கம் இருக்காது. எப்பவும் குழப்பமும் கவலையும்தான். முடிஞ்சா எங்காவது மலைப் பிரதேசத்துக்கு ஒரு உலா போயிட்டு வாங்களேன்.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

பொருளாதார ரீதில பிரச்னையே வராதுங்க. பழைய கடன் பாக்கியெல்லாம் கூட வசூலாகும். குடும்பத்தில் மகிழ்ச்சிக்குக் குறைவிருக்காது. வேலை தேடிட்டிருக்கறவங்களுக்கு அதற்கான வாய்ப்பு கூடி வரும். சகோதரர்கள் சமயத்துல உதவுவாங்க. கணவன் - மனைவிக்குள்ள லேசா ஊடல் வரலாம். ஒரு சினிமா அல்லது கோன் ஐஸ் அதை சரி பண்ணிடும். முதலீடுகளுக்கு இது நல்ல வாரம். ஆனா லாட்டரி, ரேஸ்னு இறங்கினீங்கன்னா பூட்ட கேஸ்தான்! சிலருக்கு வெளிநாடு சான்ஸ் கூட வரலாம். பெற்றோர் உடல் நலன் கொஞ்சம் கவலை தரும்; கவனம்!



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

கலைத்துறை ஆசாமிங்களுக்கு




வளமான நேரம். உங்க புது முயற்சிகளுக்கு நல்ல வரவேற்பு இருக்கும். பணப் பிரச்னை இருக்காது. ஆனா செலவும் அதிகமா இருக்கும். சில வீட்டு உபயோகப் பொருள்கள் வாங்குவீங்க. ஸ்பெகுலேஷன் துறைக்காரங்களுக்கு நல்ல லாபம் இருக்கும். திடீர் பிரயாணம் சிலருக்கு இருக்கலாம். ஆனா கவனம் முக்கியம் பிக்பாக்கெட்ல கொஞ்சம் இழப்பு வரலாம். பெண்களுக்கு இது பிரச்னை வாரம். மாமியார் - மருமகள் உறவுக்கு உடனே பெவிகால் போடுங்க. மோதல்களைத் தவிர்த்தால் அது பிற்கால சந்தோஷத்துக்கு நல்லது.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

டைம் நல்லா இருக்கு. உங்க நீண்ட நாள் கனவுகள் நனவாகப் போவுது. புதிய திட்டங்கள் ஏதாவது இருந்தா, உடனே செயல்படுத்தப் பாருங்க. பிஸினஸ் தொடங்கற யோசனை இருந்தா, தாராளமா ஆரம்பிக்கலாம். ஆனா பெரியவங்களை ஒரு வார்த்தை கன்ஸல்ட் பண்ணிடுங்க. சிலருக்கு இந்த வாரம் மகான்கள் தரிசனம் கிடைக்கலாம். புண்ணியத்தல யாத்திரையும் அமையலாம். வாரக் கடைசில யாராவது ஒரு ஏழைக்கு ஒரு வேளை சாப்பாடு போட முடியுமானா ரொம்ப நல்லது. பொதுப் பணில ஈடுபடறவங்களுக்குப் புகழ் கூடும் வாரம் இது.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

சந்திர பலம் ஸ்ட்ராங்கா இல்லீங்க. நீங்க ரொம்ப கவனமாகவும் எச்சரிக்கையாகவும் இருக்க வேண்டிய நேரம் இது. வம்புகள்ல தலையிடாதீங்க. வழக்குகள்ல சிக்கிக்காதீங்க. கடன் கொடுக்கறதோ ஜாமீன் கையெழுத்துப்

# நடக்குமென்பார், நடக்கும்!

போடறதோ வேணவே வேணாம். அரசியல் வாதிகளுக்கு ரொம்ப கஷ்டமான நேரம். கூட இருக்கறவங்களே காலை வாரி விடுவாங்க. வாரக் கடைசில நிலைமை கொஞ்சம் சீராகும். ஆனா பெண்களுக்கு அப்ப உடல் நலன் கெடலாம். வயிறு சம்பந்தமான பிரச்னைகள் ஏதும் வரலாம். மருத்துவச் செலவுகளைத் தவிர்க்க முடியாது.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

சாதுர்யமான பேச்சால இந்த வாரம் பல விஷயங்களை சாதிக்கப் போறீங்க. உங்களுக்குத் தீராத தலைவலியா இருந்தவங்க (தொழில்ல) எல்லாரும் சரண்டராயிடுவாங்க. சில புதிய ஒப்பந்தங்கள் நேரலாம். அது வாழ்க்கை ஒப்பந்தமாகவும் இருக்கலாம். சில பேருக்கு வெளி நாட்டுல வேலை அல்லது சொந்தத் தொழில் தொடங்க அந்நிய முதலீடு இப்படி ஏதாவது கிடைக்கலாம். வீட்டுல ஏதோ ஒரு விசேஷம் வரப் போவுது. அநேகமா நீங்க அப்பாவாகவோ, தாத்தாவாகவோ ஆகப் போறீங்க!



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்களைப் பத்தி மட்டுமே நினைக்காம, கொஞ்சம் உங்கள் மனைவி மக்களை கவனிங்க. அவங்க எதிர் பார்ப்புகளை நிறைவேத்தறது மூலம் நீங்க நிறைய சாதிக்கலாம்! இந்த வாரம் நீங்க நிச்சயமா எதிர் பார்க்காத ஏதோ ஒரு அதிர்ஷ்ட வாய்ப்பு வரலாம். பரிசு அல்லது பணவரவா இருக்கும். கலைஞர்களுக்கு ஓஹோ நேரம்! எழுத்தாளர்களுக்கும்தான். பெண்களுக்கு இது சண்டை வாரம்! அக்கம் பக்கத்து அம்மணிங்க அலறிட்டு ஓடப் போறாங்க.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

செவ்வாயும் கேதுவும் சாதகமா இருந்தாலும் பிற கிரகங்கள் அவ்ளோ சிலாக்கியமா இல்லை. எதிலும் அவசரப் படாம, நிதானமா நடந்துக்கங்க. குறிப்பா, ஆபீஸ்ல வாக்கு வாதங்கள்ல கலந்துக்காதீங்க. வீட்டுல மனைவி/கணவனோட வரக் கூடிய சிறு மனஸ்தாபங்களைப் பெரிசு படுத்தாதீங்க. புதிய முயற்சிகள் எதையும் இப்ப தொடங்க வேண்டாம். பிள்ளைங்க விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. வெளியில ரொம்ப அலைய விடாதீங்க. இந்த வாரம் ஒண்ணும் சரியா இல்லை. சிறு விபத்துகள் கூட சிலருக்கு நேரலாம்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

பணப் பிரச்னையே இருக்காது. எதிர்பாராத பதவி உயர்வு, சந்தோஷமான இடமாறுதலையும் எதிர் பார்க்கலாம். சிலருக்குக் கல்யாணம் கூட ஃபிக்ஸ் ஆகலாம். பெண்களுக்கு இப்ப ரொம்ப நல்ல நேரம். உத்யோக ரீதில நல்ல வளர்ச்சி எதிர்பார்க்கலாம். வீட்லே சில புதிய பொருள் சேர்க்கை நடக்கும். பழைய நகைகளைப் போட்டுவிட்டு புதுசு வாங்கறது, வீடு ரிப்பேர், மனை வாங்கறது இதெல்லாம் இந்த வாரம் செஞ்சா நல்லபடியா அமையும்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

தன்னம்பிக்கை ஆனாலும் ஜாஸ்திங்க உங்களுக்கு. தடாலடியா சில காரியங்கள் செய்வீங்க. வீட்லேயும் சரி! வெளியிலேயும் சரி. நீங்க வெச்சதுதான் சட்டம்! உங்க குடும்பத்துல வரக் கூடிய சிறு பிரச்னைகளைப் பெரிசு பண்ணாதீங்க. இந்த வாரம் உங்க மூத்த மகன் மூலம் உங்களுக்கும் பெரிய புகழ் ஏதோ வந்து சேரப் போவுது. வியாபாரிகளும், விஞ்ஞானிகளும் வெற்றிப் பாதைல நடை போடுவீங்க. பெண்களுக்கு பிரச்னையா இருக்கலாம். ஆனா எதுவும் வாரக் கடைசில சரியாப் போயிடும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

கிரக சஞ்சாரங்கள் சிறப்பா இல்லை. பெரிய நன்மைகள் எதிர்பார்க்காதீங்க. நண்பர்கள், புதிய மனிதர்கள் கிட்ட படு ஜாக்கிரதையா நடந்துக்கங்க. யாரால என்ன பிரச்னை வரும்னு சொல்ல முடியாது. புதிய முயற்சிகள் எதுவும் இப்ப வேணாம். கடன் வாங்காதீங்க. ஜாமீன் கையெழுத்து யாருக்கும் போடாதீங்க. மருத்துவச் செலவு ஏதாவது வரலாம். பயணத்துல எச்சரிக்கை அவசியம். விபத்துக்கோ, பொருள் இழப்புக்கோ வாய்ப்பு இருக்கு. ●

## வட்டமேஜை

◆ 'உயிரோடு உயிராக' திரை விமர்சனத்தில் 'குறைவான உடைகள்; குறைவில்லாத முத்தங்கள்' என்ற வரி நயம்!
நெய்வேலி, ச. இந்துமதி.

◆ செக் திரும்பி வந்தால், 'நெகோஷியபிள் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ்' சட்டப்படி நிறுவனத்தின் மீது நடவடிக்கை எடுக்கலாம் என்ற குல்லூரவின் யோசனை ஓகே. ஆனால் நிதி நிறுவனம் பதிலுக்கு நமக்கு ஆட்டோ அனுப்பி நடவடிக்கை எடுத்து விட்டால்?
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

◆ சுமி சூப்பர் மார்கெட் பகுதியில் கல்யாண ரிசப்ஷனில் மணமக்கள் முக்கிய உறவினர்கள், பிரமுகர்கள் பற்றிய படக் காட்சி காட்டப்பட்ட செய்தி சுவையாக இருந்தது. கொஞ்சம் பழகினால் பெரிசுகளும் இதைக் கண்டிப்பாக ரசிப்பார்கள்.
சென்னை - 74, லலிதா செல்லப்பா.

## நெகிழவைத்த அனுபவம்!

◆ மற்ற தலைவர்கள் சுதந்தரமாக ரிக்ஷாவில் வர, கார்ட்டூனில் நம்ம 'அம்மா'விற்கு அப்பக்கூட 'கூண்டு ரிக்ஷா'தானா?
மயிலாடுதுறை, ஜெ. முத்துக்குமரன்.

◆ 'பார்க் சிட்டி'க்கு நேர்ந்து வரும் பேராபத்தைக் காட்ட இப்படியொரு கொடூர விளம்பரமா? டூ மச்!
புனே, ஜெ. ரஜினி ராம்கி.

◆ பாபா பற்றிய கட்டுரையில் அனுராதா ரமணன் அவர்களின் வெளிப்படையான கருத்து ஏற்றுக் கொள்ளக் கூடியது மட்டுமல்ல; பாராட்டுக்கும் உரியதாகும்.
பெங்களூர் - 72, ப. மூர்த்தி.

◆ கல்கி - தேவன் சிரிப்பரங்கத்தின் கவரேஜ் 'Live' ஆக இருந்தது. 'டானிக்' அருந்திய பலம் ஏற்பட்டது. சென்னையிலிருந்தும் பங்கேற்கவில்லையே என்ற ஏக்கம் ஒரு பக்கம். என்னையும் 'ஜோக்' எழுதத் தூண்டியது மறு பக்கம்.
மயிலை, நெய்வேலி ஸ்ரீவித்யா குமார்.

◆ ஆச்சி மனோரமாவின் அந்த அடக்கம் தான் அவரை ஆயிரம் படங்களில் நடிக்கும் மிகப் பெரிய சாதனையைப் புரியவைத்திருக்கிறது போலும்!
மதுரை - 16, வி.பி. மகராசி.

◆ 'உயர்ந்த ஜோக்ஸ்' அருமை! வெங்காய சாம்பாரை வாசனை பிடிக்கும் அளவுக்கு நிலைமை மாறிவிடுமா?
மணியக்காரன்பாளையம்,
ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

◆ பி.ஜே.பி. அரசின் தேர்தல் அறிக்கையில் உள்ள இல்லு முல்லு சமாசாரங்களைப் பட்டியலிட்டு, நடுநிலைமையோடு எழுதப்பட்ட தங்களின் தலையங்கத்தை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.
கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.

◆ நம்மூர் மக்களுக்கு அதிகபட்சம் பொழுது போக்கு அளிப்பவர்கள் அரசியல்வாதிகள் தானே... என்ற ரபி பெர்னார்டின் பதிலில் குறும்புத்தனம் கொப்பளிக்கிறது.
சென்னை - 23, த. சத்தியநாராயணன்.

◆ வாஜ்பாயின் தலைவலி ஜெயாவா, மம்தாவா என்ற கேள்விக்கு நீங்கள் "தா" என்றே பதிலளித்திருக்கலாம். ஜெயலலிதா, மம்தா, சமதா, ஜனதா என்று அவருடைய தலைவலிகள் எல்லாமே 'தா'வில்தான் முடிகின்றன!
சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

◆ திருமதி எம்.எஸ். மனம் திறந்து சொன்ன, தமது கணவர் அமரர் சதாசிவம் பற்றிய அனுபவத் துளிகள் ஒவ்வொன்றும் மனசை நெகிழ வைத்தன. உயர்ந்த ரசனை, சங்கீத ரசிப்பு, எல்லோரையும் சமமாக நடத்தும் பாசம், பரோபகாரம், தேசப்பற்று என வாழ்ந்த ஓர் உயர்ந்த மனிதரை நேரில் சந்தித்தது போன்ற உணர்வு ஏற்பட்டது.
கோவை - 14, ஏ.எஸ். இராமசாமி.

கல்கி 22/11/98 இதழில் 79ம் பக்கத்தில் வெளியான "ஸ்ரீ பங்கஜ் டிராவல்ஸ்" விளம்பரத்தில் 'ந. தேவநாதன்' என்பதை 'S. தேவநாதன்' என்று திருத்தி வாசிக்கவும். — விளம்பர நிர்வாகி

இந்தப் பிரபலங்கள் எல்லாம் வித்வான்களாக இருந்து, இவர்களை கச்சேரி பண்ணக் கூப்பிட்டால்... ஒரு கற்பனை....






# இந்தக் கச்சேரிகள்!

**கலைஞர் கருணாநிதி :**

''முதலில் ராவணன் பெயரில் ஒரு விருது ஏற்படுத்தி, இசைக் கலைஞர்களை கௌரவியுங்கள்; அப்புறம் நான் உங்க சபாவிலே பாடறதுக்கு ஒப்புக் கொள்கிறேன்....''

**ஜெயலலிதா :**

நீங்கள் வந்து கூப்பிட்டால், நான் கச்சேரிக்குத் தேதி கொடுக்க மாட்டேன். ஜஸ்வந்த்சிங், ஜார்ஜ் பெர்னாண்டஸ், யஷ்வந்த் சின்ஹா, இல்லையென்றால் வாஜ்பாயாவது வந்து அழைக்க வேண்டும்.

**முரளி மனோகர் ஜோஷி :**

கச்சேரியில் முதலில் சரஸ்வதி வந்தனம் பாடுவேன். சம்மதமா?

**சோ :**

உங்க சபா மேல எனக்கு இருந்த மதிப்பு, மரியாதையெல்லாம் போயிடுச்சு! ஏன் தெரியுமா? என்னைக் கச்சேரி செய்ய கூப்பிடுறீங்களே!

**சோனியா காந்தி :**

பக்கவாத்யம் ஹரிகிஷன்சிங் சுர்ஜித்தான் வாசிக்கணும்.

**வாழப்பாடி ராமமூர்த்தி :**

கச்சேரி முழுக்க தனி ஆவர்த்தனம்தான் பண்ணுவேன் நான்.

கற்பனை : மௌலி





**சென்ற வாரத் தொடர்ச்சி...**

மேஜர் அவளிடம் நடந்ததைக் கேட்டார்.

"இல்லை மேஜர் சார்! உங்க ராணுவம், மந்திரி சபை எல்லாம் சேர்ந்து உனக்குச் சலுகை அளிக்கிறோம். நிதியுதவி அளிக்கிறோம். கேட்ட இடத்தில் நல்ல வேலை தருகிறோம். பிள்ளைகளுக்குத் தரமான கல்வியளிக்கிறோம் என வலைவிரிக்கிறது. எதற்கு? என் புருஷன் செத்துப் போயிட்டான்னு என் வாயால் சொல்வதற்கு. இது எவ்ளோ பெரிய நம்பிக்கைத் துரோகம்."

"லா ஆஃப் எவிடன்ஸ் என்ன சொல்லுதுன்னா..."

"ஹெல் வித் யுவர் லா ஆஃப் எவிடன்ஸ். ஏழு வருஷம் ஒரு மனுஷனைப் பத்தின தடயம் இல்லாட்டி அவன் செத்துப் போயிட்டதா சட்டம் ஒத்துக்கலாம். நான் ஒத்துக்கலை. என் உள் மனசு ஒத்துக்கலை. என் புருஷனை நான் திரும்பவும் பார்ப்பேன்."

மிஸஸ் குல்கர்னி பார்கவியை தட்டிக் கொடுத்தாள்.

"எதுவரையில் காத்திருப்பாய் பார்கவி?" மேஜர் கேட்டார்.

"நான் சாகும் வரையில்."

"ப்ஸ்! ப்ஸ்! இதோடு போதும் வா! பார்கவி! ஒரே விஷயத்தைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தால் மூளை புகைந்து போகும். சாந்தினி சௌக் வரையில் போய் விட்டு வருவோம். பழைய இரும்புச் சாமான்கள் வாங்க வேண்டும். ஆஷாவும் ஜும்மா மஸ்ஜித் புறாக்களைப் பார்க்க வேண்டும் என அடம்பிடிக்கிறாள்..." மிஸஸ் குல்கர்னி சமாதானப்படுத்தினாள்.

**போட்டிக் கதை - 13**

# நெருங்கும் நாம்

**சத்தியப்பிரியன்**

ஜும்மா மசூதியின் புறாக்களுக்கு நடுவில்தான் அவனை முதன் முதலாகப் பார்த்தாள். அப்பாவுக்கு உள்துறை அமைச்சகத்தில் செயலருக்குக் கீழே உள்ள அலுவலகத்தில் ஏற்பட்ட பதவி உயர்வு காரணமாக டெல்லி வந்து சேர்ந்த சமயம் அது. புது டெல்லியின் கான்க்ரீட் செயற்கைகளை விட பழைய டெல்லியின் பாரம்பரியத்தைப் பிரதிபலிக்கும் கட்டடங்கள்தான் அவளுக்குப் பிடிக்கும். அதன் தூசியையும் சேர்த்து. அவர்களது பதினைந்து வருட மண வாழ்வில், பாலசந்திரன் இராணுவ முகாம்களுக்குப் போயிராத நாட்களில் ஒவ்வொரு மணநாளையும் அவர்கள் இந்த ஜும்மா மசூதியின் முன் விதானத்தில் வந்து நின்று விட்டுத்தான் போவார்கள். "கல்யாணம் ஆன பிறகு புருஷன், மனைவி என்ற தனித் தனி ஐடென்டிடி கிடையாது. தம்பதி என்ற ஒரு ஐடென்டிடிதான்" என்பாள் பார்கவி. என்ன நேர்ந்தது பாலா உனக்கு?

"இன்னிக்கு என்ன தேதி மிஸஸ். குல்கர்னி?"

புறாக்களுக்கு தானியம் விற்பவனிடம் தானியம் வாங்கிக் கொண்டிருந்த மிஸஸ் குல்கர்னி, "என்ன பார்கவி! காலம், நேரம் கூடவா நீ மறந்து விட்டாய்? இன்னிக்கு டிசம்பர் ஏழு."

ஒரு நிமிடம் பார்கவி உறைந்து போனாள். எப்படி மறந்து போனேன் இன்றைய தினத்தை? நானும், அவரும் அக்னி முன் வலம்வந்து அப்பாவின் காலில் விழுந்து ஆசி வாங்கிக் கொண்ட எங்கள் மணநாளை எப்படி மறந்து போனேன்?

"இன்று எங்கள் மணநாள்."

"ஓ!" மிஸஸ் குல்கர்னி அவள் தோள்களில் தட்டுவதற்காகக் காத்திருந்தவளைப் போல பார்கவி அழுது சிதறினாள். தன்னை ஏமாற்றிய விதியை நினைத்து, அவன்பால் கவியும் காதலை நினைத்து, தேய்ந்து வரும் தன் நம்பிக்கையை நினைத்து, அழுதாள்.

"மிஸஸ் குல்கர்னி, நீங்களும், ஆஷாவும் கிளம்புங்கள். நான் கொஞ்ச நேரம் தனிமை



யில் இருந்து விட்டு வருகிறேன்."

"தனிமை உன் ஞாபகங்களை அதிகப்படுத்தும். மறக்கப் பழகிக் கொள் பார்கவி."

"எதை மறக்கணும் மிஸஸ் ரேணுகா குல்கர்னி? அவரையா? என் உயிர் போகும் பொழுதுதான் என் ஞாபகத் திசுக்களும் நெருப்பில் பொசுங்கும். அதுவரை என் ஞாபகங்கள் அழியாது. ப்ளீஸ் லீவ் மீ அலோன்."

"ஓகே! ஒண்ணு ஞாபகம் வெச்சுக்கோ. தனிமையில் நீ மோசமான முடிவுகளுக்குப் போக மாட்டாய் என நம்புகிறேன்."

"அப்படி அதிகப்படியான பயம் வேண்டாம். மிஸஸ் குல்கர்னி. நான் கோழையல்ல.' ஒரு கர்னலின் மனைவி."

**வா**னம் நிர்மலமாக இருந்தது. பனி இறங்க ஆரம்பித்து விட்டது. எனினும் உணர்வுகள் மரத்துப் போன நிலையில் அவள் நின்று கொண்டிருந்தாள். என்ன ஆயிற்று பாலா உனக்கு? நிஜமாகவே இறந்து போய் விட்டாயா? காட்டு விலங்குகளுக்கு பலியானாயா? ஒரு கோழையைப் போல உன்னால் இறக்க முடியுமா? நீ நிழலா? இல்லை புகைமூட்டமா? பூ, பொட்டு, தாலி

இவற்றை ஒதுக்கி விடுவோம். வெறும் புற அடையாளங்கள்தான். ஆனால் நான் நேசித்த ஒன்று, நான் ஸ்வாசித்த ஒன்று, நான் சூடிக் கொண்ட ஒன்று என் கைகளில் வராமல் போய் விடுமோ என நான் கதறும் கதறலில் ஒரு துளியாவது உன் செவிகளில் விழாதா? நவீனுக்கும் வர்ஷாவுக்கும் அம்மா என்று அழைக்க நான் இருக்கிறேன். ஆயிரம் உறவுகள் எனக்கிருந்தாலும் எல்லாம் நீயாகுமா பாலா? எனக்கு நீ வேண்டும்.

படபடவென மகுதிப் புறாக்கள் மாடங்களுக்குத் திரும்பத் தொடங்கும் சப்தம் கேட்டது.

''பார்கவி...'' கிசுகிசுப்பாக அழைப்பு வந்து திரும்பினாள்.

ஓ! இதென்ன என் பிரார்த்தனை கடவுளுக்கு எட்டி விட்டதா?

எண்ணெய் தடவாமல் சிக்குப் பிடித்த கேசமும், சீர் செய்யப்படாத தாடியும், கண்களில் நெருப்பும், உடல் மெலிந்தும் நின்று கொண்டிருந்த அவனை அவளால் எளிதில் அடையாளம் கண்டுபிடிக்க முடிந்தது.

பாலசந்திரன். கர்னல் பாலசந்திரன்.

பூமி காலடியில் சரேலென நழுவியது போன்ற பிரமை ஏற்பட்டது. திகில். பரவசம். காமம். உற்சாகம். பயம். வருத்தம். அவள் மூச்சு விட மறந்தாள்.

"நீங்கதானே? நீங்கதானே?''

நடுங்கும் கரங்களை அவன் முகத்தில் படர விட்டாள். தலைமுடியைக் கோதி விட்டாள். தாடியை வருடி விட்டாள். அவன் கைகளில் தன்முகம் புதைத்து விசும்பினாள்.

"எப்படி நான் இங்கே இருப்பேன்னு வந்தீங்க?''

"இன்னிக்கு நம்ம வெட்டிங் அனிவர்ஸரி இல்லையா?''

"ஞாபகம் இருக்கா?'' கேள்வி மீண்டும் அழுகையாக வெடித்தது.

"வா பார்கவி! இங்கே வேணாம். நாம் பேச வேறு இடம் உள்ளது.'' அவன் நிலை கொள்ளாமல் அலைக்கழிவது துல்லியமாகத் தெரிந்தது.

பழைய அம்பாசிடர் ஒன்றில் அவளை ஏற்றிக் கொண்டு, அவளுடைய பல கேள்விகளுக்குப் பதில் எதுவும் சொல்லாமல், ஜி.டி. ரோட்டின் அசிங்கம் பிடித்த சந்துகளின் வழியாக, ஒரு நீள சந்தின் கடைசியில் அம்பாசிடரை நிறுத்தி விட்டு அவளை இறங்கச் சொன்னான்.

"பாயீ! அயிட்டம் ஏரியாவுக்குப் புதுசா? வயசானது மாதிரி தெரியுது. ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு ரசனை. என்ஜாய் கரோ!'' குடிகாரன் ஒருவன் மேலே விழுந்து விட்டு விலகிப் போனான்.

"அவனை அதட்டி விட்டு பாலசந்திரன் அவளை மரப்படிகளின் வழியாக மாடிப் பகுதிக்கு அழைத்துச் சென்றான். அவன் நடையில் அசாதாரண வேகமும், பார்வையில் ஒரு பதற்றமும் தெரிந்தது. அடிக்கடி வீதியில் எட்டிப் பார்த்தபடி நடந்தான். மாடிப் பகுதி பாதி இருளில் இருந்தது. மரக்கதவு ஒன்றைத் தள்ளியபடி ஓர் அறைக்குள் நுழைந்தான். உள்ளே வேறு ஒருவன் இருந்தான். அவனிடம் பாலசந்திரன் சங்கேத மொழியில் பேசினான். பெங்காலி மாதிரி இருந்தது. அவன் உடனே வெளியில் போய் விட்டான்.

"உட்கார் பார்கவி.''

அவள் எதிரில் அமர்ந்தாள்.

"உன் அனைத்துக் கேள்விகளுக்கும் என்னால் பதிலளிக்க முடியும் பார்கவி. கேட்கும் பொறுமைதான் உனக்கு வேண்டும்.''

"சொல்லுங்கள். என் பொறுமையின் அளவு பெரியது.''

"எந்தத் தீவிரவாதத்தை எதிர்த்து நான் போர் தொடுத்தேனோ, அதே தீவிரவாதத்தில் நானும் இணைந்து விட்டேன் பார்கவி.''

"பாலா!... என்ன... சொல்றீங்க பாலா?'' கேள்வி நடுங்கியது.

"ஆபரேஷன் விக்ரம் இரண்டாவது பகுதியில் தீவிரவாதி ஒருவனின் குண்டு என் கால்களைத் துளைத்து விட்டது. இரவு




''குளிருக்கு இதமா ஜன்னல் ஓரம் வெயில்ல உட்காரலாம்னா உச்சந் தலையில் என்னமோ சுரீர்ங்குதே...''
- ஜோதி ரஞ்சன்

நேரம். அதிகமான உதிரப் போக்கு. மயக்கம். கண் விழித்த இடம் ஒரு தீவிரவாதியின் வீடு. சிறந்த அறுவை சிகிச்சை நிபுணர். அவரும் தீவிரவாதி. நவீன சிகிச்சை. பத்து நாட்கள் ஓய்வு அவசியம் என்பதால் அங்கே தங்க நேர்ந்தது. பலவிதங்களில் அவர்களைப் புரிந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்தது. அறிஞர்கள், வல்லுனர்கள், மருத்துவர், பொறியாளர் எனப் பலர் நிரம்பிய அமைப்பு."

"ஆனால் நோக்கம் ஜனநாயகத்திற்கு முரண்பாடு இல்லையா?"

"எது ஜனநாயகம்? ஜனநாயகம் ஒரு முள்கரண்டி. முதலாளிகள் அரசியல்வாதிகளின் துணைகொண்டு ஒரு சமூகத்தைச் சுரண்டித் தின்ன உதவிடும் முள்கரண்டி. மொத்த ஜனத் தொகையில் 55 சதவீதம் வாக்களிக்கிறோம். 20%, 18%, 17% என்ற கணக்கில் அரசியல் கட்சிகள் வாக்குப் பெறுகின்றன. 20% வாங்கிய கட்சி மீதி 80 சதவீத மக்களை ஆள்வது எந்த விதத்தில் ஜனநாயகமாகும்? வாழ்வின் தரம் என்பது ஒரு பொது பிரஜைக்கும், ஒரு அரசியல்வாதிக்கும் இடையில் குறைந்து கொண்டே வருகிறது. ஆயுதம் ஏந்துவதைத் தவிர வேறு நிவாரணம் இல்லை எனப் புரிந்தது. என்னை இவர்களுடன் இணைத்துக் கொண்டேன். வடகிழக்கு முழுவதும் எங்கள் சாம்ராஜ்யம். இந்தியா முழுவதும் பரவுவோம். ஆயுதம் மூலம் இந்தியாவை அரசியல் வேசிகளிடமிருந்து மீட்போம். வா! நீயும் எங்களுடன் இணைந்து விடு."

"எப்படி?" என்றாள்.

"எங்கள் அமைப்பு குடும்பங்களை ஆதரிக்கிறது. தீவிரவாதிகளின் பிள்ளைகளுக்கு நல்ல கல்வி அளிக்கிறது. நீயும் எங்களுடன் இணைந்து விடு. ஒன்றுபட்டு நாம் இந்த நச்சுப் பாம்புகளை வீழ்த்துவோம்" என்றான்.

பார்கவி அவனைக் கூர்ந்து பார்த்தாள்.

"இந்த நாட்டுக்கு உங்களை அர்ப்பணம் செய்து கொண்டதாக ஒருமுறை கூறியிருக்கிறீர்கள்."

"இப்பொழுதும் அதைத்தான் கூறுகிறேன். சார்ந்திருக்கும் அமைப்புதான் மாறுகிறது."

பார்கவி மௌனமாக இருந்தாள்.

"உனக்கு யோசிக்க இரண்டு நாள் அவகாசம் தருகிறேன். வரும் வெள்ளிக்கிழமை பழைய டெல்லி ஜி.பி.ஓ.வில் மணியார்டர் கவுண்டர் அருகில் பத்து மணியிலிருந்து பத்தே கால் வரையில் காத்திருப்பேன். வந்து விடு. உன்னைப் போல பல பெண்கள் எங்கள் அமைப்பில் உண்டு."

சொல்லி விட்டு அவளை வெளியில் கூட்டிக் கொண்டு வந்தான். மீண்டும் ஜும்மா மசூதியில் கொண்டு விட்டு அகன்றான்.

இரவு முழுவதும் உறக்கமில்லை. பார்கவி முழுமையாகத் திரும்பி விட்டதால் மிஸஸ் குல்கர்னி அதிகப்படியாக அவளைக் குடையவில்லை. பாலசந்திரனின் பழைய முகத்தின் மீது இந்தப் புதிய முகம் ஓவர் லாப் ஆனது போல் தாடியும், குழி விழுந்த கண்களும் நினைவில் வந்தன. கண்ணை மூடினால் ஏதேதோ கனவுகள்... தூங்காமலே விடிந்தது.

"உன் ப்ரோக்ராம் என்ன பார்கவி?"

## இசையும் ஒரு போஷாக்கு!

நம்மூர்க் குழந்தைகளுக்கு இலவசச் சத்துணவு இலவசச் சீருடை மாதிரி, அமெரிக்காவிலுள்ள ஃப்ளோரிடா மாநிலத்தில் இளம் தாய்மார்களுக்கு சாஸ்திரீய இசையடங்கிய சி.டிக்களையும் கேசட்டுகளையும் விநியோகிக்கத் திட்டமிட்டிருக்கிறார்களாம்! காரணம் நல்ல இசையைக் கேட்டும் கைக்குழந்தைகளின் மூளைச் செல்கள் நன்றாக வளர்ச்சியடைகின்றன என்று ஆய்வுகள் சொல்வதுதான்!

இது ஒருபுறமென்றால், அஸ்ஸாம் மாநிலத்திலுள்ள ஆர்க்கிட் மலர்ப் பண்ணையிலும் செடிகளுக்கான உரம், தண்ணீரோடு சாஸ்திரீய இசையையும் ஒலிக்கச் செய்கிறார்கள். இசை கேட்டு வளரும் செடிகளின் பூக்கும் திறன் அபாரமாக இருக்கிறதாம். இசை என்பது வாய்ப்பாட்டு மட்டுமில்லை; தபேலா, புல்லாங் குழல், சந்தூர் போன்ற இசைக் கருவிகளின் இசையையும் சேர்த்துத்தான் ஒலிக்க விடுகிறார்களாம்! 60-களில் வெளிவந்த சினிமாக்களின் காதல் பாடல்களுக்கும் ஆர்க்கிட் செடிகளிடம் ஏக வரவேற்பாம்!



''எங்க ஆபீஸ் ஹெட்கிளார்க் நேத்து ஆபீஸ ஏழு மணி வரைக்கும் தூங்கிட்டிருந்தார்!''

''அப்புறம் என்ன ஆச்சு?''

''மானேஜர் அவரை எழுப்பி ஓ.டி. எல்லாம் பார்க்க வேண்டாம்னு சொல்லி வீட்டுக்கு அனுப்பி விட்டார்!''

– மதுரை
என். உஷா தேவி

மிஸஸ் குலகர்னி கேட்டாள்.

"மேஜர் சாப்பை விட்டு இன்று ஒரே ஒருநாள் மீண்டும் ஒருமுறை இராணுவ மந்திரியுடன் ஒரு சந்திப்புக்கு ஏற்பாடு செய்து கொடுங்கள்."

பார்கவி கண்களில் கனன்ற உறுதியைப் பார்த்து விட்டு மேஜர் இரண்டு, மூன்று டெலிஃபோன் அழைப்புகள் மூலம் இராணுவ மந்திரியுடன் ஒரு சந்திப்பு ஏற்பாடு செய்து கொடுத்தார்.

இரவு முழுவதும் யோசித்து, யோசித்து மூளை கொதித்துப் போனதால் காலையில் சாப்பிடாமல் கிளம்பினாள். மேஜர் அவளைச் செயலகத்தில் ட்ராப் செய்து விட்டு, தமது அலுவலகம் சென்று விட்டார். செயலகத்தில் மந்திரியின் அழைப்புக்காக கால் மணி நேரம் காத்திருக்க வேண்டி வந்தது. பல ஞாபகங்கள் வந்தன.

ஒருமுறை ஜனாதிபதியுடன் தேநீர் விருந்துக்கு அழைப்பு வந்தது. இமயமலைப் பகுதிகளில் பாகிஸ்தானியரை லெப்டினன்டாக இருந்து பாலசந்திரன் விரட்டியதற்காக ஏற்பாடு செய்யப்பட்ட தேநீர் விருந்து. சம்பிரதாயங்களை மீறி ஜனாதிபதி மனம் விட்டுப் பேசினார்.

"அரசியலமைப்பு மூலம் நாட்டை ஆள்வதோ, குடியுரிமை காரணமாக இந்தியன் எனச் சொல்லிக் கொள்வதோ பெரிய விஷயமில்லை. பாரத மாதாவை தங்கள் உயிரைப் பணயம் வைத்து இரவும், பகலும் பாதுகாக்கும் இராணுவ வீரர்கள்தான் நிஜமான இந்தியர்கள். ஃபர்ஸ்ட் லேடி என்ற பெருமை என் மனைவிக்கு இருக்கலாம். ஒரு லெப்டினன்டின் மனைவி, ஒரு கர்னலின் மனைவி என்பது அதைவிடப் பெரிய பெருமை."

காரிடாரில் நிலைகொள்ளாமல் நடக்கத் தொடங்கினாள்.

என்ன பாலா நேர்ந்தது உனக்கு? ஆறு வருடங்களாக அலைந்து, அலைந்து தேடினேனே உன்னை ஒரு தீவிரவாதியாகப் பார்க்கவா? இஸ்ரேல், இலங்கை, ரஷ்யா, தென் ஆப்பிரிக்கா நாடுகளில் தீவிரவாதம் ஏற்படுத்தும் விளைவுகள் எவ்வளவு கொடுமையானது.

தன்னால் பாலசந்திரன் அழைப்பை ஏற்றுக் கொண்டு அவனுடன் இணைய முடியும். தனது ஆறு வருட காத்திருப்புக்கு அர்த்தமிருக்கும். அல்லது ஓர் ஒற்றனைப் போல சர்வஜாக்கிரதையாக பாலசந்திரன் இருக்கும் இடத்தைக் காட்டிக் கொடுக்கலாம். தேச விரோதச் செய்கைக்காக பாலசந்திரன் இறக்க நேரிடலாமே தவிர, தீவிரவாதம் அழியாது. ஒரு சாகசச் செயலைப் போல ஆயுதம் கொண்டு அவனை நானே அழித்து விடலாம். தனிமனித அழிவு எந்நாளும் ஒரு தொடர் பிரச்னையை அழிக்காது. தீவிரவாதம் மறையாது. அவன் தீவிரவாதம் தவறு; தீவிரவாதத்தால் எதையும் சாதிக்க முடியாது என்பதை உணர்ந்து திரும்ப வேண்டும். வருவான்.

''மிஸஸ் பார்கவி பாலசந்திரன்!'' – அழைப்பு வந்ததும் உள்ளே போனாள்.

"ஒரு தெளிவுக்கு வந்திருப்பீர்கள் மிஸஸ் பார்கவி."

"ஆமாம்."

"என்ன முடிவு எடுத்துள்ளீர்கள்?"

"கர்னல் பாலசந்திரன்..." தொண்டையை அடைத்தது. தாபம் ஸ்வாசத்தில் அதிகமானதைக் கட்டுப்படுத்திக் கொண்டு தொடர்ந்தாள்.

"கர்னல் பாலசந்திரன் இறந்து விட்டார் என்று மனப்பூர்வமாக ஒத்துக் கொள்கிறேன். இதைப் பாராளுமன்றத்தில் அறிவித்து, பத்திரிகைகளுக்கு செய்தி அளித்து விடுங்கள். இது தொடர்பான எல்லா சம்பிரதாயங்களையும் முடித்துத் தர சம்மதிக்கிறேன். இனி நான் ஒரு கர்னலின் மனைவி இல்லை. ஒரு கர்னலின் விதவை. மேற்கொண்டு கர்னல் பாலசந்திரனை நான் தேடப் போவதாக இல்லை."

உறுதிகுலையாமல் சொல்லி விட்டு நின்ற அவளைப் பார்த்து இராணுவ அமைச்சர் வருத்தப்பட்டு, "மிகவும் வருந்துகிறேன் மிஸஸ் பார்கவி" என்றார்.

வெளியில் வந்த பொழுது பார்கவிக்கு பாரம் குறைந்தது போலானது.



# ரெடிமேட் பாப்பாக்கள்!

"ஐயோ! இந்த வயதிலேயே பிளட் பிரஷரா...?"

"என்னங்க செய்ய! குடும்பச் சொத்து அது ஒண்ணுதான்!"

– இது போன்ற உரையாடல்கள் உலகில் கேட்காமலே போக வாய்ப்பு உண்டு...

'ஜீன் தெரபி' என்று உலகெங்கும் ஏகப்பட்ட பரபரப்பை உண்டாக்கி வரும் மரபுக் கூறு கிகிச்சை முறையி னால் நோயற்ற, குறையற்ற கச்சிதமான பாப்பாக்களை 'உற்பத்தி' செய்ய முடியும் என்று விஞ்ஞானிகள் அடித்து சத்தியம் செய்கிறார்கள். மரபுக் கூறுகளைப் பிரித்து வகைப்படுத்தும் பிரும்மாண்ட பணி இன் னும் நான்கு வருடங்களில் நிறை வடைந்துவிடுமாம். அதன் பிறகு ஜாலிதான். கல்யாணம் முடிந் ததும் தம்பதி நேராக டாக் டரிடம் போக வேண்டி யது. IVF எனப்படும் செயற்கை முறையில் கருத்தரிப்பு செய்து கொள்ள வேண்டியது. (இதற்கெதுக்குக் கல் யாணம் என்று சம்பிர தாய அசட்டுக் கேள்வியெல்லாம் கேட் டால் இருபத்தோராம் நூற்றாண்டில் சிறைத் தண்டனை கிடைத்தாலும் கிடைக்கலாம்!)

செயற்கை கருத்தரிப்பின் போது, கணவன் மனைவியின் உயிரணு பிளஸ் கருமுட்டை சேர்க்கையுடன் ரெடிமேட் குரோமோஸோம் (மரபணு) ஒன்றும் செலுத்தப்பட்டு மனைவி யின் கர்ப்பத்தில் கரு வளரும். கணவன் மனைவியின் இயற்கை மரபுக் கூறு காரண மாகத் தோன்றக் கூடிய நோயை எதிர்க்கும் வகையில் இந்த ரெடிமேட் மரபணு வடி வமைக்கப்பட்டிருக்கும். எனவே பிறக்கிற குழந்தைக்கு அந்நோய் தோன்ற ஆரம்பித் தால், உடனே முறியடிக்கப்படும்.

உடலின் ஒவ்வொரு அணுக் கூறிலும் இந்த மரபணு பரவும் என்பதால் பிற்காலத் தில் பாப்பாவுக்குப் பிறக்கக் கூடிய பாப் பாக்களுக்கும் பாதுகாப்பு உண்டு!

கான்ஸர் போன்ற உயிர்க் கொல்லி நோய்களிலிருந்து மனிதனைக் காக்கவல்லது இந்த 'அதிசயம் ஆனால் உண்மை' சிகிச்சை முறை. இந்த ஆராய்ச்சி விஸ்தரிக்கப்பட் டால் தோற்றத்தையும் குண இயல்புகளை யும் கூட நிர்ணயித்து, குழந்தைகளை ஆய் வுக் கூடங்களில் தயாரிக்கிற காலம் வரலாம்.

'கோபத்தில் அம்மாவை உரிச்சு வைச்சிருக்கு' என்று அப்பாக்களும் 'சோம்பேறித் தனத் தில் அப்பாவைக் கொண்டு பிறந்திருக்கு' என்று அம்மாக்களும் அலுத்துக் கொள்ள முடியாத உலகம் எத்தனை அசுவாரஸ்ய மாக இருக்கு! டப்பாவில் அடைத்து வரும் ரஸகுல்லா போல் வரிசையாக ஒரே மாதிரி பிறவிகள்!

இது ஒரு பக்கமிருக்க, இந்த ஜீன் சிகிச்சையெல்லாம் பணக்காரங்க சமா சாரம் என்பதால் ஏழைகளும் ஏழை நாட் டுப் பரம ஏழைகளும் எப்போதும் போல் குழந்தை பெற்று சேயோடும் நோயோடும் வாழ்வாங்கு வாழ்வார்கள்... இதனால் உலகில் ஏற்படக் கூடிய ஏற்றத் தாழ்வு களைக் கற்பனை செய்து பார்ப்பதெல்லாம் விஞ்ஞானிகளின் வேலை இல்லை! விஞ் ஞான மனசாட்சிகளின் காவலர்களான நன் னடத்தைக் குழுவினர்கூட (ethics committee) பிளவுபட்டு நிற்கின்றனர். உயிர் காக்கும் ஒரு கண்டுபிடிப்பை அடுத்த தலைமுறைக்கு மறுப்பதா? அல்லது விஞ்ஞான வளர்ச்சி என்கிற பெயரில் மனித குலத்தின் விதி யோடு விளையாடுவதா...?'

பயமுறுத்தும் அசுர கேள்வி இது.

தொகுப்பு: **ஜி.எஸ்.எஸ்.**

## எரி(ச்சல்) நட்சத்திரங்கள்

பைனாகுலர்களையும் டெலஸ்கோப்பையும் தூக்கிக் கொண்டு ஒவ்வொருத்தர் லோனாவாலா, கண்டாலா, கர்ஜத் என்றலைந்தார்கள் – 'லியோனிட் மீடியோர்' காட்டப்போகும் வான வேடிக்கையைக் காண! பாப்தேவ் காட் வரையில் சென்றவர்களை போலீஸ் திருப்பியனுப்பியது – அங்கே பால் தாக்கரேவும் ராஜ் தாக்கரேவும் பிரத்யேகப் பார்வையாளர்கள் என்று! ஆனால் மாலையிலிருந்தே திட்டுத் திட்டாக மேகங்கள் திரள ஆரம்பித்தன; எல்லோரும் திட்டித் தீர்த்தார்கள்; ரோஷமுள்ள வானம் அழ ஆரம்பித்து விட்டது! சிணுங்கலாகத் துவங்கி விசும்பலாக உருமாறிய போது, மொட்டை மாடியில் கூடியிருந்த கூட்டங்கள் ஒப்பாரியே வைத்து விட்டன. சிலர் நொந்து போய் அந்தாக்ஷரி விளையாட, வேறு சிலர் 'ஒன்றுமில்லாததற்கு இதுவாவது இருந்து விட்டுப் போகட்டுமே' என்று தீபாவளி மிச்சங்களான ராக்கெட், புஸ்வாணங்களை விட்டார்கள். எரி நட்சத்திரங்களைக் கண்டால் நினைத்ததெல்லாம் கை கூடும் எனத் திரண்டவர்களுக்கு, வயிற்றெரிச்சல்தான் மிச்சம்!

# திண்டாட்டத்தில் முண்டே!

## 'மாமி'யைக் காணோமே?

அரசு கஜானா காலி என்று ஒப்பாரி பாடுகிறதே என்று அதன் வாயடைக்க, வரிகளாக அள்ளி வீசியிருக்கிறது மராத்திய அரசு; நோட்டுப் புத்தகங்களுக்கு 4% விற்பனை வரி; மது பான வகைகளுக்கு 8%, பெட்ரோல், டீசலுக்கு முறையே 25%, 23% வரிகள்! இதனால் ஒரு லிட்டர் பெட்ரோல் விலை 85 பைசாவும், டீசல் 15 பைசாவும் கூடியிருக்கிறது. ஏற்கெனவே புறநகர்ப் பகுதிகளில் ஆட்டோ, டாக்ஸிகள் கொலு பொம்மைகளாய் நின்றிருக்க, டிரைவர்கள் இந்தி, மராத்தி பேப்பர்களை எல்லாம் மனனம் செய்து கொண்டிருக்கின்றனர். மறுபடியும் கட்டண உயர்வு என்றால் ஆட்டோ ஓட்டுநர்கள் துண்டைக் காணோம் துணியைக் காணோம் என ஓட வேண்டியதுதான்! உருளைக்கிழங்கு, வெங்காய வகைகளைக் கண்டும் காணாத இடத்தில் வைத்திருக்கிறார்கள்! பணப் பற்றாக்குறையால் MAMI (Mumbai Academy of Moving Images) நடத்தும் இண்டர்நேஷனல் படவிழாவையும் காணவில்லை! 'காணவில்லை' லிஸ்ட் நீண்டு கொண்டே போகிறதே?



• முண்டே

## வருகின்ற வல் வினைகள்!

கி.பி. 1999 இன்னும் பிறக்கவேயில்லை! அதற்குள் அதற்குரிய பிரச்னைகள் பிறந்து விட்டன. பெப்ரவரியில் இந்தியா வர இருக்கும் 'பாக்' கிரிக்கெட் குழுவுக்கு சிவப்புக் கம்பளம் விரிக்க பி.ஜே.பி. அரசு சொல்கிறது. அது வந்தால் இங்கே சிவப்பு ஆறு ஓடும் என பயமுறுத்துகிறது சிவசேனை! பகைவனுக்குப் பாதுகாப்பளி என்கிறார் அத்வானி; எதிரியை எதிர்த்து நில் என்கிறார் தாக்கரே! மத்திய அரசுக்குத் தலையாட்டுவதா மராத்திய அரசுக்குத் தலை ஆட்டுவதா என்ற திண்டாட்டத்தில், முண்டே நிலை தஞ்சாவூர் தலையாட்டி பொம்மையாகி விட்டது! 'கலை, இசை, விளையாட்டு போன்ற துறைகளில் அரசியல் புகக் கூடாது' என பொத்தாம் பொதுவாகச் சொல்லிவிட்டு, விருந்தாளிகளை வரவேற்கத் தயாராகிவிட்டார் முண்டே. 'பாலா சாஹேப் எதிர்க்கும் போது யாரால் தை

ரியமாக இங்கே வர முடியும்?' என மறுபடியும் உருட்டிவிட்டிருக்கிறார் ஜோஷி. ஹூம்... தலை தப்புவது தம்பிரான் புண்ணியம்தான்!

## யார் கொலையாளி?

கல்யாணில், ஒரு முதியவருக்கு இரவு நேரத்தில் நெஞ்சுவலி எடுக்க, அவரை அழைத்துக் கொண்டு அவர்



• பால் தாக்கரே



• ராஜ் தாக்கரே

மனைவியும் மகனும் தெருத் தெருவாக, ஒரு நர்ஸிங்ஹோமில் அட்மிஷன் வேண்டி அலைந்த கதை. ஆனானப்பட்ட எல்.கே.ஜி அட்மிஷன் கதைகளை எல்லாம் தூக்கிச் சாப்பிட்டே விட்டது! முதலிரண்டு இடங்கள் 'பை....பை' சொல்லிவிட, மூன்றாவதில் நிலைமை மோசமாகி, இயற்கையின் அழைப்பை ஏற்க, முதியவரை ஒரு டாய்லெட்டில் அனுமதிக்கக் கூட மறுத்துவிட்டனராம். கூட இருந்தவர்களும், இதர நோயாளிகளும் எழுப்பிய கூக்குரலில், வேண்டா வெறுப்புடன் ஓரிரவுக்கு மட்டும் அனுமதியளித்து, மறுநாளே தானாவுக்கு நோயாளியை மாற்றி விட்டார்களாம். டாக்டர் ஷெட்டியின் படுகொலை யைத் தொடர்ந்து, அறிமுகமில்லாத நோயாளியைப் பரிசோதிக்க, கல்யாணில் எந்த டாக்டரும் முன்வருவதில்லையாம்! அண்டர் வர்ல்ட்காரர்கள் ஓர் உயிரைக் குறிவைத்தார்கள்; இவர்கள் ஒரு சமூகத்துக்கே உலை வைக்கிறார்களே!

## கூட வந்தவன்

பின்னிரவு நேரம்; கசாரா செல்லும் ரயிலில் லேடீஸ் கம்பார்ட்மெண்ட்; பைகுல்லாவில் ஒரு பெண் ஏற, தொடர்ந்து ஒரு மனிதனும் தாவி ஏறுகிறான். அவள் ஒரு ஓரமாக அமர, இவன் குறுக்கும் நெடுக்குமாக அவளை நோட்டம் விட்டவாறே நடை பயில்கிறான். ஒவ்வொரு ஸ்டேஷன் வரும் போதும், இருவர் பார்வையும் வாயிலுக்குத் தாவ, ஹூம்.... ஒரு ஈ காக்கை ஏறுவதாக இல்லை! விக்ரோலியில் ஒரு பரட்டைத் தலையன் ஏற முற்பட, இவன் விரட்ட, பெண்ணுக்குக் கிலி பிடித்து விடுகிறது. 'ஜெயபாலா' நினைவிலாட, தைரியத்தை எல்லாம் திரட்டி, ''யார் நீ'' என்கிறாள். 'பெண்ணே.. நான்தான் உன் ரட்சகன்' என்று அந்த மனிதன் தன் ரயில்வே போலீஸ் அடையாள அட்டையை வெளிக்காட்ட... ஹூ லல்லல்லா... (சீ... டுயட்டெல்லா மில்லை; ஜஸ்ட்... சந்தோஷகீதம்தான்.) ஜெய பாலா விவகாரத்திற்குப் பிறகு, எல்லா ரயில்களிலும், இரவு 10 மணியிலிருந்து காலை 8 மணி வரை, பெண்களின் பாதுகாப்புக்கு, ஒரு போலீஸ் ஆபீசரைப் போட்டுவிட்டது ரயில்வே!

— ஜெயஸ்ரீ ராஜ்

87

எப்படி வேதம் நான்கோ, அத்ற்கு இருக்கும்படியான குணமும் நான்கு. வேதத்துக்குப் பொருள் காண்பதில் வேறுபட்ட ஆசார்யர்கள் கூட இந்த குணங்களை வேறுபாடில்லாமல் ஏற்கிறார்கள். அந்த குணங்களிலே முக்கியமான குணம் நித்யத்வம்.

வேதத்தினுடைய நித்யத்வத்தை பிரும்ம சூத்திரம் நிலைநாட்டுகிறது. எப்படியென்றால், சிருஷ்டிகிரமத்திலே பரமாத்மா வேதத்தை உபதேசம் பண்ணுகிறான் – பிரும்மாவுக்கு. பிரும்மா அதைப் பெற்று விசேஷமாக மரீசி முதலானவர்களுக்கும் உபதேசம் பண்ணுகிறார்.

ஹயக்ரீவ ரூபியாயிருந்து பரமாத்மா அந்த பிரும்மாவுக்கு வேதங்களை உபகரிக்கிறான். ஹயக்ரீவர் வித்யா ஸ்வரூபன். அந்த ஹயக்ரீவர் குறித்து 32 சுலோகங்கள் கொண்ட ஸ்தோத்திரத்தை அருளியிருக்கிறார் சுவாமி தேசிகன். அதன் ஒவ்வொரு சுலோகத்திலேயும் நரசிம்மனுடைய ஒரு பீஜாக்ஷரம் விழுந்திருக்கிறது – 32 பீஜாக்ஷரங்கள். நரசிம்ஹ அனுக்ரஹத்தையும் சேர்த்து நமக்குக் கொடுக்கிறது இந்த ஸ்தோத்திரம். பிரும்ம வித்யை முப்பத்திரண்டையும் விளக்க வந்தது இந்த ஸ்தோத்திரம். இந்த ஹயக்ரீவ ஸ்தோத்திரத்தைக் குழந்தைகளெல்லாம் படித்தார்களானால் நல்ல ஞானம் வரும். அதனால்தான் சிறு பிராயத்திலேயே ஹயக்ரீவ ஸ்தோத்திரத்தைச் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

ஸ்ம்ருதி பலம், புத்தி பலம், பிரதிபா... இப்படியெல்லாம் புத்திக்குப் பெயர். அந்த புத்தி நல்லபடியாக அபிவிருத்தி ஆகும் இந்த சுலோகத்தினாலே.

இப்போது ஒரு விஷயத்தைக் கேட்கிறோம்.. அதைச் சொல்வதென்றால் உடனே திருப்பிச் சொல்ல முடிகிறது. அப்புறம் இந்தத் தெருவைத் தாண்டிப் போய் விட்டால்... ஒன்றும் தெரியாது. என்னமோ கேட்டோம் – அந்த சமயத்திலே புரிந்தது: அப்புறம் எதுவும் புரியலை... – இப்படிச் சொல்வதானால் அது வெறும், சாதாரண புத்தி.

கேட்டது எப்போதும் நினைவிலே இருக்கிறது என்றால் அது ஸ்ம்ருதி. அதுவும் புத்தியினுடைய வேலைதான். அந்த ஸ்ம்ருதி பலம் நமக்கு இருக்க வேண்டும். அதற்கு



# இணையொன்றுமில்லை

ஹயக்ரீவர் அருள் வேண்டும்.

அதற்கும் மேலே ஒன்று இருக்கிறது. - பிரதிபா விசேஷம் என்று அதற்குப் பெயர்.

பிரதிபை என்பது ஒருசிலருக்குத்தான் ஏற்படும். மகான்களுக்கு ஏற்படும். ஆசார்யர் ஒரு விஷயம் சொல்கிறார். அதை ஞாபகம் வைத்துக் கொள்கிறான் சிஷ்யன். அதற்கும் மேலே, ஆசார்யர் சொன்னதற்கு விரோதமில்லாமல் புதியதாக ஒரு அர்த்தம் கண்டுபிடிக்கிறான். அது பிரதிபா விசேஷம் என்று பெயர்.

இந்த பிரதிபை விசேஷம் ஒருசிலருக்குத் தான் ஏற்படும். ஆனால், ஸ்ம்ருதி பலம் என்பது ஹயக்ரீவ கடாக்ஷத்தினாலே சித்திக் கும். அதனால்தான் பால : (சிறுவன்) என் றால் யார்...? என்று கேள்வி வரும்போது, பாஷ்யத்திலே இப்படிச் சொல்லப்படு கிறது!

கிரஹிக்கிற சக்தி இருக்க வேண் டும். ஆசார்யர் சொல்கிறபோது அதைக் கேட்டு கிரஹிக்க வேண்டும், தரிசிக்க வேண் டும்; அதற்கப்புறம் பல காலம் அதை ரக்ஷிக்க வேண்டும். இது மொத்தம் பாலனுக்கு யோக்யதை. இல்லையென்றால் அவன் பாலன் ஆக மாட்டான்; அவன் வித்யார்த்தி ஆக மாட்டான் என்று சொல்லி விட்டது சாஸ்திரம். யோக்ய தையை ஒரு பாலன் - மாணவன் அடைய ஹயக்ரீவ ஸ்தோத்திரம் கைகொடுக்கும்.

ஹயக்ரீவ ரூபியாக பரமாத்மாவே இருந்து அந்த பிரும்மாவுக்கு வேதங்களை உபகரிக்கிறான் என்பதால்தான் அந்த ஹயக்ரீவ ஸ்தோத்திரத்திலே சுவாமி தேசிகன் அவ்வளவு சிலாகித்துச் சொல்லு கிறார்.

எல்லா சாஸ்திரங்களிலேயும் பரமாசார்



யனாக பரிமளிக்கப்பட்ட ஸ்ரீமன் நாராயணன் பிரும்மாவை சிருஷ்டித்து, பிரும்மாவின் கையிலே வேதங்களைக் கொடுத்து, அவன் அதைத் தொலைத்தபோது மீட்டுக் கொடுத்து, அதுவும் போதாமல் அவன் புத்திரர்கள் மூலமாக சத்சாஸ்திரத்தை அறிவித்து, அதுவும் போதாமல் தானே வழி நின்று தத்புருஷார்த்தங்களை வெளியிட்டருளி, அதுவும் போதாதபோது அத்யாத்ம சம்பிரதாயத்தைக் குலையாதபடி நடத்தி, அதுவும் போதாதபொழுது பீஷ்மர் முதலான ஞானாதிகளைவிட்டு உயர்ந்த தத்துவங்களை எடுத்துக் காட்டி, அதுவும் போதாதபோது வியாஸாதிகளை அனுப்பிர வேசித்து பிரும்ம சூத்ரங்களையெல்லாம் வெளியிட்டருளி, அதுவும் போதாத பொழுது பரமாத்மா பாஞ்சராத்ர ஆகம சாஸ்திரங்களையெல்லாம் வெளியிட்டருளி, அதுவும் போதாதபொழுது மேகங்கள் சமுத்திரத்தில் இருக்கும்படியான உப்பு நீரை உட்கொண்டு எல்லோருக்கும் வேண்டியதான தண்ணீரை எப்படிப் பொழியுமோ அந்த மாதிரி, கடினமாயிருக்கக்கூடிய வேதக் கடலிலே மூழ்கி ஆழ்வார்களாகவும் ஆசார்யர்களாகவும் அவதரித்து அவர்கள் மூலமாக வெளியிட்டருளினான்.

இது மொத்தமும் பகவானே பண்ணுகிற காரியம்! இத்தனை காரியம் பண்ணி வேதார்த்தத்தை வெளியிடுகிறான் பரமாத்மா. அருளிச் செயல் மூலமாக அந்த வேதத்தையெல்லாம் காட்டி அருள்கிறான்.

'ஆரண நான்கின் பொருளை
ஆழ்வார்கள் ஆய்ந்தெடுத்து'

என்றார் சுவாமி தேசிகன். நான்கு வேதங்களின் பொருளையும் ஆழ்வார்கள் ஆய்ந்தெடுத்துக் கொடுத்ததனால்தான் திவ்ய பிரபந்தத்துக்குத் தனிச் சுவை. 'செவிக்கினிய செஞ்சொற்கள்' என்று பெயர் அதற்கு.

ஏன் அவை 'செவிக்கினியசெஞ்சொற்கள்?...' இன் கவி பாடும் பரமகவிகள் என்று ஏன் ஆழ்வார்களுக்குப் பெயர் வந்தது என்று கேட்டால், வேதத்தை அப்படியே நமக்கு எடுத்துக் காட்டியதனாலே தான்.

பகவானுக்கே அதனால்தான் திவ்ய பிரபந்தம் என்றால் ரொம்ப இஷ்டமாம்.

காஞ்சிபுரத்திலே கோஷ்டியிலே பாருங்கள்... முன்னதாக அருளிச் செயல் கோஷ்டி; இடையிலே பரமாத்மா; கடையிலே சமஸ்கிருத வேதம்!

## அருள்வாக்கு

**இப்போது வெளி தேசங்களிலெல்லாம் நம்முடைய ஸங்கீதமும் நாட்டியமும் பரவி வருகிறது அங்கே யுனிவர்ஸிடிகளில் இவற்றைச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்திருக்கிறார்கள். பெரிய பெரிய உலக ஸ்தாபனங்களில் நம்முடைய ஸங்கீதக் கச்சேரி வைத்துப் புகழ் மாலை சூட்டுகிறார்கள். இதிலே நமக்கு ஒரு ஆறுதல். என்ன ஆறுதலென்றால், ஆதியில் நமக்கு லோகத்தில் எதனால் பெரிய கௌரவம் இருந்ததோ அந்தப் பாரமார்த்திகமான பெருமை இப்போது ரொம்பவும் எடுபட்டுப் போய், மற்ற தினுஸிலும் பெருமை இல்லாமல் எல்லா தேசங்களிடமும் நாம் கப்பரை நீட்டுவதாகவும் அதிலே போட்டு உபகரிப்பவர்களிடமும் நம் ஸ்தானத்துக்கு மீறி 'உபதேசம்' பண்ணி அவர்கள் நம்மை நன்றியில்லாதவர்கள் என்று மட்டமாய்**

சமஸ்கிருத வேதம் இருக்கிறதே, அது பகவானைத் தேடுகிறது; பகவானோ திவ்ய பிரபந்தத்தைத் தேடுகிறான்! தமிழ் மறைக்கே இருக்கும்படியான விசேஷம் அது! ஏழை, எளியவர் – எல்லோருக்கும் புரிகிறதல்லவா...

கடினமாக ஒரு விஷயத்தைச் சொன்னால் – ஒரு மணி நேரம், இரண்டு மணி நேரம் சொல்லிக் கொண்டிருந்தால் கூடப் புரியாது. அதையே எளிய வகையிலே எல்லோரும் புரிந்து கொள்ளக்கூடிய முறையிலே வேதார்த்தத்தைத் தமிழ்ப்படுத்தி, எல்லோருடைய வாக்கிலேயும் ரஸமாக வருகிறபோது எல்லோரும் அனுபவிக்க பிராப்தமாகிறது.

அதனால்தான் பகவானுக்கு ஆழ்வார் வாக்கிலே அவ்வளவு இஷ்டம். ஏனென்றால் அதில் கமழும் வேத மணம் – நிகம பரிமளம்! நிகம பரிமளம் என்றால் வேதத்தினுடைய சுவாசனை! அது ஒவ்வொரு பதத்திலும் ஒவ்வொரு அக்ஷரத்திலும் விளங்குகிற காரணத்தினாலேதான் அந்த அருளிச் செயல். ஆழ்வார்களுக்கு எதனால் ஏற்றம் என்றால் அவர்கள் வாக்கினாலே ஏற்றம். அதில் உதித்த திவ்ய பிரபந்தத்தினாலே அவர்களுக்கு ஏற்றம்.



நினைக்கும்படியாகவும் காரியங்கள் நடந்து வருகின்றன. இப்படியிருக்கிறபோது நம்முடைய ஸங்கீத, நாட்டியக்காரர்களை அவர்கள் ரொம்பவும் கொண்டாடி, 'இந்தியாவில் உள்ள இந்தக் கலைகளைப்போல எங்கேயுமில்லை' என்று கற்றுக் கொள்வதற்கு முன் வருவதைப் பார்க்கும்போது, 'நாம் பிக்ஷாபாத்ரம் நீட்டுபவர்களாக மட்டுமில்லாமல் அவர்களுக்குப் போடுபவர்களாக இருக்கிற கௌரவம் இது ஒன்றால்தானே நமக்குக் கிடைத்திருக்கிறது?' என்று ஆறுதல் ஏற்படுகிறது.

கலை என்பதற்காகவே பரவட்டும்; பரப்பட்டும்; ஸந்தோஷம்தான். ஆனாலும் ஆதியிலிருந்து இந்தக் கலைகளுக்கு எது லக்ஷ்யமாயிருந்ததோ அது மறந்து போகுமாறு விட்டு விடக் கூடாது. ஈச்வரனிடம் கொண்டு நிறுத்துவதற்காகத்தான் இவை ஏற்பட்டிருக்கின்றன என்ற நினைப்பு போகக் கூடாது. சரபோஜி போன்ற ராஜாக்கள் கேட்டுக் கொண்டால்கூட, ராஜஸதஸில் போய்ப் பாடுவதில்லை. 'நிதி வேண்டாம்; ஈச்வர ஸந்நிதிதான் வேண்டும்' என்று வைராக்யமாயிருந்த தியாகையர்வாள் போன்ற மஹான்களின் 'ஐடியல்' எப்போதும் நினைவில் இருக்க வேண்டும். சாந்த ஸௌக்யத்தைத் தானும் அடைந்து, மற்றவர்களும் அடைவிக்கப் பண்ணுவதாகவே காந்தர்வ வேதத்தை உயர்த்தி வைத்துக் காத்துக் கொடுக்க வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

ஸ்ரீமன் நாராயணன் பிரும்மாவை சிருஷ்டித்து அவன் கரங்களிலே வேதத்தைக் கொடுத்ததைச் சொல்ல ஆரம்பித்து தமிழ் மறைக்கு வந்து நிற்கிறேன். வேதத்தின் குணமான நித்யத்வத்துக்கு வருவோம்.

அந்தப் பிரளய காலத்திலேயும் அவன் எல்லாவற்றையும் ரக்ஷிக்கிற மாதிரி வேதங்களையும் ரக்ஷிக்கிறான்.

சாஸ்திரத்திலே சொல்லப்படுவது என்னவென்றால் – சப்தங்களுக்கெல்லாம் அழிவு உண்டு என்பது! எல்லா சப்தமும் அழிந்து போகும் என்கிறது சாஸ்திரம். ஆனால் வேத சப்தத்துக்கு மட்டும் அழிவு கிடையாது. ஏனென்றால் பகவானோடு கூடவே அது அவனுடைய மூச்சுக் காற்றாக இருப்பதனாலே, அது அழிவதில்லை. அதைத் தன்னுள்ளே காத்து, மறுபடி சிருஷ்டி கிரமத்திலே அதை உபதேசம் பண்ணி வெளியிடுகிறான் பரமாத்மா.

இப்போது சொல்லுங்கள்.... வேதத்தை நாம் ரக்ஷிக்கிறோமா? பகவான் ரக்ஷிக்கிறானா...? பகவான்தான் ரக்ஷிக்கிறான்!

நாம் ஏதாவது சொல்ல வேண்டும் என்று நினைத்தால் வேதத்திலிருந்துதான் சொல்ல வேண்டும். அவன் நமக்கு ஏதாவது சொல்ல வேண்டும் என்றாலும் வேதத்திலிருந்துதான் சொல்வான். நம்மையும் அவனையும் சேர்த்து வைப்பது அந்த வேதம். அதனால் தான் நமக்கு வேதம் எவ்வளவு முக்கியமோ, பகவானுக்கும் அது அவ்வளவு முக்கியம். அதனால்தான் அதை அவன் ரக்ஷிக்கிறான்.

அதனால்தான் நித்யத்வம் என்கிற குணம் வாய்க்கப்பெற்றதாய் வேதம் இருக்கிறது.

தர்க்க சாஸ்திரர்கள் சும்மா இருக்க மாட்டார்கள். நித்யத்வம் என்றால் என்ன...? என்று கேட்பார்கள்.

வடிவுடன் வேதம் நித்யமாக இருக்கிறதா?

இயற்கையிலேயே அது நித்யமாக இருக்கிறதா?

கால வெள்ளோட்டத்திலே அது நித்யமாக இருக்கிறதா...?

இந்த மூன்றிலேயும் அது நித்யமாக இருக்கிறதா?

இருக்கிறது என்பதே பதில். எப்படி என்பதை அடுத்த வாரம் சொல்கிறேனே....

(தொடரும்)

# சீதா ரவி

"நெத்தியில் பட்டை பட்டையா விபூதி. இரண்டு கையிலயும் இரண்டு தேங்காய் மூடி வைச்சுண்டிருந்தார்... கொல்லைப் பக்கம் கதவண்ட நிழலாடறதேன்னு திரும்பிப் பார்த்தேன்டா ராமு... அப்படியே சிலிர்த்துப் போச்சு! அரிசி புடைச்சுண்டிருந்தவ, முறத்தைக் கீழே போட்டுட்டுப் படபடன்னு கன்னத்துல போட்டுண்டேன். கண் சிமிட்டற நேரத்துல ஒரு சிரிப்புச் சிரிச்சுட்டு மறைஞ்சுட்டார்..."

சாக்ஷாத் சுப்ரமண்ய சுவாமிதான் தனக்கு தரிசனம் கொடுக்க அந்த மத்தியான வெயிலைப் பொருட்படுத்தாமல் பழநியிலிருந்து இறங்கி நடந்து வந்ததாகப் பாட்டி நம்பினாள். எட்டு வயது வரையில் நானும் நம்பினேன்.

அதன் பிறகுதான் நம்பிக்கைகள் தகர்ந்து விழுந்து அசௌகரியமான பகுத்தறிவுக் கேள்விகள் என்னைக் கஷ்டப்படுத்த ஆரம்பித்தன.

"போ பாட்டி! மனுஷாள் கண்ணுக்கெல்லாம் சாமி தெரியாது!" என்று ஒன்பது வயதிலும், "உனக்கு வேற வேலை இல்ல... ஏதாவது கனவு கண்டுட்டு நிஜம்னு நினைச்சுப் பேத்துவே..." என்று பதினைந்து வயதிலும், "ஆமாம்! கையில இருந்த தேங்காய் மூடியை வாங்கித் தொகையல் அரைக்கலியா...?" என்று பத்தொன்பது வயதிலும் "சரி, சரி! சீக்கிரமா சோத்தைப் போடறியா?" என்று இருபத்திரண்டு வயதிலுமாக என் பதில்கள் பரிணாம வளர்ச்சியுற்றன.

பாட்டி காலமான பிறகு எல்லாமே நிழலாகக் கரைந்து போயிற்று. அதாவது, போய்விட்டதாக நான் நினைத்துக் கொண்டிருந்தேன்–தியாகராஜனின் பாட்டைக் கேட்கும்வரை.

முதல்முறையாகக் கேட்டபோதே தோன்றிவிட்டது, ஜன்மம் எடுத்ததே இதற்காகத்தான் என்று!... 'உயிரைக் கொடுத்துப் பாடினான்' என்று சொன்னால் போதாது. உயிரையும் கடந்த ஓர் ஒளி எனக்குப் புலப்பட்டது அவன் முயற்சியில். சுத்தம் என்றால் அப்படியொரு சுருதி சுத்தம். உணர்ச்சியும் பாவமும் ஒவ்வொரு ஒலித் துளியின் கடைசிச் சொட்டு வரையிலும் விகசித்தன. 'கசிந்துருகினேன், என்னை மறந்தேன்' என்று சொல்வது வெறும் வார்த்தையாகிவிடும். அந்த சங்கராபரணமும்



அதன் ஸ்வரங்களும்கூட உதிர்ந்து போன ஓர் அதி சௌந்தர்ய மோன நிலை அது.

– கச்சேரி முடிந்து அந்தக் குட்டி அரங்கம் ஏறக்குறைய காலியான பிறகும் நெஞ்சு விம்ம உட்கார்ந்திருந்தேன். தியாகராஜன் சபா செயலருடன் வெளியேறியபடி சட்டென்று திரும்பி என்னைக் கவனித்தான்.

# தரிசனம்



என்னையறியாமல் கரங்கள் குவிந்தபோது சாக்ஷாத் அந்த சுப்ரமண்ய சுவாமியைப் பார்ப்பது போலிருந்தது!

இருபத்தைந்து வயதுதான் இருக்கும். தியாகராஜன் எப்போதும் வெள்ளைதான் உடுத்தினான். நெற்றியில் விபூதியின் அலட்சிய தீற்றல். நடுவாந்திர நிறம். கண்களில் வேல்முனை மின்னல்.

பாட்டியைப் போல் நான் படபட வென்று கன்னத்தில் போட்டுக் கொள்ள வில்லை. ஆனால் தியாகராஜனின் கச்சேரிகளுக்கு ஒன்று விடாமல் போனேன். முதல் அனுபவம், ஏதோ ஓர் அபூர்வ உயர்நிலை என்று ஒதுக்கிவிட முடியாதபடி அவன் திரும்பத் திரும்பத் தன்னை நிரூபித்து வந்தான். என்னைப் பார்த்த மாத்திரத்தில், புன்னகை செய்யும் அளவுக்கு என் முகமும் அவனுக்குப் பரிச்சயமாகிப் போனது.

ஒருமுறை, முதல் வரிசையில் அமர்ந்திருந்த எனக்கு, வயலின் வித்வானுடன் வந்த சிஷ்யன் மூலம் செய்தி அனுப்பினான் தியாகராஜன் :

"மைக் பாலன்ஸிங் சரியா இருக்கான்னு உங்ககிட்டே கேட்டுட்டு வரச் சொன்னார் தியாகு சார்..."

எனக்கு அப்படியே சிலீரென்று ஆகிவிட்டது. அடடா! எத்தனை நம்பிக்கை இருந்தால் எல்லாரையும் விட்டு விட்டு என்னிடம் வந்து இந்தக் கேள்வியைக் கேட்பான்...? எழுந்து போய், அரங்கில் ஸ்பீக்கர் இருந்த மூலைகளிலெல்லாம் நின்று உன்னிப்பாக கவனித்து, சிஷ்ய பையனிடம் திருப்தி தெரிவித்து அனுப்பினேன்.

இந்த அனுபவத்துக்குப் பிறகு தியாகராஜன் என்னைத் தேடி வந்து கேட்கும் அளவுக்கு வைத்துக் கொள்ளாமல், நானே ஒலிபெருக்கி அமைப்புச் சீராயிருக்கிறதா என்று கவனிக்க ஆரம்பித்தேன். கூட - குறைய இருந்தால் சீட்டு எழுதி மேடைக்கு அனுப்பி விடுவேன். அவனும் மைக்காரரைக் கூப்பிட்டுப் பேசி சரிசெய்து கொள்வான்.

பரஸ்பர நம்பிக்கைக்கும், கிட்டத்தட்ட இருபத்தைந்து வருட வயது வித்தியாசத்தைக் கடந்த ஓர் அலாதியான நட்புக்கும் இந்த ஒலிபெருக்கிச் சரிபார்ப்பு வழிவகுத்தது. அவன் சங்கீதம் குறித்தும், அது என்னுள் ஏற்படுத்திய பாதிப்புகள் குறித்தும் அவனிடமே நேருக்கு நேர் தெரிவிக்க முடிந்தது. அப்படித் தெரிவித்த கணங்களிலெல்லாம் பாட்டி முன் பிரத்தியட்சமான அந்த வீரவேல் முருகன்தான் என் கண்ணுக்குத் தெரிந்தான்.

ஒரு சந்தர்ப்பத்தில் தியாகராஜனிடமே சொல்லி விட்டேன் - "உன்னைப் பார்த்தா அந்த சுப்ரமண்ய சுவாமியையே பார்க்கிற மாதிரி இருக்குடாப்பா..."

பெரிதாகச் சிரித்து விட்டான். என்ன மனோநிலையில் இருந்தானோ தெரியவில்லை. "ஏன் மாமா! சங்கீதம்ன்றது என்ன...? After all, it is vicarious pleasure. இன்னொருத்தர் படற கஷ்டத்தால நமக்கு ஏற்படுற சந்தோஷம். அவ்வளவுதான்... இதுல முருகன் எங்க வந்தார்...?"

கொஞ்சம் வருத்தமாகத்தான் இருந்தது. ஆனால், என் மனக்கோயில் அவ்வளவு சுலபத்தில் தகர்ந்து போகக்கூடியதல்லவே. அதனால் பொறுமையாகப் பதில் சொன்னேன்.

"அப்படி ஒதுக்கித் தள்ளிடாதே தியாகு. உன் வயசுல நானும் இப்படித்தான் இருந்தேன்..." என்று பாட்டியின் அனுபவத்தைச் சொன்னேன். அதைக் கேட்டு நான் சிரித்து, கேலி செய்த நாட்களைச் சொன்னேன்.

தியாகராஜன் வெகுவாக ரசித்துக் கேட்டாலும் தன் அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டதாகத் தெரியவில்லை - அந்த மறக்க முடியாத புயல்தினம் வரை...

அது கார்த்திகை மாதத்தின் பின்பகுதி. சரியாகச் சொல்ல வேண்டுமானால்

டிசம்பர் பதினோராம் தேதி. அந்த ஆண்டுக்கான இறுதிப் புயல் சின்னம் வங்கக் கடலில் கோபத்துடன் குடியேறியிருந்தது. அடை மழையானாலும் தியாகுவின் கச்சேரியை விடுவேனா... அரை மணி முன்னதாகவே போய்ச் சேர்ந்து விட்டேன்.

அந்த மழையிலும் அரங்கம் நிரம்பி விட்டது. கச்சேரி தொடங்க ஐந்து நிமிடங்களே இருந்த போது தியாகராஜன் கவலையுடன அரங்க வாசலில் வந்து எட்டிப் பார்த்தான்.

"என்ன தியாகு...?"

"தம்பூரா மூர்த்தி வரல்லை... மழையில எங்கியாவது மாட்டிண்டு..."

வினாடி பிசகாத கச்சிதத்துடன் கச்சேரியை ஆரம்பிக்கும் வழக்கம் அவனுக்கு.

"எனக்குக் கொஞ்சம் பழக்கம் உண்டு... உனக்கு ஆட்சேபணையில்லைன்னா கச்சேரியை ஆரம்பிச்சுடு. மூர்த்தி வர்றவரைக்கும் நான் தம்பூரா போடறேன்."

"ரொம்ப தேங்க்ஸ் மாமா...." என்று அவன் என் கைகளைப் பிடித்துக் கொண்ட போது காற்று ஒரு சுற்றுச் சுற்றி மழைச் சாரலை எங்கள் பக்கம் திருப்பி விட்டது.

தியாகராஜனின் பின்னால் அமர்ந்து, அவனுக்காகத் தம்பூராவை மீட்டியபோது என் உணர்வுகள் எப்படி இருந்திருக்கும் என்று எண்ணிப் பாருங்கள். அந்த மீட்டலுடன் என் உள்ளத்தின் பெருமிதமும், நிறைவும், கனிவும், நன்றியும் தந்திகளாகிச் சங்கமித்தது போல் உணர்ந்தேன்.

என்னைச் சமனப்படுத்திக் கொள்வதற்குள் தியாகராஜன் தோடி வர்ணத்தை முடித்து, ஆபோகி ஆலாபனை பண்ண ஆரம்பித்திருந்தான். அப்போதுதான் அதைக் கவனித்தேன். எதிரே... மேடையை நோக்கி இலேசாக முகம் நிமிர்த்திய ஜனக் கூட்டம். அத்தனை முகங்களிலும் எதிர்பார்ப்பு கலந்த பரவசம். தியாகராஜனின் ஆலாபனை வளர்ந்து வடிவம் கொள்ள, அந்த முகங்களின் பரவசமும் கூடவே வளர்ந்தது. முத்தாய்ப்பை எட்டியபோது ஆனந்தத்தில் தத்தளித்தது. அந்தக் கணத்தில்...

ஒரு மனித சமுத்திரத்தின் அலைகளைக் கட்டுப்படுத்தும் சங்கீத சர்வாதிகாரி என்கிற புதிய பரிமாணத்தில் தியாகராஜன் எனக்குப் புலனானான்.

ஆபோகியை மறந்தேன்; தில்லை சபாபதியை மறந்தேன், கோபாலகிருஷ்ண பாரதியாரை மறந்தேன்... தியாகராஜனின் தனிமனித ஆற்றல் மட்டுமே தெரிந்தது. ஹா! இந்த அதிகார பலம்! இது அளிக்கும் கர்வம் எத்தகையதாக இருக்க வேண்டும். பார்க்கின்ற எனக்கே போதையூட்டுகிற இது, அனுபவிக்கிற அவனுக்கு எப்படியிருக்கும்! இந்தக் கிரக்கம்தான் vicarious pleasure என்று பேச வைக்கிறது போலும்...

அதன் பிறகு தியாகராஜன் அன்று என்ன பாடினான் என்பது தெரியாது. அந்த முகங்களையே நான் பார்த்துக் கொண்டிருந்தேன்.

தியாகராஜன் என் வீடு வரை தன் காரிலேயே அழைத்துப் போனான். இறங்கும் சமயம், சொல்லாமல் இருக்க முடிய வில்லை :

"அந்த முகங்கள், அவற்றை நீ படுத்தி வைக்கும் பாடு – எல்லாவற்றையும் இன்று பார்த்தேன். சங்கீத சர்வாதிகாரி நீ..."

அவன் விதிர்விதிர்த்துப் போனான். "ஐயோ! அப்படியெல்லாமில்லை... நீங்க ரொம்பத் தப்பா எடை போட்டுட்டேள்..." என்றான்.

"பின்னே...?"

"அங்க போய் உட்கார்ந்தாச்சுன்னா தம்பூரா சுருதியைத் தவிர இன்னொண்ணு காதுல கேட்காது. பாடற பாட்டைத் தவிர வேறொண்ணும் கண்ணுக்குத் தெரியாது..."

அவன் முகத்தில் வீசிய உண்மை ஒளி அந்த அரையிருட்டைக் குலைத்தது. சத்தியம் செய்வது போல் என் உள்ளங்கையில் வலக்கரத்தால் அழுத்தினான். அந்த அழுத்தமே விசையானது போல் குழப்பத் திரைகள் அகன்று உண்மை புலப்பட்டது. இந்த முழுமைதான் அவனை எனக்கு முருகனாக்கிக் காட்டியிருக்கிறது. பாட்டி கொல்லைப் பக்கத்துப் படியில் பார்த்த சுப்ரமண்ய சுவாமி! அவள் கண்ட தரிசனம் எந்த நிறைவின் அடையாளமோ? – அது அவள் இதயச் சுரங்கத்துக்கே வெளிச்சம்!

என் சிந்தனை கலைய நேரம் கொடுத்துப் பொறுமையுடன் காத்திருந்தான் தியாகராஜன். தீர்க்கமான பார்வையுடன் அவன் விடைகொடுத்தபோது திரும்பவும் சொல்லி விட்டேன்:

"உன்னைப் பார்த்தால் சுப்ரமண்ய சுவாமி மாதிரி இருக்கு..."

இம்முறை தியாகராஜன் முழுமையாய்ப் புன்னகை செய்து தலையசைத்தான். ●

# புண்ணிய காரியங்களை
# ஸங்கிராந்தியில்
# ஏன் அனுஷ்டிக்க வேண்டும் ?



மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரமமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் சூரிய பகவான்.

ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப் புண்ணிய காலங்களில் செய்கிற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம், முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் சூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

தேவலர் : ஸங்கராந்தி சமயம் சூட்க்ஷமமானது. நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸங்கரமணத்திற்கு முன்பு முப்பது பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குப்பலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்திராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மேஷம் | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயனம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுசு | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

- ஸம்க்ஷேப தர்மசாஸ்திரம்

# வெள்ளிப் பனி மலையின் மீதுலவினோம்...

**சி**ன்ன வயதில், பூகோளப் புத்தகங்களில் சுவிட்ஜர்லாந்தைப் பற்றி படிக்கும் போதெல்லாம், பனிச் சறுக்கல் விளையாட்டுகள் இரவில் கனவாய் வந்து கிளுகிளுப்பூட்டும்.

அந்தக் கனவு நனவாக மாறும்போது ஏற்படும் இன்பமிருக்கிறதே, அதை உணர்த்துவதற்கு, புதிதாகத்தான் வார்த்தைகளைத் தேடிப் பிடிக்க வேண்டும்!

மத்திய ஸ்விட்ஜர்லாந்திலிருக்கும் 'மவுண்ட் டிட்லிஸ்' எனும் 'க்ளேஸியர் பாரடைஸ்', நவம்பரில் இரண்டு மூன்று வாரங்கள் தவிர, வருடம் முழுவதும் திறந்திருக்கும்.

''காமிராவை எப்போதும் தயார் நிலையில் வைத்திருங்கள்; ஓர் அழகிய காட்சி கண்ணில் பட்டால், உடனே 'க்ளிக்'கிடுங்கள்; நீங்கள் காமிராவை அட்ஜஸ்ட் செய்யுமுன், அந்தக் காட்சியை, தவழ்ந்து வரும் மேகம் மறைத்துவிடும்; நான் இரண்டு மாதத்துக்கொரு முறை இங்கே வருகிறேன். ஆனாலும் அலுப்பதேயில்லை. ஏனென்றால், ஒவ்வொரு முறையும் ஒரு புது அழகு, புது விருந்து...'' - லூசரேய்னில் துவங்கி, இங்கில்பர்க்கை வந்தடையும்வரை, மனசுக்குள் எதிர்பார்ப்புக் கலந்த படபடப்பை, மரியா ஏற்றிக் கொண்டே வந்தார்.

''ஸ்விஸ்காரர்களின் தொழில் நுட்ப அறிவு உலகிலேயே மிகச் சிறந்த ஒன்று. அதனால் பயமே இல்லாமல் நீங்கள் பயணிக்கலாம்...'' என்று அவர் அடிக்கடி எங்களை தைரியமூட்டியது எதற்காக என்று அங்கு சென்ற பின்தான் தெரிந்தது.

'இங்கில்பர்க்' ஒரு குட்டி ஹில் ஸ்டேஷன்'; அதிலிருந்து மவுண்ட் டிட்லிஸ், 10,000 அடி உயரத்தில் இருந்தது! முதலில் கேபிள் காரில், 5,900 அடி உயரத்திலிருக்கும் 'ட்ரப்ஸ'க்கு சென்றுவிட்டு, பின்னர் அங்கிருந்து பிறிதொன்றில் 'ஸம்மிட் ஸ்டேஷன்' அடைய வேண்டும்!

கோண்டோலாஸ் (Gondolas) எனப்படும் கேபிள் கார்கள்,



• பனி மலையில் விளையாடினோம்...

**8 ஹைர ஹைர ஹைரோப்பா**



• கோண்டோலாஸ்....

ஜெயஸ்ரீ ராஜ்

480 கிலோ தாங்கக் கூடிய ஆறு நபர்கள் அமரத்தக்க, தானியங்கிக் கதவுகள் கொண்ட, குட்டி டெம்போவைப் போலிருந்தன. அந்தரத்தில், ஒரு நீண்ட தடிமனான டயர் கயிறு போன்ற அமைப்பில், இவை மெதுவாக ஊர்ந்து செல்வதைப் பார்த்தால் கதிகலங்கும்!

பழனியிலுள்ள விஞ்சில் ஒருமுறை ஏறிவிட்டுப் பட்டபாடு அந்த பழனியாண்டவனுக்குத்தான் தெரியும்! உ.பி.யிலுள்ள மானஸா தேவி கோயிலுக்கும் இதுபோன்ற விஞ்சில் சென்றுவிட்டு, பாதிவழியில் மின்வெட்டு வந்து, அது அந்தரத்தில் அம்போ கதியாய் அரை மணி நேரம் நின்றிருந்த அனுபவத்தை நினைத்தால் குலை நடுங்கும். இப்போது 10,000 அடி உயரத்திலா...?

பேயறைந்த முகத்துடனிருந்த பலரிடம், மரியா மீண்டும் மீண்டும் ஸ்விஸ் நாட்டின் உயர்ந்த தொழில் நுட்பத்தைப் பற்றி உறுதியளித்துக் கொண்டேயிருந்தார்.

தொழில் நுட்பமாவது ஒன்றாவது? விதியில் பெருவலி யாவுள? எங்கேயாவது ஏதாவது கோளாறாகி அல்லது அத்தனை உயரத்தில் கையைக் காலை இழுத்துக் கொண்டால்... மூச்சுத் திணறினால்... நடுவழியில் எங்கே நிறுத்துவது? எந்த டாக்டரை எப்படி எங்கிருந்து அழைப்பது? பிறவிப் பிணி தீர்க்கும் மருத்துவன் ஒருவன்தான் அங்கே அழைத்தால் வரக் கூடிய நிலையிலிருந்தான்!

'க்ளோசப்'பில் பார்த்தால்... உண்மையில் கோண்டோலா நகரவேயில்லை! இரண்டு பக்க முடிவிலும் பூதாகரமான சக்கரங்கள் சுழல, அவற்றைச் சுற்றி பெல்ட் போன்ற இணைப்புகள். அவற்றில் ஆங்காங்கே

• மேகம் தவழ்ந்தும் கலைந்தும்...

• உயரத்தில் உள்ள டிட்லிஸ"க்குச் செல்லும் வழி...



கோண்டோலாக்கள் தொங்கின. பெல்ட் சுழலும்போது அதிலுள்ள கேபின் கார்களும் நகர்வது போல் தெரிந்தன. நடுவில் பெல்ட் அறுந்து விட்டால்... ஏதாவது பறவை இடையில் வந்து சிக்கினால்... வேண்டாத கற்பனைகள் உதறலெடுக்க வைத்தன.

ஆஸ்திரேலியப் பெண்மணி சிலுவையிட்டு, 'நொவீனா' சொல்ல ஆரம்பித்து விட்டார். அமெரிக்கத் தாத்தா, மனைவியிடம், "என்ன... பரவாயில்லையா? உனக்குச் சரிப்படுமா?" எனத் திரும்பத் திரும்பக் கேட்டு, தமக்குச் சரிப்படாது என்பதைச் சொல்லாமல் சொல்லிக் கொண்டிருந்தார்.

ஒவ்வொரு நாட்டின் பெயரைத் தாங்கிக் கொண்டு ஒவ்வொரு கோண்டோலாவாக வர, 'எனக்கு யு.எஸ்.ஏ', 'எனக்கு மெக்ஸிகோ' என்று இளசுகளிடையே போட்டா போட்டி!

அவர்கள் உற்சாகத்தைக் கடன் வாங்கி, பயங்களை சுத்தமாக யூரோக்ளீன் செய்து விட்டு, நம்மெதிரே வந்து நின்ற 'ஜெர்மனி'யில் ஏறிக் கொண்டோம்!

கோண்டோலா நகரத் துவங்க... ஆல்ப்ஸ் மலைகளின் கம்பீர அழகு பார்ப்பவர்களைக் கட்டிப் போட்டது; 'மஞ்சுகண் துஞ்சும் இஞ்சியுரிஞ்சி உதயனும் உடல் சிவந்தனனே' என்ற மனோன்மணீய வரிகள் நினைவில் தாக்கின. அதை கோண்டோலாவில் பயணித்தவாறே பேராசிரியர் சுந்தரம் பிள்ளை எழுதியிருப்பரோ என்ற திடீர்ச் சந்தேகம்!

பளீரிடும் வெள்ளியை உருக்கி ஆடையாக்கிக் கொண்டிருந்த மலைகள், கோட்டையின் பெருமிதத்துடன் எழுந்து நின்றன; அதன் உச்சியில் உறங்கும் வெண் மேகக் கூட்டங்கள்; அதில் உராய்ந்து, உடலை இளம் சிவப்பாக்கிக் கொண்ட சூரியன்! கீழே விரிந்திருக்கும் பச்சைக் கம்பளம்! பச்சையில் தான் எத்தனை வகை? இளம்பச்சை, கரும் பச்சை, மஞ்சள் பூசிய பச்சை என்ற நம்மூர் வகைகள், ஆலிவ் க்ரீன், பாட்டில் க்ரீன், பிஸ்தா க்ரீன் போன்ற அந்த ஊர் வகைகள். சுற்றிலும் காவலர்களாய் எழுந்து நிற்கும் உயர்ந்த மரங்கள்... காணக் காண திகட்டாத காட்சிகள்; கீழே மேய்ந்து கொண்டிருந்த மாடுகளின் கழுத்தில் கட்டப்பட்டுள்ள மணிகளின் கிண்கிணி நாதம், அந்த அமைதியில், அத்துணை உயரத் தூரத்திலும் துல்லியமாகக் கேட்டது.

"கேம்ப்பெல் (Campbell) ஆர்கெஸ்ட்ராவை ரசிக்கத் தவறாதீர்கள்; இந்த 'போவைன்' (bovine) ஆர்கெஸ்ட்ரா முன் பீதோவன் மியூசிக் கூட ஒன்றுமில்லை என்றாகிவிடும்" என மரியா இதைத்தான் அடிக்கடி நினைவுறுத்திக் கொண்டிருந்தார்.

ரஹ்மான் அங்கே ஒரு விஸிட் அடித்து விட்டு வந்தால் அடுத்த படத்தில், இந்த மணி ஓசையை வைத்துக் கொண்டே ஒரு முழுப் பாடலையும் இசையமைத்து விடுவார்!

சிறிது நேரத்தில், "ஸம்மிட் ஸ்டேஷனை" அடைந்து விட்டோம் - ஒரு வரவேற்பறை, ஒரு பத்திரிகைகள் கடை, ஒரு ரெஸ்டாரண்ட், ஒரு ஃபோட்டோ ஸ்டுடியோ - ஸ்விஸ் மலைவாசி ஆடைகளைப் போட்டுக் கொண்டு ஒரு நிமிடத்தில் ப்ரிண்ட் எடுக்கலாம் (எடுத்துக்கலாமா? இப்போ பார்த்தாலும் மலைவாசி மாதிரி தானே இருக்கு?).

இவற்றைத் தாண்டி, எங்களுக்கென்று காத்திருந்த பனிச் சரிவுகளை நோக்கி ஓடினோம்.

அதன் பிறகு, இரண்டு மணி நேரம் போனதே தெரியவில்லை! 'ஐஸ்' பந்துகளைச் செய்து, தூக்கிப் போட்டுப் பிடித்து, த்ரோபால் விளையாடி, அங்கிருந்த ப்ளாஸ்டிக் முறம் போன்ற ஒன்றில் உட்கார்ந்து, சர்ரென்று சறுக்கி, 'ஆ'வென்று அலறி, மற்றவர்களுக்கு ஃபோட்டோ எடுக்க உதவி, நாமும் எடுத்துக் கொண்டு, இயற்கை தந்த அந்த தன்னிகரற்ற செல்வத்தில், மூழ்கி மூழ்கி அனுபவித்துத் திளைத்து... இத்தனை நேரம் 'ஐஸில்' இருந்தோமே? கர்ச்சீஃப் கூட ஈரமாகவில்லை! ட்ரை ஐஸ்!

அமெரிக்கத் தாத்தா பாட்டிக்கு இரண்டாவது ஹனிமூன்தான்! முதல் ஹனிமூன் ஜோடிகள் ஐஸ் கட்டிகளை 'ஷர்ட்', 'கோட்'டுக்குள் போட்டு, ஜிலுஜிலுத்துக் கொண்டிருந்தன! 'நல்லவேளை, நான் கல்யாணமே செய்து கொள்ளவில்லை!' என்று



**குரங்குகளுக்கு ஒரு பாலம்!**

இப்பாலம் தைவான் நாட்டில் ஒரு நெடுஞ்சாலைக்கு மேல அமைக்கப்பட்டுள்ளது. நெடுஞ்சாலையை கடக்க முயன்ற பல குரங்குகள் வாகனங்களால் அடிபட்டு இறந்து கொண்டிருந்ததால் ஒரு பிரபல சுற்றுச் சூழல் நிபுணர் மூலம் குரங்குகளுக்காக ஒரு பாலம் அமைத்துள்ளனர் தைவான் காரர்கள். தகவல் : ஆல் இந்தியா ரேடியோ; - நா. ராஜேஷ்

எப்போது பார்த்தாலும் மார்தட்டும் ஆஸ்திரேலிய இந்தியர், இப்போது மட்டும் வாயே திறக்கவில்லை! ஸ்பானிஷ் இளைஞன்? 'பனி படர்ந்த மலையின் மேலே, படுத்திருந்தேன் சிலையைப் போலே...' எனப் பாட வேண்டியதுதான் பாக்கி. மல்லாந்து படுத்து, வானத்தை 'மனப்பாடம்' செய்து கொண்டிருந்தான்.

"போதுமா? வருகிறீர்களா?" என்று மரியா மன்றாடிக் கொண்டிருந்தார்; 'ஏதாவது சாப்பிடுகிறீர்களா?' என்றதும், கோரஸாக "நோ" தான்! அந்த நேரத்தை இங்கேயே கழிக்கலாமே! கண்ணுக்கு விருந்தில்லாத போது தானே சிறிது வயிற்றுக்கும் ஈய வேண்டும்!

மனமேயில்லாமல், திரும்பத் திரும்ப பார்த்துக் கொண்டே, அந்த வெள்ளிப் பனி மலைகளிடம் பிரியா விடை பெற்றோம். திரும்பும் போது, 'Rotair' ல் பயணம்; சுழலும் இந்த கேபிள் கார்கள், 75 பயணிகளை ஒரே சமயத்தில் ஏற்றிக் கொள்ளும். இது ஆல்ப்பின் அழகுகளை நேர்கோடாக மட்டுமின்றி, வட்டவடிவாகவும் ரசிக்கும் வாய்ப்பைத் தந்தது.

கண்ணாடிக் கதவின் அருகில் 'ஜில்'மலைகள்; அதைத் தொட்டுக் கொஞ்சும் மேகங்கள்; திடீர் திடீரென்று அவற்றில் பட்டுச் சிதறும் பொன் ஒளிக் கதிர்கள் (ஸன் க்ளாஸஸ் போடாவிட்டால் கண்ணைப் பறித்து விடும்). அதைத் தொடத் துடிக்கும் நெஞ்சங்கள்.

**மீ**ண்டும் கோண்டோலாப் பயணம். ஆவினங்களின் கழுத்து மணி ஆர்கெஸ்ட்ரா, வஞ்சமில்லாமல் இனிமையை வாரி இறைத்திருக்கும் நேர்த்தி...

ஹும்! போதும் போதுமென்று ஸ்விஸ் மக்கள் கதறும்வரை இயற்கை எழிலை அள்ளி வழங்கிவிட்டு, மிச்ச மீதியை ஏனைய நாடுகளுக்குப் பங்கிட்டிருப்பாரோ கடவுள் என்று கூட நினைக்க வைத்தது!

டிட்லிஸை விட்டு பத்தாயிரமடி கீழே இறங்கியும் கூட, மனம் அந்த உயரத்திலேயே சஞ்சரித்தது. அதன் பின், உலகின் மிக நீண்ட டன்னலான 'கோத்தார் பாஸ்' வழியாக, லுகானோ வந்தடைந்தோம்! அந்தக் காலத்தில் நாட்கணக்காகியிருக்கக் கூடிய பயணத்தை அரை மணி நேரத்தில் முடிக்க, இந்த பதினொரு மைல் நீள ரோட் டனல் (சுரங்கம்) உதவியது!

**லு**கானோ ஏரிக்கரையில் கொஞ்சம் 'ஷாப்பிங் ப்ரேக்' கிடைத்தது. அழகிய ஊர்; கொடைக்கானல் ஏரியை நினைவு படுத்திய காட்சிகள்; கரையை ஒட்டி நிறைய கடைகள். நாங்கள், ஸ்விஸ் மாடுகள் கட்டிக் கொண்டிருந்த, 'தில்வாலே துல்ஹனியான் லே ஜாயேங்கே'வில் நடித்திருந்த, அந்த விசேஷ 'மணி'யை பேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

'எதுக்கிதெல்லாம்? உங்க கழுத்துல கட்டிக்கவா?' என்று முனகிக் கொண்டிருந்த ஆண்களின் கவனத்தை, தவறான 'பார்க்கிங்'குக்கென்று ஒரு மனிதரை 'லபக்'கிய பெண் போலீஸ் திசை திருப்பினார்.

## சர்ச்சில் அடித்த ஜோக்!



புதிதாக வடிவமைத்துத் தயாரிக்கப்பட்ட விமானம் ஒன்றின் சோதனை ஓட்டத்தில் 60 பார்லிமெண்ட் உறுப்பினர்களை ஏற்றிச் செல்ல வின்ஸ்டன் சர்ச்சிலிடம் அனுமதி கேட்டார்கள்.

சர்ச்சில் மறுத்து விட்டு இப்படிக் கூறினார்: ''ஒரே சமயத்தில் அறுபது உப தேர்தல்களை நடத்த நேர்ந்தால் அதை நாடு தாங்காது!''

– கோவி. இராஜேந்திரன்

நம்மூர் போல, ஏதாவது வாங்கிக் கொண்டு விட்டு விடுகிறாரா என இவர்கள் ஆர்வத்துடன் பார்க்க, விட்டாரே அந்த நபர் முகத்தில் ஓர் அறை! உள்ளேயிருந்து ஏதோ பாட்டிலை வேறு ஆட்டி ஆட்டிப் பேசிக் கொண்டிருந்தார். அந்தக் கணேபரத்தில் 'டக்' கென்று பத்து ஸ்விஸ் ஃபிராங்குகள் கொடுத்து, மணியை வாங்கி விட்டோம்!

இன்னும், எங்கள் வரவேற்பறையில் அது சிணுங்கும் போதெல்லாம், சுவிட்ஜர்லாந்து நினைவுகள் வந்து சிறகடிக்கும்!

அன்றிரவு, லுகானோவில், ஹோட்டல் பீஹா என்ற அரண்மனைத்தனமான விடுதியில் தங்கினோம். அறைகள் எண்கோண வடிவத்தில்; பாத்ரூம் ட்ராயிங் ரூம் சைஸில்! டவல்கள் மெத்தைகள் சைஸில்! ஷவர் கேப்பில் லேஸ் பூக்கள் வேறு! கட்டணமும் மெகா சைஸ்தான்! இரவைக் கழித்துவிட்டு, மறுநாள் 'வெனிஸ்' நோக்கிப் பயணமானோம்.

(தொடரும்)



• மேகா

# பெங்களூரிலிருந்து ஒரு மேகம்!

● அகத்தியன் இயக்கும் 'காதல் கவிதை' படத்தில் பிரகாஷ் ராஜுக்கென்று தனித்துவமான கேரக்டர் ஒன்று இருந்தது. பிரகாஷ் ராஜ் பிசு பண்ண, அந்த வாய்ப்பு தலைவாசல் விஜய்க்கு போனது. இந்திராஜா என்ற தெலுங்கு நடிகைக்கு கிளாமர் கேரக்டர் வாய்ப்பு ஒன்று வந்தது. இந்திராஜா கவர்ச்சி காட்ட இஷ்டமில்லை என்று மறுக்க, கஸ்தூரிக்குக் கிடைத்தது அந்த வாய்ப்பு. ஒரே ஒரு பாட்டுக்கு டான்ஸ் ஆட முடியுமா என்று சிம்ரனைக் கேட்டார்கள். சிம்ரன் மறுக்க, ரோஜா 'காதல் கவிதை'யில் ஒரே ஒரு பாடல் காட்சியில் மணம் வீசப் போகிறார்!

● ஆடு வளர்ப்பார்கள். கோழி வளர்ப்பார்கள். ஆனால், ஜெயராமோ யானை வளர்க்கிறார். கேரளத்துக்காரர் என்பதால் யானை மீது அவருக்கு அவ்வளவு பிரியம் என்று நினைத்து விடாதீர்கள். எல்லாம் பிஸினஸ்தான். பெங்களூரில் யானைக் குட்டிக்கு மவுசு இல்லாததால் அங்கே யானைக் குட்டியின் விலை மகா குறைவு. சீப்பான விலைக்கு யானைக் குட்டியை வாங்கி கேரளத்தில் வளர்த்து அதிக விலைக்கு விற்று அமோக லாபம் பார்க்கிறார் ஜெயராம். யானை வளர்ப்பதற்காகவே கேரளத்தில் நாற்பது ஏக்கரில் தென்னந்தோப்பு ஒன்றையும் வாங்கிப் போட்டிருக்கிறார்.

● முதல் கட்ட படப்பிடிப்பிற்குப் பின் 'மருதநாயக'த்தின் இரண்டாம் கட்ட படப்பிடிப்பு இப்போது நடைபெற்றுக் கொண்டிருக்க வேண்டிய நேரம் இது. ஆனால், அடுத்து மருதநாயகத்தின் படப்பிடிப்பு எப்போது என்பது தெரியாமலேயே படப்பிடிப்பு தள்ளிப் போடப் பட்டிருக்கிறது. இதற்கிடையில் 'மருதநாயக'த்துக்காக வளர்த்த தாடியையும், முடியையும் துறந்துவிட்டு பக்கா கமர்ஷியல் படமொன்றில் கமல் நடிக்க முடிவெடுத்திருக்கிறார்.

● 'சிம்மராசி' தமக்கு சிரமம் கொடுத்து விட்டது என்று நினைத்தாரோ என்னவோ, வாஸ்து சாத்திரம் பார்த்து வீட்டை இடித்து ரீ-கன்ஷ்ட்ரக்ஷன் பண்ணிக் கொண்டிருக்கிறார் சரத்குமார். அந்த நேரமோ என்னவோ பிரிந்து போன சரத்தின் மனைவி சாயா இப்போது சரத்தின் வீட்டில். அதோடு ஏற்கெனவே ஒப்பந்தமான டைரக்டரையும் மாற்ற ஆரம்பித்திருக்கிறார்.

● 'குரு பார்வை'யில் இந்து, ஈஸ்வரி ராவோடு மூன்றாவதாக நடித்திருக்கும் புது முகத்தின் பெயர் மேகா. பெங்களூர்ப் பெண்ணான இவரை சென்னைக்குக் கொண்டு வந்தவர் மோகன். ஆனால், அறிமுகப்படுத்தியிருப்பவரோ மனோஜ் குமார். இருந்தாலும் மேகாவை விட்டுவிடவில்லை மோகன். தாம் இயக்கி தயாரிக்கும் 'அன்புள்ள காதலுக்கு' படத்தின் இரு நாயகியரில் ஒருவராக்கி விட்டார். மோகன் புண்ணியத்தில் ஆஸ்திரேலியா வரை போய் விட்டு வந்திருக்கும் மேகாவின் நிஜப் பெயரே மேகாதான். 'அன்புள்ள காதலுக்கு' படத்தில் ரசிகாவோடு சேர்ந்து போட்டி போட்டுக் கவர்ச்சிக் காட்சிகளில் கலக்கியிருக்கிறாராம். ○

— மஹேந்த்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /98* Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka